

# மண்?

**ம**ண்.
இதிலிருந்துதான் எல்லாமே.
செடியும் கொடியும், பூவும் பிஞ்சும்
அக்காவும் தம்பியும், அண்ணனும்
தங்கையும்
தந்தையும் தாயும் எல்லாமே.
நம் கனவுகளுக்கு இந்த மண்ணின்
வண்ணத்தைத்தான் குழைத்துப்
பூசியிருக்கிறோம்.
இந்த மண் வாசனைதான் நமது
வியர்வையாய்க் கசிந்து உருகுகிறது.
வானமும் கூட இந்த மண்ணைத்தான்
பிரதிபலித்துக் கொண்டிருக்கிறது.
ஆனால் இந்த மண்ணையும்,
மண்ணின் அடையாளங்களையும் நவீன
மனிதன்
அடைகாத்து கொண்டிருக்கின்றானா?
அவனுக்கு மண்ணை
அடையாளப்படுத்தும் விதமாகத்தான்
இந்தச் சிறப்பிதழ்!

– ஆசிரியர்க் குழு



கல்கி இன்டர்நெட் முகவரி : www.kalkiweekly.com
ஈ மெயில் : kalkiweekly@vsnl.com



■ சுப்ர. பாலன்

# மண்ணைப்பற்றி!

'வந்தே மாதரத்'தைத் தமிழில் பாடியபோது கவியரசு வைரமுத்து, தாயோடு 'மண்'ணையும் சேர்த்துக்கொண்டு வணக்கம் சொன்னார்.

தமிழில் மண் அத்தனை சிறப்பு வாய்ந்தது. தாயோடு உவமித்ததால் 'பூமாதேவி'யாகவே வணங்கி மகிழ்கிறோம். ஆங்கில வழக்கிலும் 'மதர்லேண்ட்'தான்.

மண் வேறு, மணல் வேறு. ஆங்கிலத்தில் SOIL, SAND என்பார்கள். மண் என்பது விளைநிலம். மணலில் ஏதும் விளைவதில்லை. ஆனால் மண் என்கிற கலவையில் மணலும் நிரம்ப உண்டு. உலகில் இருந்த, இருக்கும் பாறைகள், கற்கள், இமயம் கூட ஒருகாலத்தில் பொடிப் பொடியாய்த் தூளாகி மணல் வடிவம்தான் பெறும்.

பூமிப் பந்தை மண் என்கிற கூட்டுக் கலவை மூடியிராவிட்டால் மனிதகுலம் என்றோ அழிந்திருக்கும் என்பார்கள். பயிர்கள் வளர்ந்து நமக்கும் மற்ற உயிரினங்களுக்கும் உணவு தருவதே இந்த மண்தான்.

மண்ணின் அமைப்பை மூன்று அடுக்குகளாய்ப் பகுக்கலாம்; மேல் மண், நடு மண், அடிமண் என்று! கிராமப்புறங்களில் வேளாண் நிலங்களில் தண்ணீர் கட்டி, அதைப் பெரும் அளவு நிலம் உறிஞ்சியபின், மேல் மண் ஈரம் காயாத போது வெண்ணெயை விட மிருதுவாக இருக்கும். ஓர் இலைத் தளிரின் கனமே உள்ள இதில் தாவரங்களும், உயிர் இனங்களும் மக்கிப் பொடிந்த கலவை, நுண்ணுயிர் (பாக்டீரியா)களின் திருப்பணியால் உருவாகியிருக்கும். மண் புழுக்களும், பலவிதமான சிறு உயிர்களும் இதை மேலும் வளமுடையதாக்கி விடும். இந்த மக்கிப் போன சத்துப்பொருளைத்தான் 'ஹியூமஸ்' என்று சொல்வார்கள். இந்த ஹியூமஸ் என்பது மேல் மண்ணில் ஒரு சிறு பகுதிதான்.

ஆற்றின் ஓட்டத்தில் வழியில் உள்ள தாவரம், விலங்குகளின் எலும்பு போன்ற துகள்களை எல்லாம் அடித்துக்கொண்டு வரும் போது, வண்டல் மண் படியும். இந்த மண் வேளாண்மைக்கு மிகவும் உகந்தது.

அடுத்த அடுக்கு, பொடிக்கற்கள் நிறைந்திருக்கும். மூன்றாவது, எங்கும் பொதுவாகக் காணப்படுகிற தரை. இதை BEDROCK என்பார்கள்.

விளைச்சல் தருகிற இந்த மேல்மண் வெகு சுவாரஸ்யமானது.

சுவையானதுகூட எனச் சொல்ல வேண்டும். மண்ணைத் தின்கிற பழக்கம் நம் ஊர்க் குழந்தைகளிடம் நிறைய உண்டு. இதற்கு வழிகாட்டியவன் கோகுலத்தில் ஆட்டம் போட்ட குழந்தைக் கண்ணன். அவனுடைய வாயில் யசோதை பார்த்த மாதிரி காட்சிகளை இப்போதும் காண முடிந்தால் படு சுவாரசியமாக இருக்குமே!

மணலைப் பற்றியும் ஒரு சுவையான தகவல் உண்டு. போன நூற்றாண்டின் ஆரம்பத்தில் ஜெர்மனியில் தேங்காய் நார்க்கயிறுகளைச் சேமித்து வைத்திருந்த ஒரு கிடங்கில், தரையில் மஞ்சள் நிறத்தில் மினுமினுப்பாய் ஒரு துகள் படிந்திருப்பதைப் பார்த்தார்கள். துகளைச் சோதித்துப் பார்த்த வேதியியல் அறிஞரான ஸ்காம்பெர்க் என்பவர், அந்தத் துகள் மோனஸைட் என்கிற தாதுப்பொருள் என்பதைக் கண்டு பிடித்தார். தோரியம் என்கிற கதிரியக்கப் பொருள் இந்த மோனஸைட்டில் ஏராளமாக உள்ளது. அப்புறம்



• 22.300 மைல் தொலைவிலிருந்து எடுக்கப்பட்ட பூமியின் படம். நன்றி: நாஸா

கயிறு எங்கேயிருந்து வந்தது என்று துருவினால், நம்முடைய தென்னிந்தியாவின் தென் மேற்குக் கடற்கரையோரப் பகுதியிலிருந்து இறக்குமதியானது தெரிந்தது.

அப்புறம் இந்தியா விடுதலை பெறுகிறவரை மோனஸைட் ஏற்றுமதி நடந்தது. கன்னியாகுமரி மாவட்டத்து மணவிளக்குறிச்சியில்தான் முதலில் மோனஸைட் எடுக்க ஆரம்பித்தார்கள். தேசம் விடுதலையான பிறகு, மோனஸைட் ஏற்றுமதி தடை செய்யப்பட்டது. அணு சக்தித் துறையின் ஓர் அங்கமாக 'இந்தியன் ரேர் எர்த்ஸ் லிமிடெட்' என்கிற ஓர் அமைப்பு, அரிதான தாதுப் பொருள் ஆய்வுக்காக உருவானது என்று தொடர்கிறது இந்த மண்ணின் கதை!

பூமியின் மேற்பரப்பில் தினமும் டன் கணக்கில் வானத்திலிருந்து நுண்துகள்கள் படிந்து கொண்டே இருக்கின்றன. 'காஸ்மிக் டஸ்ட்' எனும் இந்தத் தூசுப் படிவத்தின் மூலம் பூமியின் வளமும் கூடிக்கொண்டே போகிறது! ○

# கிராமம்!
# சென்னைப் ~~பட்டணம்~~

சென்னையும் கிராமமாக இருந்தால் எப்படியிருக்கும்? நமது ஏக்கத்தை ஓவியர் மனோகரிடம் சொன்னோம். ஐகோர்ட் பகுதியையும், மயிலாப்பூர் பகுதியையும் அவர் தூரிகை கிராம மாக்கியதைத்தான் பார்க்கிறீர்கள். (இப்படித்தாங்க சந்தோஷப்பட வேண்டியிருக்கு!)





# ஸ்டாலினை நீக்க சட்டத்திருத்தம்!

## - சாத்தியம்தானா?

''மேயர் பதவியா, எம்.எல்.ஏ பதவியா? எதை வைத்துக் கொள்வதென்று ஸ்டாலின் விரைவில் முடிவெடுக்க வேண்டியிருக்கும்'' என்று சட்டமன்றத்தில் முதல்வர் ஜெயலலிதா கூறியதையடுத்து டென்ஷனிலிருக்கிறார்கள் தி.மு.க.வினர்.

முதல்வர் சொன்னது போல் ஒருவருக்கு ஒரு பதவிதான் என்று வரையறுத்துச் சட்டம் இயற்ற முடியுமா...?

''தமிழக அரசு கொண்டு வர இருப்பதாகச் சொல்லும் சட்டத்தை நீதிமன்ற பரிசோதனையில் நியாயப்படுத்துவது கடினமே'' என்கிறார் அரசியல் சட்ட வழக்கறிஞர் கே.எம். விஜயன்.

''உள்ளாட்சி அமைப்புகளில் ஒருவர் தேர்ந்தெடுக்கப்படுவது குறித்த விஷயத்தை இரண்டு முறையில் அணுக வேண்டும். அரசியலமைப்பு சட்டத் திருத்தம் 73 மற்றும் 74 வருவதற்கு முன்னால், வந்த பிறகு என்று பிரித்துப் பார்க்க வேண்டும். வருவதற்கு முன்னால் உள்ளாட்சி தேர்தல் தொடர்பான முழு அதிகாரங்கள் மாநில அரசின் சட்ட ஆளுகைக்கு உட்பட்டு இருந்தது. ஆனால் அரசியல் சட்டத் திருத்தம் 73, 74 வந்த பிறகு, உள்ளாட்சி மற்றும் மாநகராட்சி அமைப்புகள் அரசியல் சாசன அங்கீகாரம் பெற்றுவிட்டன. இதன்படி ஐந்து ஆண்டுகளுக்கொரு முறை தேர்தல் நடத்தியே ஆக வேண்டும். இந்தக் காலகட்டத்தை மாற்ற மாநில அரசுக்கு எந்த அதிகாரமும் இல்லை.



• விஜயன்

''மேயராகப் போட்டியிடும் ஒருவர் 21 வயதானவராக இருக்க வேண்டும். தாம் வசிக்கும் பகுதியில் வாக்காளர் பட்டியலில் பெயர் இடம் பெற்றவராக இருக்க வேண்டும்; அவ்வளவுதான். அவர் சட்டமன்ற உறுப்பினராக இருப்பது என்பது மேயராகத் தேர்ந்தெடுக்கப்படுவதற்கு, இப்போதுள்ள சட்டப்படி, எந்த விதத்திலும் தடையாக இல்லை. எனவே அவருடைய தேர்வை ஒரு சட்டத் திருத்தத்தின் மூலம் ரத்து செய்ய முடியாது. இப்போதுள்ள அரசியல் சட்ட திருத்தத்தின் அடிப்படையில், ஒரு எம்.எல்.ஏ அல்லது எம்.பி உள்ளாட்சி மன்ற கூட்டங்களில் கலந்துகொள்ள உரிமை இருக்கிறது; வோட்டளிக்க முடியும். அந்த வகையில் பார்த்தாலும், தமிழக அரசு கொண்டு வர நினைக்கும் சட்டம், ஏற்கெனவே உள்ள அரசியல் சட்டத் திருத்தத்துக்கு முரணானதாகத்தான் இருக்கும்.

''ஒரு குறிப்பிட்ட பதவிக்கான தகுதியின்மையை மக்கள் பிரதிநிதித்துவ சட்டம்தான் நிர்ணயிக்க முடியுமே யொழிய மாநில அரசு சட்டத்திருத்தத்தால் அதைச் செய்வது ஏற்புடையதாக இருக்காது. மேலும், இச் சட்டத் திருத்தம் அரசியல் சாசனத்தில் அளிக்கப்பட்ட உரிமையின் கீழ் வருவதால், அதை நிறைவேற்ற குடியரசுத் தலைவர் ஒப்புதல் தேவை'' என்கிறார் விஜயன்.

- கௌசி



சங்கரத்தாழ்வார்



# குக்கிராமத்தில் ஒரு நாள்!

மின்னணுக் கடிகாரத்தின் இன்னிசை அலார ஒலிக்கு அவசியமில்லாமல் சேவல் கூவும் முன்பே, உடல்கடிகாரம் உசுப்பி எழுப்ப, அதிகாலை ஐந்து மணிக்குத் தொடங்கி, உழைத்துக் களைத்து இரவு உறக்கம் கொள்கிறவரை ஒரு கிராமத்துப் பெண்ணின் ஒரு நாள் வாழ்க்கையை, அருகிருந்து பார்த்துத் திரும்புவதே நமது பயணத்தின் நோக்கம்.







இதற்காக நாம் தேர்ந்து கொண்டது, செங்கல்பட்டு நகரிலிருந்து இருபத்தொன்பது கிலோ மீட்டர் தொலைவில், கப்பிச் சாலைகளைக் கூட கண்டறியாத 'ஆனாம்பாக்கம்' எனும் சின்னஞ்சிறு விவசாயக் கிராமம்.

புலர்ந்தும் புலராத அதிகாலைப் பொழுதில் இங்கொன்றும் அங்கொன்றுமாக எங்கோ ஒளிந்தபடி இரவுப் பூச்சிகள் கிரீச்சிட்டு கிடக்க, நெல்லும், கரும்பும், சவுக்கும் வழிநெடுகிலும் வாசமாய் நாசியைத் துளைக்க, கிராமங்கள் பல கடந்து, ஆனாம்பாக்கம் எல்லைக்குள் அமைதியாய் நுழைகிறோம்.

தைப் பட்டத்தில் நடவு செய்யப் பட்ட முற்றிய நெற்பயிர் வயல்களிலிருந்து, கரக்... கரக்.. என்ற ஒத்திசை நம் காதுகளை எட்டுகிறது. அந்த மம்மல் பொழுதில், முண்டாசுத் தலையோடு அரைவட்டக் கதிர் அரிவாளை வலக்கையில் ஏந்தி இடக்கையில் நெற்கதிர்களின் தட்டைகளை லாகவமாய் இறுக்கிப் பிடித்து ஆண்கள் அறுவடை செய்து கொண்டிருந்தார்கள். இப்போது, குடிசை வீடுகள் கொஞ்சமாய்ப் புலப்பட நடக்கிறோம். குறுகலான தெரு எதிர்ப்படுகிறது. 'பிளக்..' 'பிளக்..' கரைத்த சாணத்தை வாசலில் தெளிக்கும் சப்தம். அதிலும் கூட தாளம் பிசகாத இசை... உறுத்தாத சாணத்தின் மணம்...

மனத்தை நிறைக்க, சாணம் தெளித்துக் கொண்டிருந்த பெண்மணியை நெருங்கு கிறோம். அவர் நாம் வருவதைக் கவனியாமல், காரியத்தில் தீவிரமாய் இருக்கிறார். அவர் தெளித்து முடித்து கடைசியாய்க் கையில் அள்ளித் தெளிக்க முடியாது எஞ்சிய கொஞ்ச சாணத் தண்ணீரை அலுமினியப் பாத்திரத்தி லிருந்து வாசலில் விசிறியடிக்க... அப்போது மிகச் சரியாக எதிரில் போய் நின்ற நம் புகைப் படக்காரரின் சட்டையில் கொஞ்சமாய் அபி ஷேகம்!

"ஐய்யய்யோ... மன்னிச்சுக்கங்க... ஐயா... இருங்க கழுவ தண்ணீர் எடுத்து வாரேன்" என்று படபடத்தவரைத் தடுத்து நிறுத்தினோம். அவர் ஜெயசுதா.

வந்த விஷயத்தை அவரிடம் சொன்னதும், அவர் வாயெல்லாம் கொள்ளைச் சிரிப்பு... "கடவுளே நம்ம ஊர்லே டீ கடை கூட கிடை யாதுங்களே!" என்று நம்மை உபசரிக்க முனைந் தவர், வாசலிலேயே படுத்திருந்த தமது ஆட்டில் அவசரமாய்ப் பால் கறந்து, நமக்காக "டீத் தண்ணி" போட்டுக் கொடுத்து விட்டு, நாம் பருகும் அழகைப் பார்த்தபடியிருக்கிறார். "நீங்க குடிக்கலியே" என்கிறோம்.

"நமக்கு இதெல்லாம் சரிப்படாதுங்க. நீச்சத் தண்ணிதான். காலையிலே எழுந்ததுமே எங் களுக்கெல்லாம் அதான் டீத் தண்ணி, காப்பித் தண்ணி எல்லாம். எப்போவாச்சும், விருந்தாளி வேக்காளி வந்தா, நல்ல நாளு, விசேஷம்னா டீத்தண்ணி போடுவோம்... கொஞ்சம் உட் காருங்க. பைப்புலே தண்ணி நின்னுரும், குடிக் கத் தண்ணி புடிச்சிட்டு வந்துடுறேன்" என்ற படி குடத்துடன் ஓட்டமும் நடையுமாகத் தெருவில் இருந்த குடிநீர்க் குழாய் நோக்கி விரைந்தார். தலையில் ஒரு குடமும், கக்கத்தில் ஒன்றும் சுமந்தபடி ஐந்து நிமிடத்தில் அவர் திரும்பி வருவதற்கும், கூரையின் மோட்டு வளையிலிருந்து சேலைத் தூளியில் தூங்கிக் கொண்டிருந்த அவரது குழந்தை அழவும் சரி யாக இருந்தது. "போன வருஷம்தாங்க கல்யா ணமாச்சு. இது பொண்ணு. ஜெயஸ்ரீன்னு பேரு வெச்சிருக்கோம். வூட்டுக்காரர் அறுப்புக்குப் (அறுவடைக்கு) போயிருக்காரு. பழனி மலமேல இருக்காரே அந்த சாமி பேருதாங்க... (முருகன்) அவருக்கும்" என்றபடி காலை நேர வீட்டு வேலைகளில் சுறுசுறுப்பாக இயங்க ஆரம்பித் தார்.

கொல்லைப்புறமிருந்த தென்னை மரத் தூரில், எல்லாப் பாத்திரங்களையும் குவித்து, அடுப்புச் சாம்பல் கொண்டு துலக்கி முடித்த வர், அதே சாம்பலால் தமது பற்களையும் துலக்கி முடித்துவிட்டு, கட்டுத்தரியில் படுத் திருந்த பசுங்கன்று நோக்கி நடந்தார். அங்கே கிடந்த சாணங்களை எடுத்து வந்து குழை வாய்க் கரைத்துக் கொண்டு, கூரையில் காய்ந்து கிடந்த பழந்துணியொன்றை சாணத்தில் நனைத்தெடுத்து வீட்டுத் திண்ணையை மெழுக ஆரம்பித்தார்.

"செவ்வாய், வெள்ளி தவறாம வீடு, திண்ணை, வாசல்னு மொழுகிடுவேன். இந்த மாதிரி கோடையிலே வாசல்லதான், பாய் விரிச் சுப் படுப்போம். இந்த சாணத்துக்குப் பாம்பு, பூச்சி, பொட்டுன்னு எதுவும் நெருங்காது" என்று விளக்கம் தந்தபடி நம்மைக் கயிற்றுக் கட்டிலில் அமரச் சொல்கிறார். அடுத்த ஐந்தா வது நிமிடம், கக்கத்தில் கூடையும் கையில் அரி வாளுமாக வெளிப்பட்டார் ஜெயசுதா. நாம் விளங்காமல் அவரைப் பார்க்க, அவரே விளக் கம் தந்தார்.



"வீட்டுக்காரருக்குச் சாப்பாடு கொண்டு போற துக்கு முன்னாடி பசுங் கன்னுக்குக் கொஞ்சம் புல் அறுத்துப் போட்டுட்டுப் போவணுங்க. இல்லேன்னா பசியிலே துடிச்சிப் போயி டும்" என்றபடி அருகிலிருந்த வயல் வரப்புக்களை நோக்கி வேகமாய் நடக்கிறார். புற்கள் செழித்திருந்த வரப் பொன்றில் பட்டென்று அமர்ந்து, புல் அறுக்கத் தொடங்கிய சில நிமி டங்களில் சட்டென்று கூடை நிரம்பியது. பசுங்கன்றுக்குப் புற்களைப் போட்டுவிட்டு, கணவருக்குச் சாப்பாடு எடுத்துக் கொண்டு புறப்பட்டார், ஜெயசுதா. பக்கத்து வீட்டுப் பாட்டியிடம் "மகளைப் பார்த்துக்க ஆத்தா" என்று உரிமையாய் ஒப்படைத்து விட்டு நடந் தார்.

தலையில் சாப்பாட்டுக் கூடை. கையில் நீண்ட கயிறோடு அவரை அண்டிப் பிழைக்கும் ஆடு – அவருக்கு முன்பாக வரப்பில் நடக்கிறது. இரண்டு வயல்கள் கடந்ததும் ஒரு நிலக்கடலை வயல். வயலின் ஓர் ஓரத்தில் முளைக்குச்சியை தரையில் பதித்து, கயிற்றுடன் ஆட்டை அதில் கட்டிப் போட, கயிற்றின் நீளத்திற்கு தக்கபடி நகர்ந்த ஆடு, கடலைச் செடியை ஆர்வமாய்த் தின்னத் தொடங்கியது. நமக்கு ஆச்சர்யம்!

"கடலை வயலில் மேய விட்டால் நிலத் துக்குச் சொந்தக்காரர் உங்களையும், உங்கள் ஆட்டையும் பஞ்சாயத்தில் நிறுத்தி விட மாட் டாரா என்ன?" நமது சந்தேகத்தைக் கேட்டே விட்டோம்.

"அடுத்த வாரம் புடுங்கப் போற கடலை. அதுல மேய விட்டா ஒன்னும் சொல்ல மாட் டாங்க... மகசூலு பூமிக்கு அடியிலேதானே இருக்கு. பூக்குற பருவத்துலேயும், காய்க்கிற பரு வத்துலேயும்தான் ஆடு மாடு நீண்டக் கூடாது" என்று நமக்குச் சின்னதாய் வகுப்பெடுத்தார்.

அங்கிருந்து ஒரு பர்லாங் தூரத்தில் ஜெய சுதாவின் கணவர் அறுவடை செய்து கொண்டி ருந்த வயல். வயலை எட்டியபோது காலை பத்து மணி. கதிர்களை முழுவதுமாய் அறுத்து முடித்து விட்டு சக விவசாயத் தொழிலாளர் களோடு வரப்போர மரநிழலில் ஓய்வெடுத்துக் கொண்டிருந்த முருகன் முகத்தில் உணவோடு வரும் மனைவியைக் கண்டதும் மலர்ச்சி.

இது காலை உணவல்ல. மதிய உணவுமல்ல.



இரவு சாப்பாட்டுக்கு முன் சாப்பிடும் ஒரு வேளை உணவு. ஜெயசுதா வைப் போலவே, தத்தம் கணவன்மார்களுக்கு மனைவியர் உணவோடு வந்து சேர, கரு வேல மர நிழலின் கீழே, எழுதப் பட்டிருக்கும் மண் வாச னைக் கவிதைகளைப் போல சாப்பிடத் தொடங்குகிறார்கள். மனைவி பாசமாய் ஊற்றிக் கொடுக்கும் கேழ்வரகுக் கூழுக்குப் பச்சை வெங்காயமும், மாங்காய் ஊறுகாயும் தொட்டுக் கொண்டு உறிஞ்சி உறிஞ்சிக் குடிக் கிறார்கள்.

"ராத்திரி ஒருவேளைதாங்க அரிசிச் சோறு. அப்புறம் இந்தக் கேப்பக் கூழுதான்." வெள் ளந்தியாகச் சிரித்தபடி சொன்னார் ஜெயசுதா. கொஞ்ச நேரத்தில் அடிகளத்தில், கத்தைக் கத் தையாய்க் கையில் பிடித்து அடிக்கப்படும் நெல் மணிகளோடு வியர்வைமணிகளும் தெறித்து விழுகின்றன. நெல் உதிர்ந்த வெற்றுக் கதிர்களை, ஜெயசுதாவும், இன்னும் சில பெண்மணிகளும் வைக்கோல்போராய் உருவாக்குகிறார்கள்.

இப்போது கதிரிலிருந்து தனியே அடித்துப் பிரிக்கப்பட்ட நெல், காற்றில் தூற்றப்படுகிறது. திசையிலிருந்து மற்றொரு திசை நோக்கி வீசும் காற்றுக்காய்க் காத்திருந்து, முறத்தில் அள்ளிய நெல்லை இந்தப் பெண்கள் தூற்றும் அழகை, ஆயுள் அதிகமுள்ள கவிதையாய் வடிக்கலாம். பதர்கள் நீங்கி... தங்கமணிகளாய்ப் பளபளக்கும் நெல்மணிகள் குவியத் தொடங்க உழுத கணம் முதல் பாடுபட்ட அந்தப் பாட்டாளிகளின் முக மெங்கும் சந்தோஷம் பொங்குகிறது. இறுதியில் மகசூல் அளக்கப்படுகிறது. இருபத்து நான்கு மரக்காக்கள் கொண்ட (சராசரியாக அறுபது கிலோ எடை) ஒரு மூட்டை மகசூலுக்கு இரண்டு மரக்கால் கூலி நெல். மொத்தமாய்க் கிடைத்த கூலி நெல்லைப் பிரித்துக் கொள்ள, கணவனுக்கும் மனைவிக்குமாக ஒரு ஜோடிக்கு ஐந்து மரக்கால் வீதம் நெல் கிடைக்கிறது. மொத்தக் கூலி நெல்லில் அரை மரக்காலை மட்டும் சில கணவன்மார்கள் துண்டில் முடிந்து கொண்டு காட்டாமணக்குக் காடு களை நோக்கிப் போகிறார்கள். (அங்கே கள்ளச் சாராயம் விற்கலாம் என்பது நம் அனுமானம்) ஜெயசுதா, கணவனுக்கும் தனக்குமாய்க் கிடைத்த நெல்லைச் சாப்பாடு கொண்டு வந்த கூடையில் கொட்டி வீடு நோக்கி நடக்கிறார். வரும் வழியில் வயலில் கட்டிய ஆட்டினை அவிழ்த்துப் பிடித்தபடி கையகல வரப்பில் கச்சிதமாய் நடக்கிறார். வீடு வந்ததும்தான் தெரிகிறது. சமைக்கத் தண்ணீர் இல்லை யென்று. "இந்த நேரத்துல பைப்புல தண்ணீர் வராது" என்றபடி குடமும், குழந்தையுமாக மறு படியும் வயல்களின் இடையே அரை மைல் நடக்கிறார். அங்கே... ஒரு கருங்கல் கேணி... குழந்தையைக் கரையில் விட்டுவிட்டு அதன் பாதாளப் படிக்கட்டுக்களில் இறங்கி தண்ணீரை முகந்து தலையில் வைத்துக் கொண்டு, மேலேறி, குழந்தையைத் திரும்பவும் இடுப்பில் வைத்துக் கொண்டு நடக்கிறார். கிணற்றிலிருந்து அவரது குடிசை, தூரத்தில் சின்னதாய்த் தெரிய, முகத்தில் வாட்டம்.

இடுப்பில் குழந்தை
ததும்பும் குடம்
அதோ வீடு - என இதையொரு

வலி நிறைந்த ஹைக்கூவாய் எழுதத் துடிக் கிறது நம் மனம். ஒருவழியாய் வீடு வந்து வீட்டிற்கு வெளிப்புறமிருந்த அடுப்பில் அவ சரமாய்த் தீ மூட்டி, சாப்பாட்டிற்கு உலை வைக்கிறார். சமைத்து முடிக்கிறபோது இரவு ஏழு மணி ஆகிவிட்டிருந்தது.

முளைக்கீரை சாம்பாரும், உருளைக்கிழங்கு பொரியலுமாக ஓர் அற்புத விருந்தை நில வொளியின் வெளிச்சத்தில் நமக்குப் படைத்து விட்டு சந்தோஷப்பட்டது அந்த ஏழைக் குடும்பம்.

"உங்களுக்கு இங்கே பொழுதுபோக்கென்று எதுவுமே கிடையாதா?"

"பொழுதுபோக்கைப் பற்றி யோசனை பண்ண எங்க நமக்கு முடியுது... பொழப்புன்னு ஒண்ணு இருக்கே... படுக்குறதுக்கு முன்னாடி கொஞ்ச நேரம் பஞ்சாயத்து டீவி பார்ப்போம்... இப்போ அதுவும் கெட்டுப் போச்சு... அப் பப்போ ரேடியோ மட்டும் கேட்டுகுவோம்..." என்ற ஜெயசுதாவின் குழந்தை அழ...

"பசியில அழுவுறா" என்றபடி குடிசைக்குள் ஓடினார். கொஞ்ச நேரத்தில் அந்தக் கிராமமே அமைதியாக உறங்கத் தொடங்கியது.

ஜெயசுதா – பெயரில் தான் நவீனம். வாழ்க்கை...? இந்திய கிராமங்களின் உயிர் நாடியாக, இந்த தேசத்தின் சுவாசமாக விளங் கும் லட்சோப லட்சம் பெண்களைப் போல் கஷ்ட ஜீவனம்தான். அந்த கஷ்டத்தை கஷ்ட மாக நினையாத எளிமை நம் நெஞ்சைத் தொட்டு நிறைக்கிறது!

அட்டை வண்ணப்படங்கள் : **ராஜன்**





2002 ஏப்ரல் 14
சித்ரபானு சித்திரை 1
மலர் : 60
இதழ் : 37

கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.




## தரிசுநில பட்ஜெட்!

தி.மு.க. ஆட்சியில் கஜானா காலியாகிவிட்டது என்று சலித்துக் கொண்ட கையோடு மினி பட்ஜெட் போட்டு, 3,300 கோடி ரூபாய் வருமானத்துக்கு வழி செய்து கொண்டார் ஜெ. மினி பட்ஜெட்டின் விளைவாக மத்தியதர வகுப்பினரின் வயிற்றிலடிக்கிற அளவுக்குத் தமிழகத்தில் விலைவாசி ஏறியது. இந்த வரிச்சுமை போதாதென்று, 2002-03க்கான மாநில பட்ஜெட்டில் வேறு 690 கோடி ரூபாய்க்கு மீண்டும் வரிகள் விதிக்கப்பட்டுள்ளன. ஆறு மாத காலத்துக்குள் 3,990 கோடி ரூபாய்க்குப் புதிய வரி விதிப்பு! இதையே ஒரு சாதனையாக ஜெயலலிதா கருதுகிறாரோ என்னவோ! கற்பூரம், சாம்பிராணி ஆரம்பித்து அரிசி, கோதுமை வரை ஒரு பொருளையும் விட்டு வைக்கவில்லை புரட்சித் தலைவி! வரி விதிப்பால் தமிழனைக் கசக்கிப் பிழிந்திருக்கிறார்.

இதுவும் போதாதென்று, மத்திய அரசிடம் வேறு சிறப்பு நிதியுதவியாக (special grant) பல்லாயிரம் கோடிகளைத் தரும்படி கேட்டிருக்கிறார் தமிழக முதல்வர். ஆந்திர முதல்வரின் பலத்த சிபாரிசைப் பெற்றுள்ள அக்கோரிக்கையை மத்திய அரசு எந்த




அளவுக்கு ஏற்றாலும் அந்த அளவுக்குத் தமிழ்நாடு அரசுக்கு வரும்படி தான்.

ஆனால் இந்த வருமானத்தைக் கொண்டு தமிழக அரசு செயல்படுத்தப் போகிற திட்டங்கள் என்ன..? நிதிநிலை அறிக்கையை ஆராய்ந்து பார்த்தால் பெருத்த ஏமாற்றம்.

மதிய உணவுத் திட்டம், மாணவர்களுக்கான பஸ் பயணச் சலுகை போன்றவற்றுக்கான ஒதுக்கீடு கணிசமாகக் குறைக்கப்பட்டிருக்கிறது. பின் தங்கிய வகுப்பினர் நலனுக்கான ஒதுக்கீடு தொகையும் குறைந்திருக்கிறது.

இந்த நலத்திட்டங்களுக்கான செலவுகளைக் குறைப்பதில் காட்டப்பட்ட சுறுசுறுப்பு அரசு செலவினங்களைக் குறைப்பதில் காட்டப்படவில்லை!

"நிதி ஒதுக்கீடுகள் ஆரோக்கியமான பொருளாதார வளர்ச்சியைத் தூண்டும் வகையில் செய்யப்படவில்லை. இது ஒரு வளர்ச்சி பட்ஜெட் அல்ல..." என்று முன்னாள் நிதியமைச்சர் ப. சிதம்பரம் கூறியிருப்பது கவனத்துக்குரியது.

தொழில் துறையையும் அதில் பொது மக்கள் முதலீட்டையும் ஊக்குவித்து, உற்பத்திப் பெருக்கத்துக்கு வித்திட இந்த பட்ஜெட்டில் ஒன்றுமே செய்யப்படவில்லை. மாறாக, பதினைந்து அம்ச திட்டம் என ஒன்றை முன்பே அறிவித்து, உற்பத்திக்கு உதவாத ஏராளமான செலவுக்குத்தான் வழி வகுத்து வைத்திருக்கிறார் ஜெயலலிதா.

மத்திய அரசிடம் சிறப்பு நிதியுதவி கோருபவர், ஏற்றுமதிக் கொள்கையில் அவ்வரசு செய்துள்ள மாற்றங்களை வரவேற்று ஏற்க மறுப்பதும் ஆரோக்கியமாக இல்லை. அவை ஒன்றுக்கும் உதவாது என்று கூறுவதன்மூலம் தமிழக ஏற்றுமதியாளர்களை




உற்சாகமிழக்கச் செய்கிறார் ஜெயலலிதா.

எல்லாவற்றைக் காட்டிலும் அபாயகரமானது, நிதிநிலை அறிக்கையில் அறிவித்துள்ள தரிசுநில அபிவிருத்தித் திட்டம்தான்.

அரசுக்குச் சொந்தமான ஏராள நிலங்கள் ஏற்கெனவே நீண்டகால குத்தகையில், வழங்கப்பட்டு, குத்தகைதாரருக்குக் கொள்ளை லாபத்தையும் அரசுக்கு அநியாய நஷ்டத்தையும் ஏற்படுத்துவதைப் பார்க்கிறோம். இப்போது புதிதாக தரிசுநில அபிவிருத்தி திட்டம் என்ற பெயரில் புறம்போக்கு நிலங்கள் கபளீகரம் ஆக வழிவகுக்கப்பட்டுள்ளது. இத்திட்டம் லஞ்ச லாவண்யங்களுக்கும் ஊழலுக்கும் இடம் கொடுக்க வல்லது.

கட்சிக்காரர்கள், அவர்களது பினாமிகள், ஆட்சியிலிருப்போருக்கு நெருக்கமானவர்கள் என செல்வாக்கு படைத்தவர்கள் பெறுகின்ற ஆதாயம், பொது மக்களுக்கு இழைக்கப்பட்ட அநீதியாகவும் நஷ்டமாகவும் முடியும். ஏனெனில், புரம்போக்கு நிலம் என்பது அரசு நிலம் - அதாவது பொது மக்களுக்குச் சொந்தமான நிலம்; ஆட்சியிலிருப்போருக்குச் சொந்தமான நிலம் அல்ல அது!

ஆனால், ஆட்சியிலிருப்போர் பெரும்பாலும் இந்த உண்மையை வசதியாக மறந்துவிடுவார்கள். நமது மக்களோ வாயில்லா ஜீவன்கள். எளிதில் ஏமாற்றப்படுபவர்கள். எனவே தரிசு நில அபிவிருத்தி திட்டம் என்பது என்ன, அது எப்படி அமுலாகப் போகிறது என்ற விவரங்களையெல்லாம் விளக்கி அ.தி.மு.க. அரசு சட்டமன்றத்தில் ஓர் அறிக்கை சமர்ப்பிக்க வேண்டியது அவசியம். ○

# கல்கி வைரவிழா

## ஒவட்டமின்

# சிறுகதைப் போட்டி!

கல்கி-60

**முதல் பரிசு – ரூ.10,000**

**இரண்டாம் பரிசு – ரூ. 7,500**

**மூன்றாம் பரிசு – ரூ. 5000**

*அலுப்பையெல்லாம் விரட்டியடித்து பி - 12 இன்ஜெக்ஷன் போட்ட மாதிரி இருக்க வேண்டும் உங்கள் சிறுகதை!*

இவ்வாண்டு **அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி**க்கான

*முதல் நிபந்தனை இதுதான்!*
*மற்ற நிபந்தனைகள் வழக்கமானவை:*

- சரித்திரம், சமூகம், மர்மம், நகைச்சுவை என எப்படிப்பட்ட கதையாகவும் இருக்கலாம். கதை, உங்கள் சொந்தக் கற்பனையாக இருக்க வேண்டும்; அவ்வளவுதான்!
- கல்கியில் நான்கு பக்கங்களுக்கு மிகாமல் இருப்பது நல்லது.
- சொந்தக் கற்பனைதான் என்பதற்கு உறுதிமொழிக் கடிதம் வேண்டும். அது இல்லாத கதைகள் பரிசீலிக்கப்பட மாட்டா.
- அறிமுக எழுத்தாளர் எனில், இதற்கு முன் எந்தப் பத்திரிகையிலும் எழுதியதில்லையென்றும் போட்டி முடிவு வெளியாகும் வரை எழுதுவதில்லை என்றும் உறுதிமொழி தர வேண்டும்.
- முழு வெள்ளைத் தாளில் ஒரு பக்கத்தில் மட்டுமே எழுத வேண்டும்.
- தேர்வாகாத கதைகளைத் திரும்பப் பெற, போதிய தபால் தலைகள் ஒட்டிய அஞ்சல் உறை இணைக்கப்பட வேண்டும். பின்னால் தனியே அனுப்பிப் பயனில்லை.
- ஒருவரே எத்தனை கதைகள் வேண்டுமானாலும் அனுப்பலாம்.
- பரிசுக்குரிய கதைகளை நடுவர் குழு பரிசீலித்துத் தேர்ந்தெடுக்கும். சந்தேகம் எழும் விஷயங்களில் கல்கி ஆசிரியர் தீர்ப்பே இறுதி.
- முடிவு வெளியாகும் வரை, எவ்வித கடிதப் போக்குவரத்தோ, தொலைபேசி விசாரிப்புகளோ கூடாது.
- **'அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி – 2002'** என்று உறையின் மேல் தவறால் குறிப்பிட்டு, அனுப்ப வேண்டிய முகவரி:

**ஆசிரியர், கல்கி**
**47, ஜவாஹர்லால் நேரு சாலை,**
**ஈக்காடுதாங்கல்,**
**சென்னை – 600 097.**

- கதைகள் வந்து சேரக் கடைசித் தேதி : **ஜூன் 15.**
- போட்டி முடிவும் முதல் பரிசுக் கதையும் ஆகஸ்ட் 4, ஆண்டு மலரில் வெளியாகும்.



**பரிசுகள், கல்கி வைரவிழா நிகழ்ச்சி மேடையில், ஆகஸ்ட் 4, 2002 அன்று வழங்கப்படும்.**

# கோட்டையில் மேயருக்கு ஓர் இடம்!



ஒரு நதி தன் பாதையை வடக்கு நோக்கி திருப்பும் இடத்தில் உத்தரவாஹினி என்று பெயரைக் கொண்டு விடும். அந்தப் பகுதியில் காசியில் உள்ள கங்கையில் மூழ்கிய புண்ணியம் உண்டு. வருடத்துக்கொரு முறை திருவட்டீஸ்வரர் 'திருஉலா' உற்சவத்தின்போது, கூவம் வடக்கு நோக்கித் திரும்பும் இடமான கோமளீஸ்வரன் பேட்டைக்கு வந்திறங்குவார். வள்ளல் பச்சையப்ப முதலியார் போன்ற பக்த கோடிகள், கூவத்தில் ஒரு முங்கு முங்கி ஈஸ்வரனைத் தரிசித்து ஆனந்தம் அடைவார்கள். கோமளீஸ்வரன் பேட்டை என்பது இன்றைய சித்ரா தியேட்டரை ஒட்டியிருக்கும் பகுதிதான்.



இன்னமும் கேளுங்கள், சென்னையின் பெருமையை. கோட்டை இருக்கும் இடம் முழுக்க வாழைத்தோப்புதானாம். கிழக்கிந்திய கம்பெனி கோட்டைக்கு வெளியே வாங்கிய முதல்பகுதி திருவல்லிக்கேணி. கோல் கொண்ட சுல்தானின் ஏஜெண்டான ரூசாகானிடம் 50 வராஹன் குத்தகைப் பணமாகக் கொடுத்துவிட்டு பெற்றுக் கொண்டார்கள்.

திருவொற்றியூர், சாத்தாங்காடு, நுங்கம்பாக்கம் போன்ற பகுதிகளை, பாளையக்காரர்களிடமிருந்து 1500 வராஹன்களுக்குக் குத்தகை எடுத்தது கம்பெனி. அப்போது திருவல்லிக்கேணியில் வடகலை, தென்கலை மோதல் துவங்கி விட்டது. கிழக்கு நோக்கி இருக்கும் பெருமாளுக்குத் தென்கலை நாமமும், மேற்கு நோக்கி இருக்கும் நரஸிம்மருக்கு வடகலை நாமமும் போட்டுக் கொள்ளலாம் என்று ஒருமுறை தீர்ப்புக் கொடுத்தார் அப்போதைய கவர்னர்!

'யேல்' கவர்னராக இருக்கும்போது எழும்பூர் (அப்போது எழூமூர்), புரசைவாக்கம், தண்டையார்பேட்டை பகுதிகள் சென்னையுடன் இணைந்தன. அவரது காலத்தில்தான் கிழக்கிந்திய கம்பெனியின் கொடிக்குப் பதிலாக முதன்முதலாக பிரிட்டிஷ் கொடி கோட்டையில் பறக்கவிடப்பட்டது. 1876ல் ஏற்பட்ட கொடுமையான பஞ்சத்தில், மக்களுக்கு வேலை கொடுக்க பக்கிங்காம் கால்வாய் வெட்டப்பட்டது. ஆளுக்குக் கூலி உழக்கு அரிசியும் இரண்டணாவும்; சிறுவர்களுக்கு அரையணா கூலி. பழைய மாம்பலத்திலுள்ள காசி விஸ்வநாத கோயிலிலிருந்து பார்த்தால், தேனாம்பேட்டை (அப்போது தெய்வநாயகன் பேட்டை) தெரியும். இடையில் ஏரிகளும், குளங்களும், பசுமையான நெல் வயல்களும்தான். போக்ரோடு பகுதியில் இருந்த ஏரியில் தெப்போற்சவம் நடக்கும். காஞ்சிபுரத்தில் இருந்து நெசவாளர்கள் வந்து குடியேறிய இடம் சிந்தா'தறி' பேட்டை. கறுப்பர் நகரமாக இருந்த பாரிமுனைப் பகுதி ஜார்ஜ் டவுன் என்ற பெயரைப் பெற்றது, ஐந்தாம் ஜார்ஜ் இந்தியா வந்தபோதுதான். கிழக்கிந்திய கம்பெனியாருக்கு நாணயங்களைத் தயாரித்துக் கொடுத்தவர் லிங்கி செட்டி. இடம்: மிண்ட் தெரு. சென்னைவாசிகளின் அப்போதைய தொழில் நெசவும், விவசாயமும்தான்.

கோட்டை வளாகத்தில் இருக்கும் செயிண்ட் மேரி தேவாலயம் பல சிறப்புகளைக் கொண்டது. கவர்னர்கள் ராபர்ட் கிளைவ், யேல் திருமணங்கள் இங்கேதான் நடந்தன. குண்டுகளைத் தாங்கக் கூடிய வலிமை பெற்றன இதன் சுற்றுச்சுவர்கள். தேவாலயத்தின் முதல் வரிசையில் கவர்னருக்கும், சென்னை மேயருக்கும் நிரந்தரமாக ரிசர்வ் செய்யப்பட்ட இருக்கைகள் உண்டு.

வரலாற்றுப் பக்கங்களில் மட்டுமே கிராமியச் சென்னையை நுகர்ந்து பெருமூச்சு விட வேண்டும்.

— ஸ்ரீநிவாசன்



கி.ராஜநாராயணனின்

# காதல் சடுகுடு!

எதைக் காதல்னு சொல்றோம்? ஒரு பெண், ஆண் மேல ஆசைப்படறதையும் ஓர் ஆண், பெண் மேல ஆசைப்படறதும்தான் காதலா?

'ராமாயணத்துல' 'அண்ணலும் நோக்கினான், அவளும் நோக்கினாள்'னுதான் சொல்றான் கம்பன். அதனால ரெண்டு பேரும் ஒருத்தர் மேல ஒருத்தர் அன்பு கொள்றதுதான் காதல்.

பொதுவா, அடைய முடியாம போனாதான், அதைக் காதல்னு சொல்றோம். அடைய முடியாததுதான் காதல்னா, அடைஞ்சதுக்கு வேற பெயர்தான் கொடுக்கணும். அதுக்கு என்ன சொல்றதுன்னு தெரியலை.

நம்ம காவியம், இலக்கியங்கள் கூட அடைய முடியாததைத்தான் காதல்னு சொல்லுது. உலகத்தில் மிகச் சிறந்த சுயம்பு காதல் எதுன்னு கேட்டால் அடைய முடியாததுதான்!

சரத்சந்ரர் எழுதிய 'தேவதாஸ்'ல கதாநாயகி, நாயகனை 'தேவா அண்ணா'ன்னுதான் சொல்லி அழைக்கிறா; அவ கடைசி வரைக்கும் அந்த வார்த்தையிலயிருந்து மாறலை. ஆனால் நாயகனுக்கு அவள் மேல் காதல். அவ அண்ணான்னு நெனச்சாலும் மனசால காதல் கொண்டு அலையுதான் நாயகன். அது அவனுக்குள்ள தீரா நதியாக இருக்கு. கிராமத்துக் காதலுக்கு ஒரு நல்ல உதாரணம் சொல்லணும்னா 'தேவதாஸை'ச் சொல்லலாம்.

லைலா - மஜ்னு, அம்பிகாபதி, அமராவதின்னு புகழ்பெற்ற காதல் கதைகள் எல்லாமே இந்தக் கருத்தைத்தான் சொல்லுது.

அதாவது எரியும் போதுதான் தீ. காதல் உணர்வு உள்ளுக்குள்ள ஏற்படுத்தற தவிப்பு, ரணம் இருக்கே அந்தத் தீ. காதலியையோ காதலனையோ அடைஞ்சிட்டா தீயாக இருக்காது. அதனாலதான் அடைய முடியாததுதான் 'காதல்'னு சொன்னேன்.

நகரத்துக் காதலில் காதலைச் சொல்ல ரெண்டு பேருக்குமே பல வழிகள் இருக்கு. ஆனா கிராமத்துல அது சாத்தியமில்ல. ரொம்ப குறைச்சல்.

வசதியான வீட்டு ஆண். அதுக்கு நேரெதிரான நிலையிலிருக்கிற ஒரு பெண். அவனை, அவன் அழகைப் பார்த்துக் காதல் பண்றா. காதலை அவன்ட்ட அவளால சொல்ல முடியாது. வழிகள் இல்லை. கிராமங்கள்ல சடங்காயிட்டா பெண்கள் வீட்டை விட்டு வெளியே வர முடியாது. எங்கயாவது கருக்கல்ல அவனைப் பார்த்து, தலையைக் குனிஞ்சுக்கிட்டு ஏங்கத்தான் முடியுமே தவிர



பேசவும் முடியாது. வேறென்ன செய்வா அவா? அவனையே நெனச்சு நெனச்சு மருகுறதைத் தவிர வேற வழியில்லை.

என்னென்ன நினைச்சிருந்தாளோ அந்த எண்ணங்களோடயே மாஞ்சி போயிடறதுதான் ஒரே வழி!

ஒரே ஜாதியிலேயே கொஞ்சம் வசதியானவனா இருப்பான். அவன் மேல காதல் கொள்வாள் ஒரு பெண். காதலைச் சொல்ல முடியாது. சொந்தக்காரந்தான்; ஒரே சாதி சனம்தான்; இருந்தாலும் முடியலை. ஏன்னா அவன் வசதி அப்படி.

அந்தக் காதல் உணர்வோடயே, ஏக்கங்களோடயே, சோகங்களோடயே உணர்ச்சியோடயே வேறொருத்தருக்குக் கட்டி வச்சிடுவாங்க அவளை. வேற வழியே கிடையாது. இவளுக்குக் குழந்தை பிறந்ததும் கிராமத்துல ஒரு வழக்கம் உண்டு. அதாவது சேனை வைக்கறதும்பாங்க.

குழந்தை பிறந்த உடனே அது வாயில தேன், கருப்பட்டி எடுத்து நாக்கில தடவுவாங்க. தாய்ப்பால் சாப்பிடறதுக்கு முன்னால இந்த இனிப்பை யார் கொடுக்கறாங்களோ அவங்கள மாதிரிதான் குழந்தை வளரும்னு நம்பிக்கை.

முதல்ல தாய்க்குச் சேனைய கொடுத்துட்டு அவகிட்ட கேப்பாங்க. யாரைக் கூப்புட்டுக் குழந்தைக்குச் சேனை கொடுக்கச் சொல்லன்னு? அப்ப அவா சொல்லுவா... தான் நேசித்த, மனசுக்குள்ள வச்சு வச்சு கற்பனை பண்ணிட்டிருக்கிற அந்தக் காதலனைச் சொல்லுவா. அப்பவும் அவள், அவன் மீது காதல் கொண்டான்னு யாருக்கும் தெரியாது.

கிராமத்துக் காதல் வெளிப்பாடு இப்படித்தான் இருக்கும். இது பெண்ணுக்கு.

ஆணைப் பொறுத்தவரை வீட்ல நாசூக்கா சொல்லிப் பார்ப்பான். அவங்க வீட்ல உள்ளவங்களுக்குப் புரியாது. பெறவு குடும்பத்துல யாராவது பாத்து வேறொருத்தியைக் கல்யாணம் பண்ணி வச்சுருவாங்க. அவனுக்குப் பெண் குழந்தை பிறந்தா சப்தம் போடாம அவ பெயரை வச்சிருவான் குழந்தைக்கு. அப்பவும் இது அவன் காதலி பெயருன்னு யாருக்கும் தெரியாது, அவனைத் தவிர.

கிராமத்தைப் பொறுத்தவரை தொண்ணூற்றி ஒன்பது சதவிகித காதல் நிறைவேறாது. நிறைவேறாத காதலுக்குத்தான் அடர்த்தி ஜாஸ்தி.

இன்னொரு வகையான காதல் இருக்கு. தாட்டியமான ஆண். வசதியா இருப்பான். சின்ன வயசுல






இருந்தே ஒரு பெண் மேல அவனுக்கு ஆசை இருக்கும். இதை வெளிப்படுத்த முடியாது. மனசுக்குள்ள கிடந்து உழலுவான். அவளுக்குக் கல்யாணம் ஆயிரும். அவனுக்கும் கல்யாணம் ஆயிரும். ரெண்டு பேருக்கும் குடும்பம் குட்டின்னு இருக்கும். ஆனாலும் அவன் அவளை ஏற்றுக்குவான். இத சின்ன வீடுன்னு சொல்லுதாங்க. அந்த வார்த்தை கொச்சையானது. சேர்ந்து வாழறதுன்னுதான் சொல்லணும். என்னோட கோபல்ல கிராமத்துல கூட இது மாதிரி கேரக்டரை எழுதியிருப்பேன்.

இந்தச் சேர்ந்து வாழுதல் முறை இப்ப ஐரோப்பா நாடுகள்ல வந்திருக்கு. அதாவது தாலி கிடையாது. குழந்தை கிடையாது. தேவைன்னா பெத்துக்கிடற முறை.

எனக்கொரு நண்பன் இருந்தான். தீவிரமாக ஒரு பெண்ணைக் காதலித்துக் கொண்டிருந்தான். இருவர் வீட்டிலுமே எதிர்ப்பு. அவன் அவளைத்தான் கட்டுவேன்னு ஒத்தக்கால்ல நிக்கான். திடீர்னு அவளை வேறொருத்தனுக்குக் கட்டி வச்சிட்டாங்க. பாத்தான் இவன். தற்கொலை பண்ணப் போய்ட்டான். அவனைப் புடிச்சி இழுத்துட்டு வந்து வீட்ல வச்சிருந்தாங்க. தாடியும், அழுக்கு உடையுமா உலகத்தையே வெறுத்தது மாதிரி அலைஞ்சிட்டிருந்தான். பீடி, கஞ்சா, தண்ணின்னு எல்லா கெட்டப் பழக்கத்தையும் கத்துகிட்டான். பிறகு நான் அவனைச் சந்திக்க முடியாம போயிட்டு.

ரொம்ப வருஷத்துக்குப் பிறகு அவனைப் பார்த்தேன். கல்யாணமெல்லாம் ஆகி நல்லா வசதியா இருக்காம்னு சொன்னாங்க. விசாரிச்சேன். அவன் சொன்னான்: "கல்யாணத்துக்கு ஒன்ன கூப்பிட முடியாம போயிட்டு. "என் பொண்டாட்டி அசப்புல அவளை மாதிரியே இருப்பா"ன்னான்.

'கல்யாணமே வேண்டாம். பரதேசம் போறே'ன்னு இருந்தவனை அவ எப்படி மாத்தினாள்? அதுவும் காதல்தான்!

'இரு நகர கதைகள்'னு ஒரு நாவல். நீங்கள்லாம் படிச்சிருப்பீங்களா தெரியாது. தமிழ் சினிமாக்கள்ள வர்ற முக்கோண காதலுக்கு அந்த நாவல்தான் அடிப்படை.

ரெண்டு பேரு காதலிப்பாங்க. அது பிரெஞ்சுப் புரட்சிக் காலம். சூழ்நிலையால பிரிய வேண்டிய நிலைமை. அவன் வேறொருத்தியையும் அவ வேறொருவனையும் கல்யாணம் பண்ணிக்கிடுவாங்க. காதலி கஷ்டப்படறா. காதலன் அப்பப்ப வந்து உதவி செய்யுதான். மனசுக்குள்ள காதல் எரிஞ்சிட்டிருக்கு ரெண்டு பேருக்கும். திடீர்னு ஒருநாள் காதலியோட கணவனை விசாரணையில்லாம ஜெயில்ல போட்டிருதாங்க. பிறகு மரண தண்டனை விதிச்சிடறாங்க. கணவன் இல்லாம காதலியால வாழ்க்கையை ஓட்ட முடியலை. காதலன்ட்ட அழுகிறாள். அவன், 'உன் கணவன் உயிரோட வருவா'ன்னு சொல்லிட்டு, ஜெயில்ல போய் காதலியோட கணவனைச் சந்திக்கிறான். அவன்கிட்ட உண்மையச் சொன்னா சம்மதிக்க மாட்டான்னு சொல்லிட்டு, கையில வச்சிருக்கிற மயக்க மருந்தை அவன் மூஞ்சில காண்பிச்சு மயக்கிட்டு, படபடன்னு அவனோட உடைகளை இவன் போட்டுட்டு, இவன் உடைகளை அவனுக்கு மாத்தி, மயக்கம் தெளிஞ்சதும், அவனைச் சமாளிச்சு அனுப்பி காதலன் ஜெயிலுக்குள்ள போறான். மரண தண்டனை இவனுக்குக் கொடுக்கிறாங்க.

காதலுக்காக தியாகம் செய்யற இந்தக் காதலை விட வேறென்ன வேணும்? இந்தக் காதலும் அடைய முடியாததைத்தான் சொல்லுது பாத்தீங்களா?

கீழ் சாதி ஆணுக்கும் பெண்ணுக்கும் காதல் வந்துடுது. ஊருக்குள்ள விஷயம் தெரிஞ்சா வெட்டு குத்துதான். கசிய விட மாட்டாங்க ரெண்டு பேரும். காதல் வலுப்பட வலுப்பட ரெண்டு பேருக்குமே இருக்க முடியாது. ஏன்னா மனசு அப்படி. ஒருநாள் நடு ராத்திரி ஊரை விட்டு ஓடிப் போயிருதாங்க. விட்ருவாங்களா ஊருல? பயங்கரக் கலவரம் வெடிக்கும்னு எதிர்பார்த்தால், வெடிக்கலை. ஏன்னா ஓடிப் போனது உயர்ந்த ஜாதி வீட்டுப் பெண்ணாச்சே. அப்படியே அமுக்கிடுதாங்க.

இந்தக் காலத்துலயும் காதல் நடக்குது. காதலிக்க சம்மதிக்காதவளை வெட்டிப் போட்டுட்டுத் தானும் செத்துப் போறாங்கற மாதிரி பேப்பர்ல செய்தி படிக்கிறோம். இது எந்த வகை காதல்?

சந்திப்பு : அப்பு



# S.V.முதியோர் இல்லம்



இங்கு முதியோர்களுக்கு இலவச மருத்துவமனை, ஆரம்பிக்கப்பட்டு அனைவரையும் தனித்தனியாக பரிசோதனை செய்து, உடல் ஆரோக்கியம் கண்காணிக்கப் படுகிறது. படுத்த படுக்கை யில் உள்ள முதியோர்கள் அனைவரையும் 24 மணி நேரமும் நர்சுகளும், உதவியாளர்களும் கவனித்துக் கொள்கிறார்கள். எமர்ஜென்சி உபகரணங்கள் உள்ளன.

மனச்சிதைவு, மனவளர்ச்சி குன்றிய முதியோர்கள் மற்றும் எல்லா வயது ஆண்/பெண் நோயாளிகளுக்கென்று தனி இல்லம் மருத்துவ வசதியுடன் செயல்பட்டு வருகிறது.

எல்லா வயது உட்பட்ட அதிக பட்ச மனநோயால் பாதிக்கப்பட்ட நோயாளிகளுக்கு (ஆண், பெண் இருபாலரும்) சிறப்பு பாதுகாப்பு வசதியுடன் முற்றிலும் இலவச மருத்துவ வசதியுடன் தனித் தனி இல்லம் செயல்படுகிறது.

உங்கள் பிறந்த நாள் மற்றும் சிறப்பு நாட்களில் நீங்கள் அளிக்கும் ஒரு சிறிய நன்கொடைத் தொகை எங்கள் இல்லத்தில் உள்ள முதியோர்கள் மருத்துவ வசதிக்கு பயன்படுத்துவதுடன், அவர்கள் வாழ்க்கையை காப்பாற்றிய நல்லாசி உங்கள் குடும்பத்திற்குக் கிடைக்கும் மிகப் பெரிய பரிசாகவும் அமையும்.

## முதியோர் சேவை பெரியது!

நன்கொடைக்கு வருமானவரி விலக்கு (80G, Income Tax Excemption) உண்டு

## S.V. HOME FOR AGED

# 50 / 88, Panchali Amman Kovil Street,
Arumbakkam, Chennai - 600 106
Tel. Off: 475 5700, 475 1356, 475 5799
Cell No. : 98400 84363 / 98400 42174
Email: svhome1rediffmail.com

---

✆ Res: 6430076 ஸ்ரீ துர்க்கை அம்மன் துணை ✆ Shop: 8281327



# தனலக்ஷ்மி சாரீஸ்

**Exclusive Handloom sarees Manufacturers**

**கோடைகாலத்திற்கேற்ப காட்டன், கைத்தறி சேலைகள் இப்போது விற்பனையில்**

*நல்ல தரத்துடன் எப்பொழுதும் குறைந்த விலையில் கைத்தறி சேலைகள் விற்பனை செய்யும் நிறுவனம். கெட்டி சாயம் கொண்ட மதுரை சுங்குடி சேலைகள் (சாயம் வெளுக்காத சேலைகள்) குறைந்த விலையில் கிடைக்கும். எங்களிடம் தேவேந்துரா சாரீஸ், சுங்குடியில் 100's, 120's Count's சேலைகள் கெட்டி சாயத்துடன் தரமானதாகவும் நியாயமான விலையில் 6 yds, 7 yds, 10 yds அதிக varities கிடைக்கும். மதுரை உயர்தர கைத்தறி சேலைகள், Exclusive cotton, thread work & ஜரிகை வேலைபாடுகள் கொண்ட சேலைகள், Bathick work, Hand printed work, Latest screen printed sarees, Mangalagiri Cotton, Mercerised Voraiyar Sarees, Polycot, Bangalore printed Polycot, Bengal cotton, Bengal pure printed silk, Silk cotton, Balucheri silk cotton, Sithalakshmi cotton, Orissa cotton, Orissa Pochampally Exclusive silk cotton (Latest arrival), Pochampally Design, Banaras Printed Silk, Gujarat printed Gadwal silk, Bathik in Assam Silk, Printed grape sarees (Home wash), Valkalam Cotton, Erode Cotton, Italian grape, Jaipur Readymade Churidars and materials & Nighties, Fancy செட்டிநாடு காட்டன் 9 yds (8.80 mtr), நவஜோதி சில்க்ஸ், மங்களம் சாரீஸ் (9 yds) பொள்ளாச்சி காட்டன், Woven Patola Sarees, (Pure Silk Cotton) சாரீஸ், எல்லாவித சுடிதார் செட், சேலம் வேஷ்டிகள், டவல்கள், மேட்சிங் ப்ளவுஸ் materials & Silk Cotton Blouses கிடைக்கும். மேலும் Today வேஷ்டி (9X5), Jaipur Bedsheets, Patola Silk Cotton, மற்றும் பெட்டிகோட் வகைகளும் கிடைக்கும்.*

எமது நிறுவனம் மார்ச் மாதம் முதல் புதிய விலாசத்தில் செயல்படுகிறது. (பழைய விலாசத்திற்கு அடுத்த கட்டிடம்)

**நெ.3. கோபால கிருஷ்ணா ரோடு (பாண்டி பஜாரிலிருந்து டாக்டர் நாயர் ரோடுக்கு திரும்பியவுடன் இரண்டாவது இடதுபுற சாலை) தி.நகர், சென்னை - 17.**
**Bus No - 9, 10, 47A, 47D (Power Office Bus stop, Dr. Nair road)**

கிளை: 25/1-B, Maruthamalai main road, (Vadavalli High School Bus stop) Vadavalli, Coimbatore - 1
மருதமலை செல்லும் எல்லா பேருந்துகளும் நின்று செல்லும். Shop cell - 98422 - 24981 Resi: 424981



# சிவகாமியின் சபதம்

## முன்கதை

காஞ்சி மாநகரைத் தலைநகராகக் கொண்டு, பல்லவ சாம்ராஜ்யத்தை ஆண்டு வந்த மகேந்திரவர்ம சக்கரவர்த்தியின் குமாரர் மாமல்ல நரசிம்மருக்கும் அரண்யத்தின் நடுவில் வீடு கட்டிக்கொண்டு சிற்ப வேலைகள் செய்து வந்த ஆயனச் சிற்பியின் மகள் சிவகாமிக்கும் காதல் ஏற்பட்டு வளர்ந்து வருகிறது.

பல்லவ சாம்ராஜ்யத்தின் மேல் படையெடுத்து வந்த வாதாபி புலிகேசியின் சைன்யத்தை எதிர்ப்பதற்காக, பல்லவ சைன்யத்துக்குத் தலைமை ஏற்றுப் புறப்படுகிறார் மகேந்திரர். போகும்போது, தம் குமாரரிடம் காஞ்சிக்கோட்டைக்கு வெளியே போவதில்லை என்று வாக்குறுதி பெற்றுக்கொண்டு செல்கிறார்.

ஆயனச் சிற்பிக்காக அஜந்தா வர்ண ரகசியங்களை அறிந்து வருவதற்காகச் சென்ற இளைஞன் பரஞ்சோதி, வழியில் பல்லவ சைன்யத்தில் சேர்ந்து அரும்பெரும் வீரச் செயல்கள் புரிகிறான். அவனைக் காஞ்சிக் கோட்டையை முற்றுகைக்கு ஆயத்தமாக்கும் பொருட்டு, சக்கரவர்த்தி அனுப்பி வைக்கிறார்.

புலிகேசிக்கு முன்பே தான் காஞ்சியை அடைய வேண்டுமென்ற துராசையோடு படையெடுத்து வரும் கங்க நாட்டு மன்னன் துர்விநீதனை முறியடிக்கும்படி சக்கரவர்த்தி ஓலையனுப்புகிறார். அதன்படி நரசிம்மரும் பரஞ்சோதியும் படையோடு புறப்பட்டுச் செல்கிறார்கள். புறப்படுவதற்கு முன்பு, தந்தையின் ஆலோசனைப்படி ஆயனரையும் சிவகாமியையும் காஞ்சிக்கு அனுப்பி வைப்பதற்காக, ஆயனரின் வீட்டுக்குச் சென்றபோது அது பூட்டிக் கிடக்கிறது.

**அமரர் கல்கி**

இதற்கிடையில், நாகநந்தி என்னும் புத்தபிக்ஷு மாமல்லரைப் 'பயங்கொள்ளிப் பல்லவன்' என்றும், 'ஸ்திரீலோலன்' என்றும் கூறியதைக் கேட்ட சிவகாமி முதலில் அதிர்ச்சியடைகிறாள்: பிறகு சந்தேகம் கொள்கிறாள். அந்தக் குழப்பத்தில், 'சிவகாமியின் நடனம் தூர தேசங்களிலெல்லாம் பிரபலமாக வேண்டும்; அதற்குப் பல்லவ ராஜ்யத்தை விட்டு வெளியேற வேண்டும்' என்று நாகநந்தி கூறிய யோசனையைத் தந்தையிடம் வற்புறுத்தி ஒப்புக் கொள்ளச் செய்கிறாள். அதன்படி சிவகாமி, ஆயனர், சிவகாமியின் அத்தை ஆகிய மூவரும் நாகநந்தியுடன் புறப்பட்டுச் செல்கிறார்கள்.

வழியில் ஒரு சிறு படையொன்று மாமல்லரின் வீரத்தைப் புகழ்ந்து கோஷங்களை எழுப்பிக்கொண்டு இவர்களைக் கடந்து போகிறது. அந்தக் கோஷங்கள் சிவகாமியின் உள்ளத்தில் பெரும் கிளர்ச்சியை உண்டு பண்ணுகின்றன. அப்போது, திடீரென்று, ஆயனரின் சிஷ்யன் குண்டோதரன் ஒரு குதிரையின் மேல் ஏறிக்கொண்டு வந்து, ''குருவே! நான் என்ன தவறு செய்தேன்! என்னை இப்படி அனாதையாய்க் கைவிட்டு விட்டுச் சொல்லாமல் புறப்பட்டு வந்து விட்டீர்களே!'' என்று அலறுகிறான்.

## இருபதாம் அத்தியாயம்

# குண்டோதரன் கதை

குண்டோதரன் குதிரையிலிருந்து குதித்து இறங்கி வந்து, சாலையில் நின்ற ஆயனரின் பாதங்களில் சாஷ்டாங்கமாக நமஸ்கரித்தான். பின்னர், எழுந்து நின்று, ''ஐயா! என்னை ஆசீர்வாதம் செய்யுங்கள். தங்களுடைய திருவருளினால்தான் நான் தங்களைத் தேடிக் கண்டுபிடித்தேன்'' என்று சொன்னான்.

"ரொம்பவும் சந்தோஷம், குண்டோதரா! நீ தேடிக்கொண்டு வந்து சேர்ந்ததில் எனக்கு வெகு சந்தோஷம். ஆனால் உன்னைக் கைவிட்டு விட்டு, நாங்கள் வந்துவிடவில்லையே? நீ அல்லவா திடீரென்று எங்களைக் கைவிட்டு விட்டு மாயமாய் மறைந்து விட்டாய்...? எங்கே அப்பா போயிருந்தாய்?'' என்று ஆயனர் கேட்க, குண்டோதரன், "குருவே! நான் என்ன செய்வேன்! காஞ்சியிலிருந்து அன்றைக்கு ரதம் ஓட்டிக்கொண்டு கண்ணபிரான் வந்தானல்லவா? அவன் ஒரு சமாசாரம் சொன்னான். என் பாட்டி எனக்குக் கல்யாணம் பண்ணி வைப்பதற்காகப் பெண் பார்த்து வைத்திருக்கிறாள் என்றும், உடனே வரச் சொன்னாள் என்றும் தெரிவித்தான். அப்புறம் காரியம் மிஞ்சி விடப் போகிறது என்று உடனே போய், பாட்டியிடம் கல்யாணம் வேண்டாம் என்று சொல்லிவிட்டு வருவதற்காகக் காஞ்சிக்கு ஓடினேன். உங்களிடம் சொல்லிக் கொண்டு போகலாமென்று பார்த்தால், வீட்டில் உங்கள் இரண்டு பேரையும் காணவில்லை. ஒருவேளை தாமரைக் குளக்கரையில் இருப்பீர்களோ என்று ஓடிப் போய்ப் பார்த்தால், அங்கேயும் உங்களைக் காணவில்லை. இந்தப் புத்த பிக்ஷு தான் தாமரைக் குளக்கரையில் நின்றுகொண்டிருந்தார்..." என்று சொல்லிக் குண்டோதரன் நாகநந்தியடிகளை ஏறிட்டுப் பார்த்தான்.

"என்னைச் சொல்கிறாயா, தம்பி? இந்தப் பல்லவ சாம்ராஜ்யத்தில் உள்ள புத்த பிக்ஷு நான் ஒருவன்தானா? வேறு யாரை யாவது பார்த்திருப்பாய்!" என்றார் நாகநந்தி அடிகள்.

"இல்லை, சுவாமி, இல்லை! தங்களைத் தான் பார்த்தேன். கையிலே ஏழெட்டு ஓலைச் சுருள்களை வைத்துக்கொண்டு ஒரு ஓலையைப் படித்துக்கொண்டிருந்தீர்கள். நாகப்பாம்பு சீறுவதைப் போல் சீறிக்கொண்டிருந்தீர்கள்..."

சிவகாமியின் மனத்தில் அப்போது சுருக்கென்றது. மரப்பொந்திலே அவள் வைத்திருந்த மாமல்லரின் ஓலைகள்

காணாமற் போனது அவளுக்கு நினைவு வந்தது.

அப்போது நாகநந்தி, "என்ன அப்பா உளறுகிறாய்? நானாவது தாமரைக்குளக் கரையில் நின்று ஓலை படிக்கவாவது?" என்றார்.

ஆயனரும், "வேறு யாராவது இருக்கும் குண்டோதரா! அப்புறம் உன் கதையைச் சொல்!" என்றார்.

"இல்லை, குருவே! இவரையேதான் பார்த்தேன். இவருடைய முகத்தையும் இவர் சிறுவதையும் பார்த்ததும் எனக்கு என்ன தோன்றிற்று தெரியுமா? - ஆ! அதைச் சொல்லக்கூடாது. சொன்னால், பிக்ஷுவுக்குக் கோபம் வரும். கோபம் வந்து என்னைக் கடித்தாலும் கடித்து விடுவார்!" என்றான்.

நாகநந்தியின் கண்களில் தீப் பொறி பறந்தது. ஆயனரோ நிலைமை விரஸமாய்ப் போய்க் கொண்டிருப்பதை உணர்ந்து, "பாருங்கள் சுவாமி! இப்பேர்ப் பட்ட புத்திசாலி சிஷ்யனை வைத்துக் கொண்டு என்ன சிற்ப வேலையைச் செய் வது? அதனால்தான் எட்டு மாதமாக நான் ஒன்றும் செய்யவில்லை... போகட்டும். குண்டோதரா! அப்புறம் உன் கதையைச் சொல்லு! உன் பாட்டி பேசி வைத்த பெண்ணின் கதி என்ன?" என்றார்.

"குருவே! பாட்டியிடம் கண்டிப்பாய்ச் சொல்லிவிட்டேன். 'பாட்டி, பாட்டி! நம் முடைய மகேந்திர சக்கரவர்த்தியின் குமாரர் மாமல்லர் எத்தனை எத் தனையோ ராஜாக்கள் பெண் கொடுப் பதாக வந்தும் இன்னும் கலியாணம் பண் ணிக் கொள்ளாமல் பிரம்மச்சாரியாயிருக் கிறார். என் குருநாதருடைய செல்வப் புதல்வி சிவகாமிக்கு இன்னும் கலியாண மாகவில்லை. அவர்கள் எல்லாம் இப்படி இருக்கும்போது எனக்கு மட்டும் கலி யாணம் என்னத்திற்கு, பாட்டி? நீ வேணு மானால் கலியாணம் பண்ணிக்கொள். நான்கிட்ட இருந்து நடத்துகிறேன்' என்று சொன்னேன்..."

குண்டோதரன் இவ்வாறு கூறியதும், எல்லாரும் கொல்லென்று சிரித்துவிட் டார்கள். சிவகாமியின் அத்தையும்கூடச் சிரித்துவிட்டு, "என்னத்திற்காகச் சிரிக் கிறீர்கள்?" என்று சிவகாமியைக் கேட் டாள்.

"குண்டோதரனுக்குக் கலியாணமாம்!" என்றாள் சிவகாமி.

ஆயனர், "சரி, தம்பி! நாங்கள் இங்கே கிளம்பி வந்தது உனக்கு எப்படித் தெரிந் தது?" என்று கேட்டார்.

குண்டோதரன் சொல்கிறான்: "குருவே! பாட்டியிடம் அவசரமாகச் சொல்லி விட்டு ஓட்டம் ஓட்டமாய் நமது வீட்டுக்கு வந்து பார்த்தால், வீடு பூட்டிக் கிடந்தது! நம்முடைய குருநாதரே நம்மைக் கைவிட்டு விட்டார். இனிமேல் கடவுள் தான் நமக்குத் துணை என்று தீர்மானித்து அப்படியே மரத்தடியில் படுத்துத் தூங்கிப் போய்விட்டேன். 'அப்போது பாருங்கள்! கடவுளே பார்த்து அனுப்பியதுபோல் நமது குமார சக்கரவர்த்தியும் புதிய தளபதி பரஞ்சோதியாரும் அங்கே வந்து சேர்ந்தார்கள்!"

"யார் வந்தது?" என்று ஆயனர், சிவ காமி இரண்டு பேரும் ஏக காலத்தில் கேட்டார்கள்.

"மாமல்லரும் தளபதி பரஞ்சோதி யாரும் வந்தார்கள். குதிரை மேல் வந்தார் கள்! ஆகா! குதிரை என்றால், அதுவல் லவா குதிரை..."

"அப்புறம்?" என்றார் ஆயனர்.

"அவர்களுக்குப் பின்னால் இன்னும் பல குதிரை வீரர்கள் வந்தார்கள். கண்ண பிரான் ரதம் ஓட்டிக்கொண்டு வந்தான்.

"சரி, அப்புறம் என்ன நடந்தது?" என் றார் ஆயனர்"

மாமல்லர் வந்தார் என்று கேட் டதும் சிவகாமிக்குத் தலை சுற்றியது. தேகமெல்லாம் நடுங்கியது. என்னவெல் லாமோ கேட்க வேண்டுமென்று உள்ளம் துடித்தது. உதடுகளும் துடித்தன.

எனினும், "யார் வந்தது?" என்று கேட் டதற்குப் பிறகு அவளுடைய வாயிலிருந்து வார்த்தை எதுவும் வரவில்லை. ஆனால், விஷயத்தைச் சொல்லாமல் குண்டோ தரன் என்னவெல்லாமோ சொல்லிக் கொண்டிருந்ததில் அவளுக்குக் கோபமாய் வந்தது.

குண்டோதரன் சொல்கிறான்: "குருவே! வீடு பூட்டிக் கிடந்ததைக் கண்டதும்

எனக்கு எவ்வளவு கோபம் வந்ததோ அதைவிட மூன்று மடங்கு கோபம் நமது குமார சக்கரவர்த்திக்கு வந்துவிட்டது. மாமல்லர் குதிரையைத் திருப்பி விட்டுக் கொண்டு போன வேகத்தைப் பார்க்க வேண்டுமே? அடே அப்பா! நமது குமார சக்கரவர்த்திக்கு மூக்குக்கு மேல் இவ்வளவு கோபம் வரும் என்பது எனக்குத் தெரியவே தெரியாது. குமார சக்கரவர்த்தியின் குதிரை திரும்பியதும், மற்றக் குதிரைகள் சடசடவென்று திரும்புவதற்குப் பட்ட பாட்டைப் பார்க்க வேண்டுமே... என்ன அவசரம்? என்ன தடபுடல்...? நான் கண்ணைக் கசக்கிக் கொண்டு எழுந்து மரத்தின் பின்னாலிருந்து வெளியே வருவதற்குள்ளே அவ்வளவு குதிரைகளும் காற்றாய்ப் பறந்து மறைந்துபோய்விட்டன..."

சிவகாமியின் உள்ளத்தில் அப்போது மகிழ்ச்சி, பயம், கோபம், கவலை முதலிய உணர்ச்சிகள் ததும்பி, புயற்காற்று அடிக்கும்போது சமுத்திரம் கலங்குவதுபோல் கலங்கச் செய்துகொண்டிருந்தன. மாமல்லர் தன்னைத் தேடி வந்தார் என்பதில் மகிழ்ச்சி. அவருக்கு வந்த கோபத்தைக் கேட்டதில் பயம். அவர் வருவதற்கு முன்னால் கிளம்பும்படி செய்த நாகநந்தியின் மேல் கோபம்; செய்த தவறை எப்படித் திருத்துவது என்பது பற்றிக் கவலை _ இப்படிப்பட்ட பலவகை உணர்ச்சிகளுக்கிடையே ஒரே ஒரு விஷயத்தைத் தெரிந்து கொள்ள அவளுக்கு ஆவல் துடிதுடித்தது.

ஒருவாறு நெஞ்சை உறுதிப்படுத்திக் கொண்டு, "அப்பா! குண்டோதரன் சொல்வது எனக்கு நிஜமாகத் தோன்றவில்லை. குமார சக்கரவர்த்தியாவது, நம் வீட்டுக்கு வரவாவது? அவர்தான் யுத்தத்துக்குப் பயந்துகொண்டு கோட்டையில் ஒளிந்துகொண்டிருந்தாரே!" என்றாள்.

ஆயனர் அதற்கு மறுமொழி சொல்லத் தெரியாதவராய் குண்டோதரனைப் பார்க்க, அவன், "குருவே! இப்படிப்பட்ட நாராசமான வார்த்தைகள் சிவகாமி அம்மையின் வாயிலிருந்துதானா உண்மையில் வெளி வந்தன? வீராதி வீரரான மகாமல்லராவது, யுத்தத்துக்குப் பயந்து கோட்டையில் ஒளிந்துகொண்டிருக்காவது? இப்பேர்ப்பட்ட கொடிய அவதூறை எந்தப் பாவி சிவகாமி அம்மையின் காதில் போட்டது? சக்கரவர்த்தியின் கட்டளைக்காக அல்லவா மாமல்லர் இத்தனை நாளும் கோட்டைக்குள்ளே இருந்தார். சக்கரவர்த்தியின் ஆக்ஞை வந்தவுடனே மாமல்லர் நேரே போர்க்களத்துக் கல்லவா புறப்பட்டுப் போகிறார்!"

"போர்க்களத்துக்கா? எந்தப் போர்க்களத்துக்கு?" என்று ஆயனர் கேட்க, "தெரியாதா, குருவே? நாடு நகரமெல்லாம் அறிந்த விஷயமாயிற்றே? மகேந்திர சக்கரவர்த்தி வடபெண்ணைக் கரையில் முடக்கப்பட்டிருக்கும் தைரியத்தினால், கங்க நாட்டுத் துர்விநீதன் காஞ்சியின் மேல் படையெடுத்து வரும் செய்தி தங்களுக்குத் தெரியாதா? அவனையும் அவனுடைய படையையும் எதிர்த்துத் துவம்ஸம் செய்வதற்குத்தான் மாமல்லர் திருக்கழுக்குன்றத்திலிருந்து நமது தற்காப்புப் படையுடன் போயிருக்கிறார். சற்று முன்னால், இந்தச் சாலையில் ஒரு படை போயிற்றே. நீங்கள் பார்க்கவில்லையா? அந்தப் படை தென்பெண்ணைக் கரையிலேயே காவலுக்கு இருந்த படை; போர்க்களத்துக்குப் போகும் மாமல்லருடனே சேர்ந்து கொள்ளத்தான் போகிறது. இதையெல்லாம் நீங்கள் தெரிந்து கொள்ளவில்லையா?" என்றான் குண்டோதரன்.

வெகு சாதுவாகவும், பேசவே தெரியாத மந்தனாகவும் இத்தனை நாளும் தோன்றிய குண்டோதரன் இப்போது இவ்வளவு வாசாலகனாய் மாறியிருந்தது ஆயனருக்கு ஒரே ஆச்சரியத்தை அளித்தது. அவனிடம் இன்னும் ஏதோ அவர் கேட்கப் போனார். அந்தச்சமயம், நாகநந்தி கலக்கமடைந்த குரலில், "ஆயனரே! நன்றாய் இருட்டிவிட்டதே? மிச்ச வழியையும் கடந்து இரவு தங்குவதற்கு அசோகபுரிக்குப் போய் விட வேண்டாமா! குண்டோதரன் நம்முடன் வருகிறானே, எல்லா விவரங்களும் சாவகாசமாய் அவனிடம் கேட்டுக்கொண்டால் போகிறது!" என்றார்.

உண்மையிலேயே அப்போது நன்றாய் இருட்டி விட்டிருந்தபடியால், நாகநந்தியின் முகத்தை யாரும் நன்றாய்ப் பார்க்க

முடியவில்லை. பார்க்க முடிந்திருந்தால், அந்தக் கோரமான முகம் அப்போது இன்னும் எவ்வளவு சர்வகோரமாகியிருக்கிறதென்று அறிந்து பயந்து போயிருப்பார்கள்.

ஆயனர் சிவகாமியைப் பார்த்து "குழந்தாய்! அடிகள் கூறுவது உண்மைதான். வண்டியில் ஏறிக் கொள்! குண்டோதரனிடம் எல்லாம் பிறகு விவரமாய்க் கேட்கலாம்" என்றார்.

சிவகாமியின் உள்ளத்தில் குண்டோதரனைக் கேட்பதற்கு எத்தனையோ கேள்விகள் தோன்றிக் கொண்டிருந்தன. ஆனால் எல்லாவற்றிற்கும் மேலாக அவள் ஒரு கேள்வி கேட்க விரும்பினாள். அதாவது குண்டோதரனுக்குக் குதிரை எப்படிக் கிடைத்தது? - ஒருவேளை குமார சக்கரவர்த்தியின் கோபம் தணிந்து, தங்களைப் போய்த் திருப்பி அழைத்து வருவதற்காக அவர்தான் குண்டோதரனுக்குக் குதிரை கொடுத்து அனுப்பியிருக்கிறாரோ என்று அவள் மனத்திற்குள்ளே ஒரு சபல நினைவு தோன்றியது.

எனவே "அப்பா! அத்தை வண்டியில் ஏறிக் கொள்ளட்டும்; நான் சற்று நேரம் உங்களுடன் நடந்து வருகிறேன்" என்றாள்.

## இருபத்து ஒன்றாம் அத்தியாயம்

# குதிரை கிடைத்த விதம்

அத்தை வண்டியில் ஏறிக் கொண்டதும் வண்டி புறப்பட்டது. மற்றவர்கள் பின்னால் நடந்து சென்றார்கள். குண்டோதரனும் தன் குதிரையின் தலைக் கயிற்றைப் பிடித்து நடத்திக்கொண்டு வந்தான்.

"அப்பா! குண்டோதரனுக்குக் குதிரை எப்படிக் கிடைத்தது? அதைச் சொல்லும்படி கேளுங்கள்!" என்றாள் சிவகாமி.

"குண்டோதரனுக்குக் குதிரை ஏறத் தெரியும் என்றே எனக்குத் தெரியாது அம்மா! குண்டோதரா, நீ எப்போது குதிரை ஏற்றம் கற்றுக்கொண்டாய்?" என்று கேட்டார் ஆயனர்.

"குருவே! உலகத்தைத் துறந்து, காவித் துணி புனைந்த புத்த பிக்ஷுக்கள்கூட இந்த நாளில் குதிரை ஏறுகிறார்களே! இந்தக் குதிரை கூட ஒரு இளம் புத்த பிக்ஷு ஏறிக் கொண்டு வந்ததுதான். குருவே! அந்த இளம் பிக்ஷுவை ஏரியிலே தள்ளிவிட்டு நான் குதிரை மேல் ஏறி வந்துவிட்டேன்!" என்று குண்டோதரன் கூறிக் கலகலவென்று சிரித்தான்.

குண்டோதரன் சொல்லுவதெல்லாம் நாகநந்திக்குக் கோபம் மூட்டுவதாயிருப்பதைக் கண்ட ஆயனர், "குண்டோதரா! இது என்ன? என் சிஷ்யன் என்று பெயர் வைத்துக்கொண்டு இப்படியெல்லாம் செய்யலாமா? கொஞ்சமும் நன்றாயில்லையே!" என்றார்.

சிவகாமி, "அப்பா! குண்டோதரன் அப்படியெல்லாம் ஒன்றும் செய்திருக்க மாட்டான். வேடிக்கைக்காகச் சொல்கிறான்" என்றாள்.

"இல்லை, இல்லை! நிச்சயமாகத்தான் சொல்கிறேன். இங்கேயிருந்து இரண்டு காத தூரத்தில் சாலை ஓரமாக ஒரு ஏரி இருக்கிறதே, நீங்கள் பார்க்கவில்லையா? அந்த ஏரியிலேதான் அந்த இளம் பிக்ஷுவைத் தள்ளினேன்" என்றான் குண்டோதரன்.

நாகநந்தி பெரிதும் கலக்கமடைந்த குரலில், ஆயனருக்கு மட்டும் கேட்கும்படியாக, "சிற்பியாரே! என்ன நடந்தது என்று விவரமாய்க் கேளுங்கள்!" என்றார்.

ஆயனர் அவ்விதமே விவரமாய்ச் சொல்லும்படி கேட்டதன் மேல் குண்டோதரன் சொன்னான்: "உங்களை வீட்டில் காணாமல், 'அடடா! நம்முடைய குரு இப்படி நம்மைக் கைவிட்டு விட்டுப் போய் விட்டாரே!' என்று நான் கவலையுடன் மரத்தடியில் படுத்துத் தூங்கிக்கொண்டிருந்தேன். பல குதிரைகள் வரும் சப்தம் கேட்டு விழித்துக்கொண்டு, மரத்தின் மறைவிலிருந்தபடி பார்த்தேன். வந்தவர்கள் அனைவரும் அவசரமாய்த் திரும்பிப் போய்விட்டார்கள். 'அடடா! இவ்வளவு குதிரைகளில் நமக்கு ஒரு குதிரை கிடைத்தால் நமது குருவைப் போய்ப் பிடித்து விட

லாமே? கால்நடையாகப் போய்ப் பிடிக்க முடியுமா?' என்று நான் கவலைப்பட்டுக் கொண்டு உட்கார்ந்திருக்கையில், ஒரு இளம் புத்த பிக்ஷு சற்று தூரத்திலிருந்த இன்னொரு மரத்தடியின் மறைவிலிருந்து வெளியே வந்தார். அந்த வீட்டுக்கு நாகநந்தி அடிகள் வந்திருந்தாரா என்று என்னைக் கேட்டார். அப்போது தாமரைக் குளக் கரையில் இந்த அடிகளைப் பார்த்த நினைவு எனக்கு வந்தது. 'அவர் பெயர் என்னவோ எனக்குத் தெரியாது. ஒரு பிக்ஷுவைத் தாமரைக் குளக்கரையில் கண்டேன்' என்றேன். இளம் பிக்ஷு சற்று யோசித்து விட்டுக் கிளம்பினார். வழித்துணை கிடைத்தது என்ற சந்தோஷத்துடன் நானும் அவருடன் கிளம்பினேன். ஆனால் அந்த இளம் பிக்ஷு என்னை ஏமாற்றிவிட்டார். கொஞ்ச தூரம் போனதும் காட்டின் மறைவில் கட்டியிருந்த இந்தக் குதிரை மேல் ஏறிக் கொண்டு, என்னிடம் சொல்லிக் கொள்ளக் கூடச் செய்யாமல் வேகமாகப் போய்விட்டார். ஆகா! யாரை நம்பினாலும் நம்பலாம். புத்த பிக்ஷுக்களை மட்டும் நம்பக்கூடாது! இதோ நம்முடன் வரும் அடிகள் நீங்கலாகச் சொல்கிறேன்" என்றான் குண்டோதரன்.

ஆயனர், "குண்டோதரா! பெரியோர்களாகிய புத்த பிக்ஷுக்களைப் பற்றித் தூஷணை சொல்லாதே! பிறகு நீ என்ன செய்தாய் என்று சொல்லு!" என்றார்.

"நானா? நான் என்ன செய்வது, குருவே! 'நமக்குக் குதிரை இல்லாமற் போனால் போகட்டும்; கடவுள் கொடுத்த இரண்டு கால்கள் இருக்கிறதல்லவா?' என்று எண்ணிக்கொண்டு கிளம்பினேன். இரண்டு நாள் பிரயாணம் செய்ததில் கால்வலி கண்டு இன்று மத்தியானம் ஏரிக்கரையில் சாலை ஓரமாக உட்கார்ந்து கொண்டிருந்தேன். அப்போது பாருங்கள். அதே இளம் பிக்ஷு குதிரை மேல் வந்தார். 'அடிகளே! இதென்ன, எனக்கு முன்னால் கிளம்பினீர்கள். பின்னால் வருகிறீர்களே!' என்று கேட்டேன். என்னைப் பார்த்ததில் அவருக்கு அதிக ஆச்சரியமாய்ப் போய்விட்டது. 'ஆமாம், அப்பா! இந்தக் காலத்தில் கால்நடைப் பிரயாணத்தை விடக் குதிரைப் பிரயாணம்தான் அதிக ஆபத்தாயிருக்கிறது. பல்லவ ராஜாங்கம்தான் தரித்திரம் பிடித்த ராஜாங்கமாயிருக்கிறதே? எங்கேயாவது குதிரையைக் கண்டால் யுத்தத்துக்கு வேண்டுமென்று கைப்பற்றிக் கொள்கிறார்களாமே? அதற்காகப் பயந்து பயந்து வர வேண்டியதாயிருந்தது!' என்றார். அப்புறம் பிக்ஷு குதிரை மேலும் நான் கால்நடையாகவும் கொஞ்ச தூரம் வந்தோம். அப்போது பிக்ஷு அடிக்கடி 'தாகமாயிருக்கிறது', 'தாகமாயிருக்கிறது' என்று சொல்லிக் கொண்டே வந்தார். அவர் மேல் எனக்கு மிகவும் பரிதாபம் உண்டாகிவிட்டது. 'அடிகளே! இந்தத் திவ்வியமான ஏரியில் தண்ணீர் குடித்துத் தாகம் தணித்துக் கொள்ளுங்களேன்!' என்று சொல்லி அவரைக் குதிரை மேலிருந்து ஒரு தள்ளுத் தள்ளினேன். பிக்ஷு ஏரியில் விழுந்தார். அடடா! என்ன ஆனந்தமாக அவர் ஏரித் தண்ணீர் குடித்தார் தெரியுமா..."

இதைக் கேட்ட சிவகாமியினால் சிரிக்காமல் இருக்க முடியவில்லை. ஆயனர், "அம்மா, இதென்ன அசந்தர்ப்பமான சிரிப்பு?" என்று அதட்டிவிட்டு, "அடபாவி! அப்புறம் என்னடா செய்தாய்?" என்று குண்டோதரனைப் பார்த்துக் கேட்டார்.

"குருவே! புத்த பிக்ஷுவுக்குத் தண்ணீர் கொடுத்துத் தாகத்தைத் தணிப்பது பாவமா?" என்றான் குண்டோதரன்.

"அப்புறம் என்ன செய்தாய், சொல்!" என்று ஆயனர் மிகவும் கடுமையான குரலில் கேட்டார்.

"என்ன செய்தேனா? பிக்ஷுவுக்கு நீந்தத் தெரியாதென்று தெரிந்ததும் கரையிலே கிடந்த அவருடைய மேல் வஸ்திரத்தை எடுத்து அதன் ஒரு முனையைக் கரையிலிருந்த மரத்தின் வேரில் கட்டினேன். இன்னொரு முனையை அவர் பிடித்துக் கொண்டதும், 'பிக்ஷுவே! மெதுவாகக் கரையேறி வந்து சேருங்கள்! நான் போகிறேன்!' என்றேன். அப்போது அவர், 'ஐயோ! ஓலை! ஓலை!' என்று அலறினார். 'என்ன ஓலை?' என்று கேட்டேன். 'நாகநந்திக்குக் கொண்டு வந்த ஓலை! கரையிலே கிடக்கிறதா, பார்!' என்றார். கரையிலே பார்த்தேன். ஒரு ஓலை கிடந்தது. அதை எடுத்து அவருக்குக் காட்டி, 'ஓலை பத்திரமாயிருக்கிறது. கவலை வேண்டாம்' என்று சொல்லிவிட்டுக் குதிரை மேல் ஏறிக்கொண்டேன். அவ்வளவுதான்; இங்கே வந்து சேர்ந்தேன்'

## அருள்வாக்கு

அத்ரிஜா என்னும் மலைமகள் இருக்கிறாளே, ஸாக்ஷாத் பார்வதி, அவளுக்குப் பர்த்தாவிடத்தில் பொய்க்கோபம்.

பார்வதி கடுகடுவென்று உட்கார்ந்திருக்கும்போது பரமசிவன் போய் அவள் காலில் விழுகிறார். 'ப்ரணத சிவ' - ப்ரணாமம், நமஸ்காரம் பண்ணுகிறாராம் சிவ பெருமான்.



ஜடாபாரத்தை அம்பாள் பாதத்தில் தடாலென்று அவர் சாய்க்கிறபோது அதிலுள்ள பிறைச்சந்திரன் 'குபுக்'கென்று நன்றாக வெளிப்பட்டுப் பிரகாசிக்கிறது.

இந்தத்தருணத்தில் யானைக் குட்டி, ப்ரிய புத்திரன் குறும்பாக விளையாடிக் கொண்டு தன் தலையில் இருக்கும் சந்திரனைத் தும்பிக்கையால் பிடித்திழுக்கிறது என்றால் அந்தப் பரமேச்வரத் தகப்பனாருக்கு எத்தனை சந்தோஷமாக இருக்கும்? கல்பனையாக நினைத்துப் பார்த்தாலும் நமக்கே அந்தக் காட்சியில் ஆனந்தம் பொங்கிக்கொண்டு வரும்போது நேராகத் தாமே அந்த விளையாட்டுக்கு ஆளானவருக்கு, அதுவும் சொந்தப் பிதாவாகவும் இருப்பவருக்கு அப்படியே பூரித்துக்கொண்டு தானே சந்தோஷம் ஏற்பட்டிருக்கும்? சந்த்ர மௌலீச்வரன் என்று தனக்குப் பெரிய பெயர் கொடுத்துள்ள அந்த சிரோ பூஷணத்தைப் பிள்ளை அபகரிக்கப் பார்ப்பதே மகுடாபிஷேகம் செய்விக்கிற மாதிரி அவருக்குப் பேரானந்தத்தைக் கொடுத்துவிட்டது.

பிள்ளை சேஷ்டையின் சந்தோஷத்தில் இரண்டு பேருக்குமே தங்கள் சண்டை சமாசாரம் மறந்துபோய் விட்டது.

குழந்தை விளையாட்டில் தங்கள் விரோதத்தை மறந்து சிரித்து விடுகிறார்கள். இருவரும் சந்தோஷப்பட்டுக் கொண்டு, ஹ்ருதயம் ரொம்பச் சிரித்துக் கொண்டு... 'ஹ்ருதய ஸ்மிதாப்யாம்' என்பது ஹ்ருதயபூர்வமாகச் சிரிக்கிற பார்வதி பரமேச்வரர்களைக் குறிப்பிடுவது. வாய் சிரிப்பது மட்டுமில்லை, இவள் போலியாய்க் கோபித்துக் கொண்டிருப்பது, அவர் போலியாய் இவளுக்கு அடிமை மாதிரி நமஸ்காரம் பண்ணுவது - போலியில்லாமல், போலிச் சிரிப்பாய் இல்லாமல், வாய்ச் சிரிப்பாய் மட்டுமில்லாமல், ஹ்ருதயமே மலர்ந்த, அந்த மலர்ச்சியில் வாயாலும் சிரிப்பவர்களாக அவர்கள் ஆகி விடுகிறார்கள்.

**- ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்.**

என்று குண்டோதரன் தன் கதையை முடித்தான்.

குரோதம் நிறைந்த குரலில் நாகநந்தி, "ஆயனரே! தயவு செய்து உமது சீடனிடமிருந்து ஓலையை வாங்கிக் கொடுங்கள்!" என்றார்.

ஆயனரும் கலக்கத்துடன், "குண்டோதரா! என் பெயரைக் கெடுக்கவா நீ என் சீடனானாய்? நல்ல காரியம் செய்தாய்! போகட்டும், இவர்தான் நாகநந்தியடிகள். அந்த ஓலையைக் கொண்டு வந்திருக்கிறாயா? இப்படிக் கொடு!" என்றார்.

"குருவே! அப்படியா? நான் நினைத்தது நிஜமாய்ப் போயிற்றே? இவர்தானா நாகநந்தியடிகள்! சுவாமி! இதோ ஓலை!" என்று குண்டோதரன் நாகநந்தியடிகளிடம் ஓலையைக் கொடுத்தான். அதை அவர் மௌனமாக வாங்கிக்கொண்டு சாலை மரங்களின் வழியாக வந்து கொண்டிருந்த நிலாக்கிரணங்களின் உதவியினால் படிக்க முயன்றார். ஆனால் படிக்க முடியவில்லை என்று தெரிந்தது.

பிக்ஷுவின் நடை முன்னைக் காட்டிலும் வேகத்தையடைந்தது. அந்தச் சாலையில் வண்டிச் சப்தத்தையும் குதிரையடிச் சப்தத்தையும் மனிதர் காலடிச் சப்தத்தையும் தவிர, மற்றபடி நிசப்தம் குடிகொண்டது. மனிதரின் பேச்சுச் சப்தம் அடியோடு நின்றது.

(தொடரும்)



● பேரா.சு.சண்முகசுந்தரம்

# மூக்கு குத்தி மூக்கள்

நம்பி கைக்கொள்வதுதான் நம்பிக்கை என்பார்கள். இது பொதுவான விளக்கம். சிலவற்றை மறுக்க முடியாத உண்மை என்று கருதி ஏற்றுக் கொள்வதுதான் நம்பிக்கை என்றும் விளக்கம் சொல்கின்றனர்.

நம்பிக்கை என்றுதான் இருக்கிறதேயொழிய நல்ல நம்பிக்கைகள், கெட்ட நம்பிக்கைகள், மூடநம்பிக்கைகள் என்று இல்லை. இருப்பதாகச் சொல்வது சரியல்ல.

நம்பிக்கைகளின் அடிப்படை மனிதனின் அகமனம். மூளைக்கு அகமனமானது காரணகாரியங்களுக்கு அப்பாற்பட்ட எண்ணங்களை உணர்த்துகிறது. மூளையில் பதியும் அவ்வெண்ணங்கள் உண்மையாகி உறுதிப்படும்போது நம்பிக்கையாகிறது.

கிராமங்களோ நகரங்களோ மனிதன் எங்கு வாழ்ந்தாலும் அடிப்படையில் மனிதன்தான். படிப்பு, வாசிப்பு, பகுத்தறிவு, பொதுக் கேள்வி போன்றவை மனிதனின் நம்பிக்கைகளை அசைத்துப் பார்த்தாலும் முழுக்க அகற்றி விடுவதில்லை. மேற்கூறிய வசதிகள் குறைந்த கிராமங்களில் நம்பிக்கை அசைக்கக் கூட முடியாத அளவுக்கு ஆலமரமாய் விழுது பரவி விளங்கும். வித்தியாசம் என்று பார்த்தால் இதனைத் தவிர நாட்டுப்புறத்துக்கும் நகர்ப்புறத்துக்கும் வேறுபாடு இல்லை என்றே சொல்லலாம்.

மனிதனின் வாழ்க்கை பிறப்பு முதல் இறப்பு வரை நம்பிக்கை என்னும் நரம்புகளாலேயே பின்னப்பட்டுள்ளது. 'ஆடி மாசம் எமகண்டத்துல பொறந்த கொழந்தை தாய் மாமன் தலையை வாங்கும்' 'குழந்தை மாலை சுத்திப் பொறந்தா தாய் மாமனுக்கு ஆகாது' அதற்குப் பரிகாரம் கோவிலிலே போய்








மாலை சுத்தி வெளக்கு எடுக்கனும். பாரதிராஜாவின் 'கிழக்கு சீமையில்' இதனை இன்றும் பார்க்கலாம்.

எங்க ஊரில் (திருநெல்வேலி மாவட்டத்து கால்கரை) ஒருவனுக்கு மூக்கு குத்தி மூக்கன் என்று பெயர். அவன் வீட்டில் அவனுக்கு முன்பு பிறந்த குழந்தைகள் வரிசையாக இறந்து போயின. கடைசியில் இவனுக்கு இதுபோல் செய்ய, அவன் பிழைத்துக் கொண்டான். பக்கத்து ஊரில் ஒருத்தன் பெயர் 'தவிடு'. காரணம் அதே நம்பிக்கைதான்.

பிள்ளை பிறந்த நட்சத்திரத்தை வைத்து பெயரிடுவார்கள். கேட்டால், நட்சத்திரத்தின் நன்மைகள் பிள்ளைக்கும் வந்துவிடும் என்பார்கள். கார்த்திகையில் பிறந்தால் கார்த்திக்; ரோகிணியில் பிறந்தால் ரோகிணி. பரணியில் பிறந்தால் தரணி ஆள்வான். ஆண் மூலம் அரசாளும்; பெண் மூலம் நிர்மூலம். ஒரே நட்சத்திரம்; ஆணுக்கொரு நம்பிக்கை பெண்ணுக்கொரு நம்பிக்கை!

குழந்தைக்குக் காது குத்தி விட்டால் எமன் நெருங்க மாட்டான். 'ஏமாற்றுவது எமனையா? தன்னையேவா?' இப்படியெல்லாம் கேட்கக் கூடாது; நம்புங்கள். அழகான குழந்தைக்குத் திருஷ்டி ஏற்படும். கண்ணேறு கழித்தால் சரியாகும்.

"கண்ணாம்பும் மஞ்சளும்
சுத்திஎறி பிள்ளைக்கு"

என்று தாலாட்டில் பாடுவர். பாடுவது மட்டுமல்ல, சீனிகாரத்தைச் சுற்றி எரிப்பார்கள்; மிளகாய் வத்தலையும் உப்பையும் சேர்த்து பிள்ளை, பெரியவர், மணமக்கள் யாராயிருந்தாலும் மூன்று முறை தலையைச் சுத்தி அடுப்பில் போடுவர். நன்றாக வெடித்தால் மோசமான திருஷ்டி என்று அர்த்தம். ஆரத்தி சுத்துவதும் அதற்குத்தான். திருஷ்டி பூசணிக்காய்தான் உங்களுக்குத் தெரியுமே.

சகுனங்கள் ஏராளம். புறப்படும் போது எங்கே போறான்னு கேட்கக் கூடாது; விதவை வரக் கூடாது; விறகுக் கட்டோடோ வைக்கோல் கட்டோடோ எண்ணெய் டப்பாவோடோ எதிரே வந்திடவே கூடாது எவரும்.

"தலைவாசல் வாரபோது
தட்டுதடா நடையதுதான்"
"முடுக்கத்திலே வாரபோது
முடப்பூனை குறுக்கிடுமாம்"

என்று 'மெச்சும் பெருமாள் வில்லுப்

பாட்டில்' பாடுவார்கள். இவை எல்லாமே கெட்ட சகுனங்கள்.

அப்படியானால் நல்ல சகுனங்கள்தான் யாவை? போகும் போது தண்ணீர் குடத்தோடு யாராவது எதிரே வருகிறார்களா? அல்லது நல்ல சுமங்கலி வருகிறாரா? ஒ.கே. நாகர் கோவில் பக்கம் என் மாமனார் வீட்டில் இன் றைக்கும் கூட நான் எப்பொழுது போய் வந்தா லும் இதே வரவுதான். யாராவது வராவிட் டால் என்ன? ஏற்பாடு செய்து விடுவார்கள்!

கழுதை கத்தினால் நல்ல சகுனம். ஆந்தை அலறினால் கெட்ட சகுனம். யோகக்கார கழுதைதான். நரி வலப்பக்கம் போனால் நல் லது; இடப்பக்கம் போனால் கெட்டது. எப் படிப் போனால் என்ன? மேலே விழாமல் இருந் தால் சரி என்றுதான் இப்பொழுது நினைக்கத் தோன்றும்.

கெட்ட சகுனம் ஏற்பட்டால் அவ்வளவு தானா? இல்லை. அதற்கும் பரிகாரம் உண்டு. புறப்படும் போது ஏதாவது இடித்து விட்டதா? கவலையை விடுங்கள். உட்கார்ந்து ஒரு தம்ளர் தண்ணீர் குடியுங்கள் போதும்.

தும்முவது நல்ல சகுனமா? கெட்ட சகு னமா? கொல்லி மலைமக்களிடையே, ஆண் தும்மினால் கெட்ட சகுனம். பெண் தும்மி னால் நல்ல சகுனம். பாருங்கள் தும்மலில் கூட ஆண் பெண் பேதம்தான்!

வழிபாட்டு நம்பிக்கைகளுக்குக் கணக்கு வழக்கே இல்லை. சொல்வதானால் மனித வாழ்வில் மனித ஆற்றலுக்கு அப்பாலும் ஓர் ஆற்றல் இருக்கிறது என்று தொடக்கக் கால மக்களின் நம்பிக்கைதான் வழிபாடு மற்றும் சமயம் ஆனது. தெய்வங்கள் பிள்ளை வரம் தரும். அரசமரத்தடி பிள்ளையாரைச் சுற்றி வந் தால் பிள்ளை வரும் என்பது நம்பிக்கை. அரசை நம்பி புருசனை கைவிடலாமா? என் பது பழமொழியின் கேள்வி. எனினும் இதில் கொஞ்சம் அறிவியல் உண்மை, மருத்துவத் தன்மை உள்ளது என்கிறார்கள்.

அங்காளம்மன் கோவிலின் பலிச்சோறு தின்றால் குழந்தை பிறக்கும். கூத்தாண்டவர் கோயில் அரவான் களப்பலியின் போது பொலிச்சட்டிச் சோறு உண்டால் குழந்தை பிறக்கும். 'மயானக் கொள்ளை'யில் கொள்ளை யடித்தால் குழந்தை பிறக்கும். இந்த நம்பிக் கைகளை பாண்டிச்சேரி பக்கம் பார்க்கலாம்.

மழை பற்றியும் 'எக்கச்சக்கமாக' உள்ளன நம்பிக்கைகள். மழைக் கஞ்சி எடுக்கலாம்; கொடும்பாவி கொளுத்தலாம்; பிள்ளையாரைக் குப்புறத் தள்ளலாம்; பிள்ளையாரை மாட்டுச் சாணியாலோ மிளகு வத்தல் குழம்பாலோ மூடி விடலாம். மழை வந்து விடும். இல்லாவிட்டால் பிள்ளையார் நாறிப் போவார் அல்லது காரத்தால் எரிந்து போவார்.

எறும்புகள் முட்டைகளோடு போனால், தவளைகள் கத்தினால், சூரியன் 'எரிஞ்சிக்கிட்டு' மறைந்தால், பசுமாடு கும்மாளம் போட்டால்; புரட்டாசி ஐப்பசி மாதங்களில் சனி மூலையில் மேகம் கருத்தால்_ மழை கொட்டும்.

தாங்க முடியாத மழை. நிறுத்த வேண்டும். இருக்கவே இருக்கிறது நிர்வாண பூஜை! கிழக்கே போகும் ரயிலில் போனால் மட்டு மல்ல; பாண்டிச்சேரி பக்கம் போனாலும் பார்க்கலாம் என்பார் சிலம்பு நா. செல்வராசு.

பேய், பிசாசு, பில்லி சூனியம், பல்லி பலன்... இப்படி மூட்டை மூட்டையாக நம்பிக்கைகள். கன்னிப் பெண்களை காத்து, கறுப்புப் பிடித்துக் கொள்ளும். பூ வாசம், மாமிச மணம் பேய் களுக்கு ரொம்ப இஷ்டம். கப்பென்று வரும். கரும்பு, கரித்துண்டுகளைக் கண்டால் போதும்... காற்றாய்ப் பறக்கும். அவற்றுக்குக் கால் இல்லை; அதனால் ஓடாது. சிலர் எருக்கம் குச்சியால் முளை அடிப்பர்.

கிராமத் தெய்வங்களைக் கைத் தூண்டி காட்டக்கூடாது. கண் அவிந்து போகும். காட்டி விட்டால் ஒரே பரிகாரம்; சுட்டிய விரலைப் பல்லால் கடித்துத் தலையை மூன்று முறை சுற்றி விடவேண்டும்.

சாவு பற்றியும் போதுமான அளவிற்கு நம்பிக்கைகள் இருக்கின்றன. சனிப் பிணம் தனிப் போகாது! தனியே போனால் என்ன பயமோ? நாய் ஊளை இரவில் கேட்டால் மரணம் வரும். கனவிலே கல்யாணக் காட்சி யைக் கண்டால் சாவு வரலாம். மகன் கொள்ளி வைத்தால்தான் ஆன்மா சாந்தி அடையும்; மாரடித்தால் மறு உலகம் கிடைக்கும்.

இப்படி உணவு, உடை, பிறப்பு, திருமணம், கனவு, சகுனம், வழிபாடு, இறப்பு என வாழ்க்கை முழுவதும் நம்பிக்கைகளாலேயே நகர்கின்றது.

நல்லது நடக்கும்; நம்புவோம். ○

''மாட்டுப் பண்ணையை வித்துட்டு நர்சரி ஸ்கூல் நடத்துறியே... ஏன்?''

''இங்கேதான் அதிகமா கறக்க முடியுது!''

— தஞ்சை தாமு





● ஏக்நாத்

# குச்சி குச்சி ராக்கம்மா..!

மாலை வேளைகளில் வீட்டு வாசலில் புழுதி மண் பறக்க, கிராமத்தில் சிறுவர்கள் ஆடும் விளையாட்டுக்கள் மனத்தை மத்தாப்பூவாக்குபவை.

இந்த ஆட்டங்கள் இன்று, தேடிப் பிடிக்க வேண்டிய நிலையிலிருந்தாலும் அவற்றில் சிலவற்றை ஞாபகப்படுத்தும் விதமாக இந்தக் கட்டுரை.

**ஒரு குடம் தண்ணியெடுத்து...!**

கருக்கல் நேரம். ஜில்லென்ற காற்று தடவிச் செல்ல, ஏதாவது ஒரு வீட்டு முற்றத்தில் கூடுவார்கள் சிறுவர்களும் சிறுமிகளும். ஐந்து ஆறு சிறுமிகள் ஒருவர் பின் ஒருவராக நின்று கொள்வார்கள். இரண்டு பேர் மட்டும் நேரெதிரே நின்று இரண்டு கைகளையும் ஒன்றாகச் சேர்த்துக் கொள்வார்கள். இவர்கள், *"ஒரு குடம் தண்ணியெடுத்து ஒரு பூ பூத்ததாம், ரெண்டு குடம் தண்ணியெடுத்து ரெண்டு பூ பூத்ததாம்..."* என்று பத்து வரை ராகத்தோடு பாடிக் கொண்டிருப்பார்கள். இந்தப் பாடலினூடே, சேர்ந்திருக்கும் கைகளுக்குக் கீழாக மற்றச் சிறுமிகள் சுற்றிக் கொண்டே வருவார்கள். கடைசியில் வருபவரை லபக்கென்று கைக்குள்ளே பிடித்து வைத்துக் கொள்வார்கள். மாட்டிக் கொண்டவள் பரிதவிப்பாள். ஏடா கூட கேள்விக்குப் பதில் சொல்ல வேண்டுமே என்ற பரிதவிப்புதான் அது.

பிடிபட்டவளை விடுவிக்க மற்றவர்கள் *"இம்புட்டு பணம் தரேன் விடுடா துலுக்கா"* என்பார்கள். *"விடமாட்டேன் மலுக்கா"* என்று அவர்கள் மறுக்க, *"ராஜா மவளைக் கட்டித் தாரேன் விடுடா துலுக்கா"* என்பார்கள் திரும்பவும். அவர்களிடமிருந்து *"விடமாட்டேன் மலுக்கா"*தான் பதிலாய்.

இறுதியில், பிடிபட்டவளிடம், *"உன் புருஷன் பேரைச் சொல்லு, விடுறோம்"* என்பார்கள். அவள் அத்தை மகன் பெயரையோ அல்லது வேறு ஒரு பெயரையோ சொன்னதும் அவளை விட்டுவிட்டு, அவள் சொன்ன பெயரை வைத்து, "ஐ... பொண்டாட்டி" என்று கிண்டலடித்துச் சிரிப்பார்கள்.

இதே ஆட்டத்தைச் சிறுவர்கள் ஆடினால் ''உன் பொண்டாட்டிப் பெயரென்ன சொல்லு'' என்பார்கள்.

### கழற்சிக்கல் ஆட்டம்

வீட்டுத் திண்ணையில் இரண்டு அல்லது மூன்று பெண்கள் அமர்ந்து கொள்வார்கள். ஊர்க்கதையைப் பேசிக் கொண்டே இந்த ஆட்டத்தை ஆடுவார்கள்.

கழற்சிக்கல் என்பது சாதாரண கல்தான். ஆறு அல்லது பத்து கற்கள் தரையில் இருக்கும். கையில் ஒரு கல்லை வைத்துக் கொள்வார்கள். இந்தக் கல்லை மேலே போட்டு, அது கீழே வருவதற்குள் கீழிருக்கும் கல்லையும் மேலிருந்து வரும் கல்லையும் பிடிப்பார்கள். இப்படி ஒவ்வொன்றாக மொத்தக் கல்லையும் எடுக்க வேண்டும். பிறகு எல்லாக் கல்லையும் மொத்தமாக மேலே போட்டு கையைத் திருப்பி மொளியில் பிடிப்பார்கள். அப்போது கற்கள் கீழே விழாமல் இருக்க வேண்டும்.

இந்த ஆட்டத்திற்குப் பெரிய பாடல் இருக்கிறது.

*ஓரி உலகெல்லாம்*
*உலகெல்லாம் சூரியன்*
*சூரியன் தங்கைக்கும்*
*சுந்தரவள்ளிக்கும்*
*நாளை கல்யாணம்*

– என்று ஆரம்பிக்கும். இறுதியில், 'ஏந்தி, இறக்கி, ஏந்தின கையத் தாந்தொடக்கி' என்பதாக முடியும். பெண்களுக்கான பொழுது போக்கு விளையாட்டு இது. இதை எல்லா வயதைச் சேர்ந்தவர்களும் கிராமத்தில் விளையாடுவார்கள்.

### பொண்ணுயிருக்கா?

எதிரெதிர் பக்கமாக ஐந்தைந்து பேரோ, நான்கு நான்கு பேரோ நின்று கொள்வார்கள். கைகளைக் கோத்துக் கொண்டு நிற்கும் அவர்களில் ஒரு பிரிவைச் சேர்ந்தவர்கள் முன் கால்களை முன்னே நீட்டிப் பாடுவார்கள்.

*குச்சி குச்சி ராக்கம்மா*
*பொண்ணுயிருக்கா?*
*கூடசாலி ராக்கமா பொண்ணுயிருக்கா?*
*சாதிச் சனமெல்லாம்*
*பொண்ணுயிருக்கா? - உங்க*
*சம்பந்த வழி கூடி*
*பொண்ணுயிருக்கா?*

எதிர்ப் பக்கத்தைச் சேர்ந்தவர்கள் இதற்குப் பதிலளிப்பார்கள்.





''தலைவர் தன்னோட அனுபவத்தையெல்லாம் காசாக்குறார்?''

''என்ன செய்யறார்?''

''எல்லாக் கட்சிக்காரர்களுக்கும் பயன்படுற மாதிரி 'ரெய்டு சமயத்தில் நடந்து கொள்வது எப்படி'னு புத்தகம் எழுதிருக்காருன்னா பாரேன்!''

— அம்பை தேவா

---

*குச்சி குச்சி ராக்கம்மா பொண்ணுயில்ல*
*கூடசாலி ராக்கம்மா பொண்ணுயில்ல*
*சாதி சனத்துலயும் பொண்ணுயில்ல -*
*எங்க*
*சம்பந்த வழியிலயும் பொண்ணுயில்ல*
என்பார்கள்.

பிறகு முதலில் பாடியவர்கள் பத்து ரூபா தாரேன். நூறு ரூபாதாரேன். கம்மல், மூக்குத்தி தாரேன் பொண்ணுயிருக்கா? என்று கேட்டுக் கொண்டே போவார்கள். இதுக்கெல்லாம் அவர்கள் பக்கமிருந்து கடைசி வரை மறுப்பு சொல்வதுதான் இந்த விளையாட்டு. இந்த விளையாட்டை விளையாடும்போது, 'முளைச்சு மூணு இலை விடலை, அதுக்குள்ள பொண்ணு கேக்கோ உங்களுக்கு? என்று பெரிககள் விரட்டி விடுவதும் உண்டு.

### மெல்ல வந்து கிள்ளிப் போ!

மரத்தடியிலோ அல்லது வீட்டு வாசலிலோ மண் தரையில் இரண்டு பிரிவாக உட்கார்ந்திருப்பார்கள். ஒரு பிரிவைச் சேர்ந்த ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு பூப் பெயர்களை வைத்துவிடுவார்கள். இது மற்றப் பிரிவினருக்குத் தெரியாது. தலைவி ஒருத்தியும் இருப்பாள். இவள் எதிரணியில் இருக்கும் ஒரு சிறுமியின் கண்களைப் பொத்திக் கொண்டு, ''*மல்லிகைப்பூவே மல்லிகைப் பூவே மெல்ல வந்து கிள்ளிப்போ*'' என்று சொல்வாள். அந்தப் பூப் பெயரை உடையவள் வந்து கிள்ளிச் செல்வாள். கிள்ளி விட்டுச் சென்றவள் ஒன்றும் தெரியாதவள் போல வந்து அமர்ந்து கொள்வாள். இருந்தாலும் அவள் செயல்பாடுகள், நடுக்கம் காட்டி கொடுத்து விடும் என்பதற்காக, 'காலாட்டம், கையாட்டம்' என்று தலைவி சொல்வாள். உடனே எல்லோரும் காலை ஆட்டுவார்கள். கண்ணைப் பொத்தியிருந்த கையைத் தலைவி விடுவிப்பாள். இப்போது கிள்ளிச் சென்றவள் யாரென்று அவள் கண்டுபிடிக்க வேண்டும். சரியாகக் கண்டு பிடிக்கவில்லையென்றால் திரும்பவும் அவள் கண்ணையே பொத்துவார்கள்.

### கண்ணாமூச்சி

கிராமத்தில் சிறுவர்களை மிகவும் குஷிபடுத்தும் விளையாட்டு கண்ணாமூச்சியும், கள்ளன் போலீஸ் விளையாட்டும்தான்.

ஏதாவது ஒரு இடத்தில் ஒருவன் உட்கார்ந்து கொள்வான். இவன், ஒருவன் கண்களைப் பொத்திக் கொள்ள, மற்றவர்கள் எங்காவது ஓடி ஒளிந்து கொள்வார்கள். அந்த ஒருவனை 'தாச்சி' என்பார்கள். தாச்சி, அவன் கண்களை விட்டதும் தேடிக் கண்டுபிடித்து யாரையாவது தொட்டால் தொடப்பட்டவன் அடுத்த முறை தேட வேண்டும். அப்படியில்லாமல் கண்டுபிடிக்கும் முன்னே, ஒளிந்தவர்கள் தாச்சியை வந்து தொட்டுவிட்டால் முதலில் கண் பொத்தப்பட்டவனே திரும்பவும் தேட வேண்டும்.

இதுக்கு, 'கண்ணாமூச்சி ரேரே' என்ற பாடலும் உண்டு.

இம்மாதிரியான விளையாட்டுக்களை ஆடும்போது சிறுவர்களின் மகிழ்ச்சி அளவிட முடியாதது.

ஆட்டம் முடிந்து வீட்டுக்குச் செல்லும் போது,

*'அவரவர் வீட்டுக்கு*
*அவரைக் காயும் சோத்துக்குப்*
*பிள்ளைப் பெத்த வீட்டுக்குப்*
*புளியங்காயும் சோத்துக்கு*
*இன்னிக்குப் பிரிவோம்*
*நாளைக்குக் கூடுவோம்'* - என்று எல்லோரும் சப்தமாகப் பாடிக் கொண்டு பிரிவார்கள்.



• ஸ்ரீதாரணி

"பந்தல் நல்லா ஒசர்க்கத் தூக்கி இருக்கணும் தெரிஞ்சுதா...? கீழே வரிசையா அக்னிகுண்டம் இருக்கும். சமயத்துல ஜ்வாலை பெரிசா, திகுதிகுன்னு எரியும்..."

"சரிங்க சாமி!"

கட்டளைசாமி முன்னால் அப்பா கைகட்டி நின்று கொண்டிருந்தார். வாத்தியார் முன்னால் வாய்ப்பாடு ஒப்பிக்கிற போது நிற்கிற மாதிரியிருந்தது சுடலைக்கு.

ரொம்ப நேரமாக சாமி ஏதேதோ சொல்லிக் கொண்டிருக்க, அப்பா அடிக்கொரு தடவை, "சரிங்க சாமி!" போடுவது ஆச்சர்யமாயிருந்தது. சுத்துப்பட்டியில் எத்தனையோ விசேஷத்துக்குக் கீத்துப் பந்தல் போட்டிருக்கிறார் அப்பா. ஆனால் ஒருத்தரும் இப்படிக் கூப்பிட்டு வைத்து அவருக்குப் பாடம் படித்ததில்லை. ஒரு வாரமாய், தினம் மாயவரத்திலிருந்து வந்து போகிற இந்தச் சாமியானால், கீத்துக் கட்டை சரிபார்க்கிறதும் 'புதுக்கயிறு வாங்கியாச்சா?'ன்னு சந்தேகம் கேட்கிறதுமாக அப்பா கண்ணிலே விரலை விட்டு ஆட்டிக் கொண்டிருக்கிறது!

"சொன்னதெல்லாம் ஞாபகமிருக்கட்டும்!" கூட இருந்த கணக்குப் பிள்ளை புதுப் புது நோட்டாக எண்ணிக் கொடுக்க, கும்பிட்டு வாங்கி இடுப்பில் கட்டிக் கொண்டார் அப்பா.

கட்டளைசாமி சுருக்குப்பையை விரித்து திருநீறு எடுத்து அப்பா கையில் போட்டது. பூசிக் கொண்டார்.

சுடலை கொஞ்சம் தயங்கியபின் கையை நீட்ட, கமகமவென்று மணக்கும் திருநீறு அதில் தாராளமாய் விழுந்தது.

"சாமி கைல வாங்கிட்டே... அப்படியே நெத்தி நிறைய

பூசு...'' - அப்பா சொன்னபடி பூசிய போது அந்தத் திருநீறின் மணமும் ஜிலுஜிலுப்பும் மண்டைக்குள் இறங்குவது போலிருந்தது சுடலைக்கு!

முன்னே பின்னே திருநீறு பூசாதவன் இல்லை சுடலைமுத்து. எல்லைக்காளி கோயிலில் மசானக்கொள்ளை விடும்போது பூசாரி கொடுக்கிற திருநீறு வேறு மாதிரி இருக்கும். கற்பூரம் கொளுத்திய வாடையுடன், கையில் விழும்போதே நறநறக்கும்.

மேட்டுப்பட்டியில் இன்னும் இரண்டு கோயில்கள் கூட உண்டு. கிழக்காலே சிவன் கோயில், மேக்காலே பெருமாகோயில். பெருமாகோயிலில் திருநீறு இருக்காது. எப்போதேனும் ஒருநாள் விளக்கு கொளுத்தி துளசி தூவியிருப்பார்கள். கோயில் கிணத்தடியில் அருநெல்லி மரத்துக்காய் ருசியான ருசி.

சிவன் கோயிலுக்கு வேப்பம்பழம் பொறுக்கப் போவான் சுடலை. உள்ளே சாமி அழுக்கு வெள்ளைத் துணி சுற்றிக் கொண்டு இருட்டில் உட்கார்ந்திருக்கும். ஸ்டீல் தட்டில் திருநீறு, புழுதியெல்லாம் கலந்துபோய் சொற சொறக்கும். அம்பிகை சிலைக்கு முன்னால் திட்டாக எண்ணெய். குங்குமம் வேண்டுமானால், எப்போதோ வந்து போனவர்கள் பலி பீடத்தின் ஓரத்தில் தட்டி வைத்ததைத்தான் சுரண்டி இட்டுக் கொள்ள வேண்டும். எண்ணெய் வாசனை அடிக்காத நல்ல குங்குமம்,



பூட்டுப் போட்ட கம்பிக் கதவுக்குள்ளே பித்தளைக் கிண்ணியிலிருக்கும்.

கடலைக்கு நினைவு தெரிந்து ஒரே ஒரு நாள்தான் இந்தக் கோயிலில் பூஜை நடந்திருக்கிறது. சிமையிலிருந்து வந்த நாலு பேர் செருப்பு போடாமல் நடக்க அவஸ்தை பட்டுப் போனார்கள். ஐயரை அழைத்து வந்து பூவெல்லாம் போடச் சொன்னார்கள். புதுத்துணி போட்டார்கள் சாமிக்கு.

'நடு ஐயா வீட்டுப் பேரப் புள்ளைங்க' என்று அப்பாவும் தாத்தாவும் சொன்னார்கள்.

அவர்கள் போட்டுச் சென்ற பூ ரொம்ப நாட்களாகக் காய்ந்து கொண்டிருக்கிறது. சிவனுக்கும் அம்பிகைக்கும் கடலைதான் பேச்சுத் துணை. அதில் அவனுக்கு நிரம்பப் பெருமை. பள்ளிக்கூடத்தில் பிரம்படி வாங்கியதையும் சொல்லுவான்; சவுக்குத் தோப்பில் சந்திரமதி அக்காளை, கடைக்கார கோபாலு சினிமா மாதிரி கட்டிப் பிடித்துக் கொண்டிருந்ததையும் சொல்லுவான். ரஜினி படம் பார்த்த மறுநாள் சிவனாருக்கு யோகம்தான்! காட்சி காட்சியாக நடித்தே காட்டி விடுவான் கடலை. 'அண்ணாமலை'க்கப்புறம் கடலையின் சந்தோஷம் தணியவேயில்லை. வேப்பமரத்தடியில் கிடந்த கரித்துண்டை எடுத்து, எட்டிய உயரத்தில் சுவரை நிறைத்து எழுதினான் :

**'ரஜினி வாழுக!'** அழுத்தி எழுதி முடிப்பதற்குள் வியர்த்து விட்டது. ஓர் அடி பின்னுக்கு நகர்ந்து நின்று பார்த்தபோது, கோயிலே அழகாகி விட்டிருந்தது.

'என்ன சொல்றே...?' சாமியைப் பார்த்துக் கேட்டான் கடலை.

"சூப்பர்!" என்று சாமி சிரித்தபோது நிச்சயமாக அந்த ஆசீர்வாதம் ரஜினிக்குப் போய்ச் சேர்ந்திருக்கும் எனத் தோன்றியது.

அந்த ஈச்வரன் கோயில்தான் இப்போது கும்பாபிஷேகம். சிமையிலேயிருந்து வந்த நடு அய்யா வீட்டுப் பேரப் பிள்ளைகள் பணம் அனுப்பியிருக்கிறார்கள். மாயவரத்திலிருந்து கட்டளைசாமி வந்து மேல் பார்வை பண்ணுகிறார். ஆதீனசாமி கூட வருவார் என்று ஊர் பேசிக் கொள்கிறது. அவர் இவரை விடப் பெரியவராம்.

"அவர்தான் நிஜ சாமிடா! இவர் அவருக்கு அஸிஸ்டன்ட்டு..." - கண்ணன், எல்லாம் தெரிந்த மாதிரி கடலைக்குச் சொல்கிறான்.

கண்ணன் கும்பாபிஷேகம் பார்த்திருக்கிறான். சேந்தமங்கலத்தில் அவன் பாட்டன்

ஊரில் நடந்த போது, கால் பரீட்சைக்கு டிமிக்கி கொடுத்துவிட்டுப் போய்ப் பார்த்திருக்கிறான்.

மிட்டாய்க் கடை, குடை ராட்டினம் எல்லாம் இருக்குமாம். நாயனக்காரர் கூட வருவாராம்...

கடலைக்குச் சந்தேகமாய் இருந்தது. "காக்காய் குருவி கூட உங்க ஊருக்கு வர யோசிக்கும்டா!" என்று மானாமதுரை மாமா சொல்லியிருக்கிறார். 'அத்தனை கொண்டாட்டமும் இங்கே இந்த சிவன் கோயில் வாசலுக்கு வருமா...?'

கட்டளைசாமி வந்த பிறகு அவன் சந்தேகமெல்லாம் சிட்டாய்ப் பறந்து விட்டது. எல்லோருக்கும் திருநீறு கொடுத்தே வேலை வாங்கிக் கொண்டிருந்தார். பந்தல் வேலை என்பதால் அப்பாவுக்கு மட்டும் பணம்.

இரண்டு மாசம் முன்பு சாமியையும் அம்மனையும் எடுத்து தட்டுப் பந்தலுக்குள் வைத்து விட்டு, கோயிலைப் புதுசாக்கியிருந்தார்கள். சுவரெல்லாம் சுண்ணாம்பு அடித்ததில், கடலை ரஜினிக்கு எழுதிய வாழ்த்து கலைந்து விட்டது.

வருத்தத்தை விழுங்கிக் கொண்டான் கடலை. அதனாலென்ன... ரொம்ப பெரிய சங்கதி அல்லவா நடக்கிறது. நடக்கட்டும்! காக்காவும் குருவியும் வர யோசிக்கும் ஊருக்குக் குடைராட்டினம் வரும். மிட்டாய்க் கடையும் நிஜம் போலவே கைக் கடிகாரம் விற்கிற பிளாஸ்டிக் கடையும் கூட வரும். கண்ணன் வாங்கிக் கட்டிக் கொண்டது போல கைக்கடிகாரம் வாங்கலாம். ஓடாது போனால் என்ன? கையிலே போட்டாலே பார்க்க மதிப்பாயிருக்கும். நினைக்கும்போதே நிலை கொள்ளாத சந்தோஷம் கடலைக்கு. கட்டளைசாமி கத்தையாய் நோட்டு தந்திருக்கிறார். அம்மாவிடம் காசு வாங்குவதுகூட கஷ்டமாயிருக்காது.

"அஞ்சு ரூவா!" - முந்தானையில் முடிந்திருந்த நோட்டை எடுத்துக் கொடுத்த போது அம்மாவுக்குச் சிடுசிடுப்புத்தான்.

"ஜோபியில போடாம கையிலயே புடிச்சுக்க... கூட்டத்துல எவனாவது லவுட்டிடுவான்! அப்புறம் அழுதுகிட்டு நிப்பே!"

வியர்வை கசிந்த கைக்குள் நோட்டு மேலும் கசங்கி நசநசத்தது.

அதன் இருப்பே கடலைக்குக் கிரீடம் வைத்தது போல் பலமாயிருந்தது.

வீதியெல்லாம் கடைகள். அத்தனை



"அன்னதான சாப்பாட்டை 9 வாய் அல்லது 18 வாய் அல்லது 27 வாய்னு ஒன்பது வர்ற மாதிரிதான் சாப்பிடணுமாம்."

"ஏன்?"

"அம்மாவோட ராசி நம்பர் ஒன்பதாச்சே!"

— வி. சகிதா முருகன்

பெண்களும் மஞ்சள் கிழங்கை முன்னே பின்னே பார்க்காததுபோல் தொட்டுத் தொட்டுப் பார்த்து விலை கேட்டுக் கொண்டிருந்தார்கள். ரிப்பனும் பிச்சிப்பூவும் ஜவந்தியும் சூடிய தலைகள் குனிந்து குனிந்து நிமிர்வதைப் பார்த்துக் கொண்டே நின்றான் கடலைமுத்து.

"கடலை! இங்கே ஓடியா...!"

கண்ணன் குரல் கூட்டத்துள்ளிருந்து கேட்டது. ஐந்து ரூபாயை உயிர் போல் பிடித்துக் கொண்டு நுழைந்து முன்னேறினான். பூஞ்சோலை, தானமங்கலம், பாட்டூர் என்று சுத்துப்பட்டி ஜனமெல்லாம் வந்து குவிந்து விட்டது. நாயனக்காரர் நின்றபடி பலமாக ஊதி ஊதி வாசிக்கையில் அவர் கன்னம் உப்பி உப்பி அமுங்குவதைப் பார்த்துக் கொண்டேயிருக்கத் தோன்றியது. டண டண டண என்று தவுல்காரர் அடித்த போது ஜில்லென்று உள்ளுக்குள் பொங்கியது.

"கூறுகெட்டவனே, வாடா!" - கண்ணன் தான். குடைராட்டினமிருந்த திசையிலிருந்து அவசரமாய்ச் சைகை காட்டிக் கொண்டிருந்தான்.

கைக்குள் ஐந்து ரூபாய் இருப்பதை நெருடிப் பார்த்துக் கொண்டே ஓட்டம் பிடித்தான் கடலைமுத்து. கோயில் வாசலில் ஒரு சொர்க்கபுரி கடை விரித்திருந்தது. பஞ்சு மிட்டாய், கறுப்பும் சிவப்புமாய் அரைஞாண் கயிறு, தாலிச் சரடுக்கு மஞ்சள் கயிறு... யப்பாடி! என்னவென்றே தெரியாத புதுப்புது வண்ணத்திலெல்லாம் பாசி மணி. பளபள

வென்று மினுக்கித் தள்ளியது. அப்புறம், அதோ... பட்டை பட்டையாய்ப் பச்சைக் கலரில் கைக்கடிகாரம்... அதே கடைக்காரரின் தோளில் சரிந்த மூங்கில் பட்டையில் குண்டு குண்டாய்ப் பலூன். செக்கச் செவேல் நிறத்தில் தலையாட்டிக் குதிப்பதாய்த் தோன்றியது.

நடுவே ஒத்தையே ஒத்தையாய் ஒரு மஞ்சள் பலூன். கடிகார கனவு சுழன்று ஓடிவிட... அது! அதுதான் வேண்டும் கடலைக்கு. வானத்து நீலத்தையும் கருவேல மரத்துப் பச்சையையும் மறைந்து அவன் கண்ணுக்குள் நிறைந்து மனசுக்குள் உப்பி ஆடியது அந்த மஞ்சள் பலூன்!

ஓடிப்போய் ஐந்து ரூபாய் காசை நீட்டி பலூன் கேட்டான் கடலை.

ஒரு சிவப்பு நிற பலூனை எடுத்து நீட்டினார் பலூன்காரர்.

வேகமாய்த் தலையசைத்து மறுத்தான். "அது வேணும்" கொத்துக்கு நடுவே இருந்த மஞ்சள் பலூனை எம்பிச் சுட்டிக்காட்டினான்.

சுட்டிய நூல்கொத்தின் நடுவிலிருந்து மஞ்சள் பலூனை விடுவிப்பதற்குள்......

"எல்லா பலூனையும் கொடுங்க..."

வெள்ளை வேட்டியும் கறுப்புக் கண்ணாடியும் போட்ட பட்டணத்து அண்ணாச்சி ஒருவர், கொத்தோடு பிடுங்கிக் கொண்டு புது ரூபாய் நோட்டுகளை நீட்டினார்.

"சில்லறையை வைச்சுக்கப்பா..."

கடலை பார்த்துக் கொண்டேயிருக்கையில் தோளில் சாய்ந்து நின்ற பெண்ணிடம் பலூன் கொத்தைக் கொடுத்தார் அந்த அண்ணாச்சி.

கொட்டு மேளம் காதைப் பிளக்க, எல்லோரும் நின்ற இடத்திலிருந்து அண்ணாந்து சிவன் கோயில் கோபுரத்தைப் பார்த்துக் கன்னத்தில் போட்டுக் கொள்ள ஆரம்பித்தார்கள். கோபுரத்தின் மேலே பலகைப் படியில் சாமிமார்கள் நின்று கொண்டு குடம் குடமாய்த் தண்ணி கொட்ட, கொத்து பலூனையும் ஒரே வீசாக வீசி மேலே எறிந்தாள் அந்தப் பெண். எறிந்த வேகத்தில் பின்னுக்குச் சாய்ந்தவளைத் தாங்கிப் பிடித்துக் கொண்டான் கறுப்புக் கண்ணாடி அண்ணாச்சி.

கூட்டத்துச் சிறுவர்கள் திசைக்கொருவராக ஓடி பலூன் பிடிக்கப் பார்த்தார்கள். கடலையின் மஞ்சள் பலூன் காற்றிலே ஆடி, ஆடிச் சென்று கருவேலமர முள்ளில் விழுந்து படாரென்று வெடித்தது. கோபுர உச்சியிலிருந்து தெளித்த தண்ணீரைத் தலையிலே வாங்கிக் கொள்ள முண்டியடித்த கூட்டம் அவனையும் தள்ளிச் சென்ற போது கையில் அஞ்சு ரூபாய் இருக்கிறதா? என நெருடிப் பார்த்துக் கொண்டான் கடலை.

மஞ்சள் பலூன் ரொம்ப நாளைக்குக் கனவிலே வெடித்து வெடித்துச் கடலையை எழுப்பியது. திரும்பத் தூங்கிப் போனாலும் காலையிலே கனவு ஞாபகம் வந்தது.

ஞாயிற்றுக் கிழமை காலை, சிவன் கோயில் வாசலில் கடலையும் கண்ணனும் கில்லிதாண்டு ஆடிய போது அந்த மஞ்சள் பலூனின் கிழிசல் துண்டு ஒன்று கிடைத்தது. எடுத்து உதறி, விரலில் மடக்கி வட்டமாக்கி ஊதி, நெற்றியிலே நசுக்கி 'டப்'பென்று உடைத்தான் கண்ணன்.

பக்கத்திலேயே கிடந்த கரித் துண்டை எடுத்துக் கொண்டு ஓடி, சாமியைப் பார்க்க புது வெள்ளைச் சுவரில், நாக்கைத் துருத்திக் கொண்டு அழுத்தி எழுதினான் கடலை:

**ரஜினி வாழுக!**

எழுதி முடித்த போது வியர்த்துப் போயிருந்தது. ○

**ஹைக்கூ**

வெறிச்சோடி கிடக்கும்
விளையாட்டு மைதானம்
வீடுதோறும் தொலைக்காட்சி

- ராஜா முஹம்மது



# நடக்குமென்பார்; நடக்கும்!

**மிதுன ராசிக்காரரான டி.வி. நடிகை பல்லவி மேனனுக்கு வீண் அலைச்சல் ஏற்படுமாம்.**



**மேஷம் :** சாண் ஏறினா, முழம் சறுக்குகிற கதை எல்லாம் இனி கிடையாது. ஜென்ம ராசியில் சுக்ரன், புதன் இருக்கிற அமைப்பை வைச்சுப் பார்க்கும்போது, இனிமே எல்லாமே சுபிட்சமாதான் நடக்கப் போகுது. எதிர்ப்புகள் குறையும். கணவன், மனைவி உறவு நிலை படு திருப்தி.

**ரிஷபம் :** ஏதேதோ திட்டம் போட்டு, என்னென்னவோ செய்தாலும், எதுவுமே 'வர்க்-அவுட்' ஆகாமலேயே இருந்திருக்குமே. இனி அப்படி இருக்காது. குறிப்பா, தொழில், உத்தியோகம் சம்பந்தப்பட்ட விஷயங்களில் முக்கியமான எண்ணங்கள் நிறைவேறும். அரசியல்வாதிகள் அந்தஸ்து உயரும். லாட்டரி, ரேஸ், பங்கு மார்க்கெட் இனங்களில் ஆதாயம் பெருகும்.

**மிதுனம் :** ஆறில் கேது இருக்கிறார். 10-லும், 11-லும் உலவும் கிரகங்களும் வாகான அமைப்புடன் வளமாகவே இருப்பதால், உங்கள் திறமை, புத்திசாலித்தனம் வெளிப்படும். கோர்ட்டு, வழக்கு, வியாஜ்ஜியம், போட்டி, பந்தயம், விளையாட்டு விநோதங்களில் வெற்றி மேல் வெற்றி கிடைக்கும். பக்தி மார்க்கத்திலும் ஞான மார்க்கத்திலும் ஈடுபாடு உள்ளவர்கள் மனத்தெளிவு பெறுவார்கள்.

**கடகம் :** நீங்கள் செய்துவரும் தொழிலில் எதிர்பாராத வளர்ச்சி காண்பீர்கள். அதோடு, மதிப்பு, கௌரவம், புகழ் உயரும். சிவப்பு நிறப் பொருட்கள் ஆதாயம் கொண்டு வரும். நீலம், கறுப்பு நிறங்கள் அதிர்ஷ்டமானவை. ஏற்றுமதி, இறக்குமதி இனங்கள் லாபம் கொண்டு வரும். தொழிலாளிகள் தங்கள் எண்ணம் ஈடேறப் பெறுவார்கள். விவசாயிகளுக்கு வருவாய் அதிகரிக்கும்.

**சிம்மம் :** எதையும் சமாளிக்கும் சக்தி தேவையா? போட்ட திட்டமெல்லாம் 'பளிச்'னு செயல்படணுமா? 11ல் இருக்கும் குரு மற்றும் 10ல் உலவும் கிரகங்கள் தங்களை ஆசீர்வதிக்கும்போது எல்லாம் நலமாய் நடக்கத்தானே செய்யும். மக்களால் அனுகூலமிருக்கும். கணவன்-மனைவி உறவில் பாசம் பொங்கும்.

**கன்னி :** 'கிரக சஞ்சாரம் படு சுமார்' என்ற விவரத்தை ஆரம்பத்திலேயே சொல்லிவிட்டால், 'ஆஹா... ஓஹோ' பலன்களை எதிர்பார்க்காமல் இருப்பீர்கள் அல்லவா? எதிலும் தடை, எப்படியும் இடர்ப்பாடு, குழப்படிக்கும் குறுக்கீடு என்று சிரமமான வாரம்தான். ஆனால் திருவாளர்கள் சுக்ரன், கேது இருவரும் அனுகூலமாக உலவுவதால், சமாளிக்கும் பக்குவமும் கிடைத்து விடும்.

**துலாம் :** குரு பலம் அனுகூலமாக இருப்பது ப்ளஸ் பாயிண்ட். மற்ற கிரகங்களின் சஞ்சாரமும் மெச்சத் தகுந்ததாகவே உள்ளன. அதனால் உங்கள் உடல் ஆரோக்கியம் சிறப்பாக இருக்கும். மதிப்பு, அந்தஸ்து உயரும். வெளிநாட்டுத் தொடர்பால் அனுகூலம் ஏற்படும்.

**விருச்சிகம் :** கிரக சஞ்சாரம் சூப்பர். புதிய முயற்சிகளில் பயப்படாமல் இறங்குங்கள்; வெற்றி உங்களுடையதே. வீடு, மனை, நிலம், ரியல் எஸ்டேட் தொடர்பான விஷயங்களில் ஆதாயம் பெருகும். கூட்டுத் தொழில் லாபம் தரும். உடல் ஆரோக்கியம் சீராக இருக்கும். திருமணம், புதுமனை புகுவிழா போன்ற சுப காரியங்கள் நடக்கும்.

**தனுசு :** உங்கள் அறிவாற்றல், அந்தஸ்து, மதிப்பு, செல்வாக்கு உயரப் பெறுவீர்கள். உடல் ஆரோக்கியம் சீராக இருந்து வரும். உழைப்புக்கும் திறமைக்கும் உரிய பயனைப் பெறுவீர்கள். நண்பர்களால் உங்களுக்கும், உங்களால் நண்பர்களுக்கும் அனுகூலம் உண்டாகும். பெண்களுக்கு உற்சாகமான வாரம். ஸ்திர சொத்துக்கள் சேரும்.

**மகரம் :** வாரத்தின் முதல் மூன்று நாட்கள் பிரகாசமாக இருக்கும். வாரப் பிற்பகுதியில் சிறு சிறு சங்கடங்கள் எழலாம். 3-ல் சூரியன் என்பதால், திறமை, புத்திசாலித்தனம் வெளிப்படும். எதிர்ப்புகளைச் சமாளிக்கும் சக்தி உண்டாகும். அரசாங்கத்தாரால் ஓரளவு அனுகூலமுண்டு.

**கும்பம் :** குடும்ப நலம் சீராக இருந்து வரும். மனத்தில் அபாரமான நம்பிக்கை ஏற்படும். எதிரிகள் விலகிப் போவார்கள். மக்களால் பாக்கியம் உண்டாகும். குடும்பத்தில் உள்ள பெரியவர்கள் தலைவர்கள் சித்த புருஷர்கள் ஆசிகள் கிடைக்கும். புதிய ஒப்பந்தங்கள் லாபம் தரும்.

**மீனம் :** சுக்ரன், சனி, ராகு, செவ்வாய் ஆகியோரது சஞ்சாரம் சிறப்பாக இருப்பதால், உங்கள் திறமை, புத்திசாலித்தனம், அந்தஸ்து உயரும். எதிரிகள் அடங்கிப் போவார்கள். குடும்பத்தில் குதூகலம் அதிகரிக்கும். பயணத்தால் அனுகூலமுண்டாகும். விவசாயிகள், தொழிலாளிகள், பொது நலப் பணியாளர்கள் ஆகியோருக்கெல்லாம் அனுகூலமான போக்கு தென்படும்.

**அக்னிசர்மா பக்கம்**

**ஏப்ரல் 10 முதல் 16 வரை**



• அருண் சரண்யா

# மண் வாசனை

அந்த அடிமை அங்கு வைக்கப்பட்டிருந்த பல்வேறு தாவரங்களைப் பார்த்தான். ஒவ்வொன்றின் பக்கமாகவும் சென்றான். ஒரு செடியின் அருகில் சென்றதும் அவனது முகம் பரவசமானது. குனிந்து அந்தச் செடியை முகர்ந்தான். அது நடப்பட்டிருந்த மண்ணின் வாசத்தையும் உள்ளிழுத்தான். காற்றில்லாத விண்வெளியைத் திடீரென அடைந்தவன் போல அவன் முகம் விகசித்தது. அந்தச் செடியைத் தன் மார்போடு சேர்த்தணைத்துக்கொண்டான். கண்களில் நீர் கொட்ட அந்தச் செடியை நழுவவிடாது தரையில் விழுந்து புரண்டான்.

பார்த்துக்கொண்டிருந்த ஆன்டனி ஹாப்கின்ஸ், பனித்த கண்களுடன் அருகிலிருந்த நீதிபதியிடம் கூறினார். "இத்தனைச் செடிகள் இருக்க, ஆப்ரிக்காவிலிருந்து கொண்டு வரப்பட்ட இந்தக் குறிப்பிட்ட தாவரத்தைப் பார்த்ததும் உணர்ச்சி வசப்படுகிறானே இந்த அடிமை. இவன் ஆப்ரிக்கன்தான் என்பதற்கு இதைவிட வேறென்ன ஆதாரம் வேண்டும்?"

விம்மல் ஒன்று வெடித்தெழுந்தது. ஸ்பீல்பெர்க் இயக்கத்தில் சின்னத்திரையில் ஓடிக்கொண்டிருந்த படத்திலிருந்து உருவானதல்ல அது. படத்தைப் பார்த்துக் கொண்டிருந்த கமலியிடமிருந்து கிளம்பிய கேவல்.

ரிமோட்டை இயக்கி திரையை ஏதுமற்றதாக ஆக்கினான் கிரி. பின் கமலியைப் பார்த்துப் புன்னகை செய்தான். 'நாற்பது வயதுக் குழந்தை!'

கண்களைத் துடைத்துக்கொண்டு கமலி 'பாண்டூருக்குப் போய்ட்டு வரணுங்க' என்றாள் கெஞ்சலாக.

அது அவளது பலவருட வேண்டுகோள். அலுவலகத்தில் அவனது தொடர்வேலை காரணமாகத் தள்ளிப் போடப்பட்டு வந்தது. ஒரே மகனும் இப்போது வேலைக்கு நியூயார்க் சென்றுவிட, தனிமை அதிகமாகி சொந்த ஊர் நினைவு பெரிதும் படர்ந்துவிட்டது. போதாகுறைக்கு, இந்த 'அமிஸ்டாட்' திரைப்படக் காட்சி!

ரயில் பயணம் முழுவதும், கொட்டித் தீர்த்தாள்.

"ஆத்திலேதான் குளிப்போம். சில சமயம் குளத்திலேயும். பாதத்திலே இருக்கிற அழுக்கை மீன்கள் தின்னும்போது ஒரு குறுகுறுப்பு உண்டாகும் பாருங்க, ஐயோ அதைச் சொல்லிப் புரிய வைக்க முடியாதுங்க. வாணியும் ரங்கநாயகியும் மீன்களுக்குக் காலைக் காண்பிச்சுக்கிட்டே 'ஓ'ன்னு கத்துவாங்க.

"எங்கப்பா நடையே ஓட்டத்தை விட அதிகம். அவர் பின்னாலேயே போவது ரொம்ப சிரமம்ங்க. அதுவும் வரப்பு குறுகலா இருக்கும். அதிலே நடந்துக்கிட்டே அவரைத் தொடருவது... அதை ஏன் கேட்கறீங்க?"

"எங்க ஆலமரத்துக்கு அழிவே கிடையாதும்பாங்களே. அப்போ எங்க ஏரிக்கரை ஆலமரமும் இன்னும் தளதளன்னு விழுதுகள் பெருத்து இருக்குமில்ல? அதைப் பிடிச்சுக்கிட்டு நாங்கள்ளாம் ஊஞ்சலாடுவோம் தெரியுமா!"

கிரி தனது தலையை அவ்வப்போது 'அப்படியா?' என்கிற வகையில் ஆட்டியதோடு சரி. அதுவே போதுமென்பதுபோல் கமலி, தன் அந்தக் கால நினைவுகளில் தொடர்ந்து முத்துக் குளித்துக் கொண்டிருந்தாள். சொல்லப் போனால் அவன் வேறு திசையைப் பார்த்துக்கொண்டிருந்தால்கூட அவள் பேச்சைத் தொடர்ந்து கொண்டிருக்கக் கூடும். அவ்வளவு ஈடுபாடு.

திடீரென்று ஒரு கவலை வந்துவிட்டது கமலிக்கு. "ஏங்க, ஸ்கூல் படிப்பை முடிச்சப்புறம் எங்கப்பாவோட நான் மாயவரத்துக்கு வந்துட்டேன். அப்புறம் மெட்ராஸுக்கு. கல்யாணம் நடந்து உங்களோட வடக்குகே கிளம்பியாச்சு. இப்போ சுமார் இருபது வருஷம் கழிச்சுப் போறமே, அந்தக் கிராமத்து அழகெல்லாம் அழிஞ்சிருக்குமோ? ஒருவேளை எவனாவது அங்கே தொழிற்சாலையைக் கட்டி சுத்துப்புறத்தையே கெடுத்து வச்சிருந்தா?"

'சேச்சே, அப்படியெல்லாம் இருக்காது' என்று சொல்லத் தோன்றி பிறகு அடக்கிக்கொண்டான். "எல்லாத்துக்கும் தயாராகத்தான் போகணும் கமலி" என்றான் அவளைத் தயார்ப்படுத்தும் மனநிலையில்.

"ஏங்க மனுஷன் இயற்கையை சுயநலத்துக்காக மாத்தி இப்படிச் சீரழிக்கிறான்? இயற்கை எவ்வளவு அழகா தன்னை மாத்திக்காமல் மனுஷனின் மனசுக்கு இதமா நடந்துக்குது? அதை எதுக்கு நாம சீண்டிப் பார்க்கிறோம்?"

"இயற்கை மாறாமல் இருக்குதா? ஆகாயத்தையும் கடலையும் நினைச்சு சொல்றியா கமலி? நாமெல்லாம் இளவயசிலே இருந்த மாதிரியா இருக்கோம்? முகத்திலே இருக்கிற இந்த வரிகள், கண்ணைச் சுற்றிக் கருவளையம் இதையெல்லாம் ஏற்படுத்தினது இயற்கைதானே?"

கமலி விவாதத்துக்குத் தயாராக இல்லை. தான் விட்டுப் போன கிராமம் அப்படியே இருக்குமா? என்கிற கவலைக்கு முன் எதுவுமே அற்பம் என்கிற மன நிலையில் இருந்தாள்.

பாஸஞ்ஜர் ரயில் நின்றவுடன் துள்ளிக்கொண்டு இறங்கினாள் கமலி. ரயில்நிலையத்துக்கு வெளியே ஒரே ஒரு மாட்டுவண்டி நின்று கொண்டிருந்தது. மாடுகள் வண்டியில் பூட்டப்பட்டிருக்கவில்லை. சாவகாசமாக வைக்கோலைத் தின்றுகொண்டிருந்தன.

"வண்டிங்களா?" என்றான் அங்கிருந்த ஓர் இளைஞன்.



கமலி சற்றே தயங்கினாள். "இங்க மாணிக்கம்னு ஒருத்தரு வண்டி ஓட்டுவாரே?"

"எங்கப்பாருதாம்மா. போன வருசம் காலமாயிட்டாரு."

கமலிக்கு மட்டுமல்ல, கிரிக்கும் வருத்தமாக இருந்தது. வரும் வழியில் அந்த மாணிக்கம் குறித்தும் கமலி சொல்லியிருந்தாள். டவுனுக்குப் போகும்போதெல்லாம் அவர்தான் வண்டி ஓட்டிச் செல்வாரென்றும், அங்கங்கே கொடுக்காப்புளி, புளிய மரங்கள் வந்தால் நிறுத்தி அந்தக் காய்களைப் பறித்துக் கொடுப்பாரென்றும்.

என்றாலும் வண்டி நகர்ந்த சிறிது நேரத்திலேயே அவளது உற்சாகம் திரும்பி விட்டது. ஐயனார் கோவில் (இங்கதான்



''ஓலையில் ஏதாவது விசேஷம் உண்டா?''

''இல்லை மன்னா. வெறும் பனை ஓலைதான்!''

- விருத்தாச்சலம் எஸ். மோகன்

எங்கம்மா ஒரு மரக்குதிரை வேண்டுதல் செலுத்தினாங்க), திடல் (தெருக்கூத்து விடிய விடிய நடக்குமுங்க) என்று பல இடங்களைக் கணவனுக்குச் சுட்டிக் காட்டத் தொடங்கினாள்.

"இங்க கொஞ்சம் நிறுத்துப்பா." அடிக்கடி இந்த வாக்கியத்தைக் கமலி சொல்லிக் கொண்டிருந்தாள். வண்டிக்கார இளைஞன் அலுப்பை, வார்த்தைகளிலோ முகக்குறிப்பிலோ காட்டவில்லை. கிரிதான் "நாமதான் இங்க ஒரு வாரம் தங்கப் போறமே. மெதுவாப் பாத்துக்கிட்டாப் போச்சு" என்றான். கமலி கேட்பதாக இல்லை.

வழியில் வண்டியை நிறுத்தச் சொன்னாள். அவள் படித்த பள்ளிக்கூடம்! "அன்னிக்கு அழிவில்லாம அதேமாதிரி இருக்குங்க" என்றபடி இறங்கினாள். கிராமத்துப் பக்கம் எந்தத் தொழிற்சாலையும் வந்து விடவில்லை என்பதை வழியிலேயே கேட்டு உறுதி செய்துகொண்டு சந்தோஷப் பட்டுவிட்டாள்.

"ருக்மணி டீச்சர் இப்ப ரிட்டயராயிட்டாங்களா? நிலபுலனை கவனிச்சிட்டிருக்காங்களாக்கும். அவங்க வீடு கூட பக்கத்துலதானில்ல? அதோ அந்தத் தென்னந்தோப்பு இருக்கே அதுகிட்டதாங்க. போனா கட்டாயம் இளநி தருவாங்க. இளநியை விட இனிமையாப் பேசுவாங்க."

வண்டியோட்டிய இளைஞன் குறுக்கிட்டான். "அவங்க இப்ப இங்க இல்லேங்க. வீடு, தோப்பையெல்லாம் வித்துட்டு, கோயமுத்தூருக்குப் போயிட்டாங்க. அவங்க மவன் அங்கதானே சோலி பாக்குறாரு."

பருமனான விழுதுகளோடு அமைந்த ஆல மரம், நாற்சந்தியில் இருந்த கல் மண்டபம், அதில் செதுக்கப்பட்டிருந்த வார்த்தைகள், மீன்களும் சாரைப் பாம்புகளுமாகக் குளம், பாசி நிரம்பிய தனித்தனி படித்துறைகள், ஜீரா மிட்டாய்களும் கமர்கட்டும் சாயமேறிய பாட்டில்களில் பார்வைக்கு வைக்கப்பட்டிருந்த நாடார் கடை (நாடாருக்குப் பதிலாக அவரது பதினைந்து வயது மகன் உட்கார்ந்து கொண்டிருந்தான்) _ அவள் ரயிலில் கூறிக் கொண்டு வந்த அத்தனையுமே கண்களில் பட்டன - கிரியின் மனத்தில் பதிவான அதே தோற்றத்தில்.

வண்டி நின்றவுடனேயே கமலியின் மாமி வரவேற்றாள். ''வாங்க, வாங்க''

மாமியின் கைகளைப் பிடித்துக்கொண்டு "மாமா எங்க, தீவனம் வாங்கப் போயிருக்காரா?" என்று கேட்டாலும் கமலியின் கண்கள் வீட்டுக்குள் தேடின.

"கடிதாசியிலே எழுத வேணாம்னு பாத்தேன்'' என்று மென்று முழுங்கினாள் மாமி. ''அவரு ரெண்டு மாசமா பக்கவாதத்தில படுத்துக்கிடக்காரு. அடுத்த மாசம் டவுன் ஆஸ்பத்திரியிலே சேர்த்து வைத்தியம் பாக்கலாம்னு இருக்கோம்."

உள்ளே பாய்ந்து போனாள் கமலி. மாமா உறங்கிக் கொண்டிருந்தார். குரல் கொடுக்கப் போன மாமியைத் தடுத்தாள். ''அசந்து தூங்கறார். எழுந்தப்புறம் பேசிக்கிறேன்'' என்றாள்.

மீண்டும் வாசல் திண்ணைக்கு வந்தார்கள். "வாணி எங்க மாமி?"

"நிஜமாவே தெரியாதா உனக்கு?'' என்றவள் கமலியின் முகத்தில் தெரிந்த அப்பாவித்தனத்தைப் பார்த்து ''அவ ஓடிப் போயிட்டாம்மா. மாமன் மகனைக் கல்யாணம் செஞ்சிக்கிட்டு, இந்த அசிங்கம் பிடிச்ச கிராமத்திலேயே கிடக்கத் தனக்கு விருப்பமில்லேன்னு கடிதாசு எழுதி வச்சுட்டு, அவளுக்குப் பிடிச்சவனோட அவ போயி பல வருஷமாச்சு. அப்புறம் அவளப் பத்தி எந்தத் தகவலும் இல்ல'' கூறியபோதே அந்தத் தாயின் கண்கள் கலங்கி நீர் சிந்தின.

அன்றிரவு மாமியிடம் வற்புறுத்தி ஒரு தொகையைத் தந்தாள் கமலி. மாமாவின் மருத்துவச் செலவில் ஒரு பகுதி. பின்பு மாமியின் வற்புறுத்தலுக்குச்

செவி சாய்க்காமல் ''இல்ல, நாங்க நாளைக்கே போகணும். இவருக்கு ஆபீசிலே லீவுப் பிரச்னை மாமி. புரிஞ்சுக்குங்க'' என்றாள்.

# வேதம்

## ஓர் அறிமுகம்

### ராமாயண ஸ்ரீனிவாஸ அய்யங்கார்

வேதங்களின் பிரிவு அவைகளின் உள்பிரிவான சாகைகளின் எண்ணிக்கைகள் உள்பட பூர்ண விவரங்களுடன் விளக்கப்பட்டிருக்கிறது. வேதத்தின் முடிவான உபநிஷத்துகள் எந்த எந்த வேதத்தைச் சேர்ந்தவைகள் 6 அங்கங்களும் வேதாத்யயனம் செய்பவர்களுக்கு எவ்விதம் உதவி செய்கின்றன என்பதையும் தெரிவிக்கப்பட்டுள்ளது. உபாங்கமான 6 தரிசனங்களையும் மேலும் வேதத்தில் உள்ள முக்யமான உதாத்தம் அனுதாத்தம் ஸ்வரிதம், ப்ரசயம் முதலிய ஸ்வரங்களின் விளக்கமும், வேதாத்யயனம் செய்பவர்கள் அனுஷ்டிக்க வேண்டிய முறைகளையும் விளக்கமாக கூறப்பட்டுள்ளது.

விலை 20/-

# என்.எம்.க்கு எண்பது!

உணர்ச்சிவசப்பட்டுப் பேசிய முன்னாள் நீதிபதி கிருஷ்ணசாமி ரெட்டியாரை மேடையில் ஆசுவாசப்படுத்த பத்து நிமிடம் தேவைப்பட்டது.

''உலகெங்கிலும் பயங்கரவாதம் பரவிவரும் இந்த காலகட்டத்தில் வள்ளலார் காட்டிய மனித நேயப் பண்புகள் மட்டுமே மனித குலத்தை நல்வழிப்படுத்தும். வள்ளலார் பாதையில் வழுவாமல் செல்லும் என்.மகாலிங்கம் போன்ற ஒரு சிலர் மட்டுமே ''மனிதர்'' என்ற சொல்லுக்கு நல்ல உதாரணமாக இருக்கிறார்கள்'' என்றபோது அவர் குரலில் நடுக்கம். என்.எம்.என்று அன்புடன் அழைக்கப்படும் பொள்ளாச்சி என். மகாலிங்கத்தின் 80வது பிறந்த நாள் விழாவில் பேசியபோதுதான் இது நடந்தது.

ஏவி.எம். ராஜேஸ்வரி திருமண மண்டபத்தில் நடந்த ஒரு நாள் விழா கோலாகலம்! கொண்டாட்டம். காலை ஏழரை மணிக்கு ராணிமேரி கல்லூரி மாணவிகளின் அகவல் பாராயணம். ஏழே முக்காலுக்கு மண்டப வாசலுக்கு வந்த என்.எம்முக்கு நான்கு வேத கோஷம், நான்கு மேளம் முழங்க பூரண கும்ப வரவேற்பு, மேலிருந்து கொட்டிய ரோஜா இதழ்கள், என்று மங்களம் பொங்கும் மகிழ்ச்சி.



"சுதந்திர தினத்தை வீட்டுக்கு வீடு விழாவாகக் கொண்டாட வேண்டும்" என்றார் குன்றக்குடி ஆதீனம் பொன்னம்பல அடிகள். "ஒளி வழிபாடு செய்தால் மத மோதல்கள் வர வாய்ப்பில்லாமல் போகுமே" என்றார் மத்திய இணையமைச்சர் கண்ணப்பன். "மகாலிங்கம் போன்ற பெரிய மனிதர்கள் வாழும் தமிழகம் முதன்மை மாநிலமாகக் கட்டாயம் மாறும்" என்றார் சபாநாயகர் காளிமுத்து. சர்வகட்சியினரும் கலந்து கொண்ட விழா!

காலையில் திருவருட்பா திருமறை நூல் வெளியீடு, மதியம் வள்ளலார் குருகுலப் பள்ளியின் கலை நிகழ்ச்சி. சுப்பு ஆறுமுகம் வில்லுப்பாட்டு, இரவு சௌம்யாவின் கச்சேரி என்று உரைவீச்சுக்களுக்கு மத்தியில் இனிமையான கலை நிகழ்ச்சிகள். மூன்று வேளையும் வயிறாரச் சாப்பாடு, டிபன். காலையில் வந்தவர்கள் இரவு வரை எங்கும் நகராமல் மண்டபத்திலேயே அமர்ந்து அனைத்து நிகழ்ச்சிகளையும் கண்டு இன்புற்றது ஒரு சிறப்பான விஷயம்.

நன்றி தெரிவித்துப் பேசிய என்.எம். ரொம்பவும் மகிழ்ச்சிக் கொந்தளிப்பாகிப் போனாலும், நாட்டு நலனை மறக்கவில்லை. எதிர்கால வளமான இந்தியா சிறப்பான கல்வியின் அடிப்படையில்தான் வரும் என்னும் நோக்கில் ஆசிரியர்களைக் குறித்த தன் கருத்தைக் கொட்டினார் என்.எம். "ஆசிரியர்கள், தங்கள் வேலையைவிட, வட்டித் தொழில், விவசாயம் என்று பணிகளில் தான் கவனம் செலுத்துகிறார்கள். இந்தப் போக்கை அவர்கள் மாற்றிக் கொள்ள வேண்டும். அது போலவே வயதானவர்கள், அது அரசியலோ, தனிப்பட்ட அமைப்போ, நாற்காலியை காலி செய்து அடுத்த தலைமுறைக்கு வழிவிட வேண்டும்'' என்று என்.எம். சொன்னபோது, வள்ளலாரை ஒப்பிட்டு ரெட்டியார் பேசியது ஏன் என்பது புரிந்தது.

முன்னாள் அமைச்சர்கள் ராசாராம், ஆர்.எம்.வீ., பூவராகவன் ஆகியோர் நாள் முழுதும் இருந்தார்கள். அமைச்சர் பொன்னையன் மாலையில் பார்வையாளராக வந்து சிறப்பித்தார்.

இரவு பத்து மணிக்கு வீட்டுக்குக் கிளம்பும் முன் என்.எம்முக்குத் தேங்காய், பூசணி உடைத்து திருஷ்டி சுற்றப்பட்டது. என்.எம்.மே பாராட்டும் அளவுக்கு விழா ஏற்பாடுகளை, அவரது மருமகன் கிருஷ்ணராஜ் வாணவராயரின் வழிகாட்டுதலில் செய்தவர் என்.எம்மின் தனி உதவியாளர் ரவி.

— ப்ரியன்



# லக்கி கணேஷாவின் புகழ் புயலாய் பரவுகிறது...

## அதிர்ஷ்டம் அழைக்கிறது....

தினம்
தினம்... இனிய காலைப்பொழுதில்
அன்றாட வாழ்க்கையை ஆரம்பிக்கும்
அனைத்து மக்களும்
வணங்கி வழிபடும் தெய்வம்
"பிள்ளையார்..."

குழந்தைப் பருவத்தில்
தாய் தந்தை முகம் பார்த்துச் சிரிக்க
கற்றுக் கொண்ட குழந்தை.. மனசுக்குள்
கடவுள்...என்ற
உணர்வு அறியும் வயதில்
அறியப்படும் முதல் கடவுள்
பிள்ளையாராகத்தான் இருப்பார்...

ஏனெனில்...
பரீட்சைக்குச் செல்லும் மாணவன்
நம்பிக்கையோடு
வணங்கும் முதல் கடவுள்
"பிள்ளையார்" என்பதில்
மறு கருத்து இருக்க வாய்ப்பே இல்லை...

நாட்டில் இன்ஷியலோடு பெயர் எழுதும்
பழக்கம் இல்லாதவர்கள்கூட
இருக்கலாம்...

பிள்ளையார் சுழி போட்டு
வாழ்க்கையை ஆரம்பிக்காத
ஆன்மீக மனிதர்கள் இருக்க முடியாது...

இவருக்கு
பல வடிவங்கள் உண்டு.

இதில்
சமீப காலமாக...
இவரின் புது வடிவம்
லக்கி கணேஷா...

திறமை குவிந்து கிடக்கும்
திறமைசாலிகள்
பலர் அறியப்படாமலே
போய்விடுகிறார்கள்...

அதற்கு
அவர்கள் கூறும் காரணம்...
அதிர்ஷ்டம்... எனக்கு இல்லை
என்பது தான்...

பெரும்பான்மையான
இந்தக் குரல்கள்...
கணபதியின் காதுகளுக்கு
எட்டியதின் விளைவு...

தன் பக்தர்களின்
குறை நீக்கி...
அவர்கள் வாழ்க்கையில்
சந்தோஷம்... பொங்கிட
லக்கி கணேஷாக...
அவதரித்திருக்கிறார்.

சந்தோஷ் சிவராம்
வித்தியாசமான வியாபார மனிதர்...

பொருள் ஈட்டுவதையே குறிக்கோளாகக்
கொண்ட
கோடிக்கணக்கான வியாபாரிகள் மத்தியில்
பொருளோடு
புண்ணியத்தையும் தேடும்
நோக்கமுள்ளவர்.

வியாபாரத்தில்
விற்பவருக்கும் மனநிறைவு
வாங்குபவருக்கும் மனநிறைவு
என்பது... இவரது கொள்கை...

இது எந்தத் தொழிலில்
நூறு சதவீதம்
சாத்தியமாகும்...?

உலகிலேயே
ஒரேயொரு வியாபாரத்தில் தான்
இது சாத்தியம்...

கடவுள்
கடவுள்
கடவுள்

மனிதன் வணங்குவதற்கு
கடவுள் உருவங்களை
உருவாக்கித் தரும்
உன்னதத் தொழில்...

சந்தோஷ் சிவராம்
நுட்பமாக தேர்ந்தெடுத்திருப்பது
இந்தத் தொழில்தான்...

எல்லா தெய்வங்களையும்
இவரது தொழில்நுட்பத்தில்
கண்ணாடி வடிவத்தில்
வார்த்தெடுத்து
வழங்கி வருகிறார்...

இவரிடம் ஒரு பேட்டி...

கே : சித்தி விநாயகர் மாப்பிள்ளை விநாயகர், பால விநாயகர் இன்னும் பல வடிவங்களில் விநாயகர் இருக்கிறார். உங்களின்

லக்கி கணேஷா நாம கரணம்... எப்படி வந்தது...?

ப : முதல் கேள்வியே நல்ல கேள்வி. நான் காஞ்சி மஹா மஹா பெரியவாளின் அதி தீவிர பக்தன். தெய்வீகம் குவிந்து கிடக்கும் அந்த தெய்வத்தை வாய்ப்பு கிடைக்கும் போதெல்லாம் சந்திப்பேன். ஒவ்வொரு சந்திப்பின் போதும் என்னுடைய கண்ணாடி சிற்பங்களைக் காட்டுவேன்.

அவரின் பார்வை படும் பாக்கியம் அந்தச் சிற்பங்களுக்கு சில வினாடிகள் கிட்டும். விற்பனைக்கு வைத்து விடுவேன். ஒரு முறை பெயர் வைக்காத குட்டிப் பிள்ளையாரை வடிவமைத்துக் கொண்டு காஞ்சி பரமாச்சாரியாரைச் சந்திக்கச் சென்றேன்...

வழக்கம்போல் அவரை வணங்கி... குட்டிப் பிள்ளையாரைக் காட்டியதும்... அருள் நிறைந்த பார்வை அருளியவர் மகிழ்ச்சியோடு குட்டிப் பிள்ளையாரை வாங்கி தம் தெய்வீகக் கரங்களில் வைத்திருந்து ஆசீர்வதித்து தந்தார்.

என் மற்ற படைப்புகளுக்கு கிட்டாத அதிர்ஷ்டம் இந்த குட்டிப் பிள்ளையாருக்குக் கிடைத்ததால் அந்த இடத்திலேயே லக்கி கணேஷா... என மனதுக்குள் பெயரிட்டேன்.

கே : லக்கி கணேஷாவின் அருள்... வாடிக்கை-யாளர்களுக்கு மனநிறைவு தந்-திருக்கிறதா...?

ப : இதற்கு நான் பதில் தருவதை விட பயன் பெற்றவர்களின் ஆயிரக்கணக்கான கடிதங்களைத் தான் பதிலாகத் தர முடியும்... வியாபார நஷ்டத்தில் பிரச்சனைகளின் நெருக்கடியில் மனநிம்மதியைத் தொலைத்து விரக்தியின் விளிம்பிற்கே சென்ற பலரை... லக்கி கணேஷா... நம்பிக்கையோடு கரை சேர்த்திருக்கிறது...

உதாரணத்திற்கு திரைப்படத்துறையைச் சேர்ந்த இயக்குநர் செல்வபாரதி மனைவி கவிதா செல்வபாரதி (பஞ்சாபி) பிள்ளையார் பக்தை. லக்கி கணேஷாவை வாங்கி வைத்திருந்து தன் வீட்டிற்கு வரும் உறவினர்களுக்கு குங்குமத்தோடு லக்கி கணேஷா கொடுப்பது அவர் வழக்கம்.

அவர்களின் பக்கத்து வீட்டிற்கு பிரசாத் என்ற தெலுங்கு தம்பதியினர் குடிவந்தனர். திருமணமாகி பதிமூன்று வருடங்களாகியும் குழந்தைப் பேறு இல்லையென்ற ஏக்கம். அவர்களுக்கு லக்கி கணேஷா ஒன்றை கவிதா செல்வபாரதி வழங்கி நம்பிக்கை தர அவர்களும் பூஜையறையில் வைத்து வணங்கி வந்தனர். இப்போது அந்த தம்பதி ஆண் குழந்தைக்குத் பெற்றோர் ஆகியுள்ளனர். இது போன்று நிறைய சம்பவங்கள்.

கே : லக்கி கணேஷா இந்தியா முழுக்க வாடிக்கையாளர்களைப் பெற்றிருக்கிறதாமே...?

ப : நிச்சயமாக. கார்கிலிருந்து கன்னி-யாகுமரி வரை... லக்கி கணேஷா... அருள் பெற்றவர்கள் நிறைந்து உள்ளனர்... அது மட்டுமல்ல... மலேசியா, சிங்கப்பூர், ஸ்ரீலங்கா,



சந்தோஷ் சிவராம், நடிகர் பிரசாந்த், இயக்குநர் செல்வபாரதி

கனடா என்று எல்லை தாண்டியும் லக்கி கணேஷா புகழ் பரவியிருக்கிறது.

லக்கி கணேஷா இல்லத்தரசிகளிடையே பெரும் வரவேற்பு பெற்றுள்ளது குறிப்பிடத்தக்கது. பெரும்-பாலான வீடுகளில் வாங்கி வீட்டுக்கு வரும் உறவினர்-கள், நண்பர்களுக்கு வழங்கி வருகின்றனர்.

திரையுலக பிரபலங்களிடமும் லக்கி கணேஷா புகழ் பரவியுள்ளது. உன்னி கிருஷ்ணன், நளினி, சீமா... ஆகியோர் வாடிக்கையாளர்களாய் உள்ளனர்.

திருமண வரவேற்புகளில் தேங்காய், வெற்றிலை, பாக்கு தரும் போது லக்கி கணேஷா தரும் புதிய பழக்கத்தை மயிலையைச் சேர்ந்த சுஹாசினி என்ற வாடிக்கையாளர் அறிமுகப்படுத்தியுள்ளார்.

அது மட்டுமல்ல, டெஸ்மண்ட்ராவ் என்ற கிறிஸ்-துவர் லக்கி கணேஷாவின் பெருமை கேள்விப்பட்டு வாங்கிச் சென்றார். தமிழகத்தின் முன்னாள் காவல்துறை தலைவரும் சி.பி.ஐ. துணை இயக்குநருமான வி.ஆர். லட்சுமி நாராயணன் லக்கி கணேஷாவின் பக்தர்களில் முக்கியமானவர்.

தமிழ் புத்தாண்டிற்கு 'லக்கி கணேஷா'வின் தங்க வடிவம் அறிமுகப்படுத்த உள்ளோம். தங்க முலாம் பூசப்பட்ட இந்த லக்கி கணேசாவின் விலை ரூ. 120. தபால் செலவு உட்பட. எங்கள் லக்கி கணேஷாவின் விலை தமிழ்நாட்டில் கூரியர் செலவு உட்பட சிறியது ரூ. 45, மீடியம் ரூ. 75, பெரியது ரூ. 105. பக்தியுடன் வழிபட்டால் புண்ணியம் கிட்டும், தன்னம்பிக்கை உருவாகும், நன்மைகள் பெருகும்.

**விற்பனை செய்ய ஏஜெண்ட்கள் நியமிக்க உள்ளோம். விருப்பம் உள்ளவர்கள் தொடர்பு கொள்ள வேண்டிய முகவரி :**

**லக்கி கணேஷா, கடை எண் 10, முதல் தளம், அல்சா மால், மாண்டியத் ரோடு, எழும்பூர், சென்னை – 600 008. போன் : 855 42 47. எங்களது வெப்தள முகவரி : www.luckyganessha.com.**

Advt





# என் மகனே குரு!

**''சம்மதமா, நான் உன் கூடவர சம்மதமா?''**

**— நாடோடி மன்னனில் இடம் பெறும் இந்தப் பாடலைத் தெரிந்த அளவுக்கு இதை எழுதிய ந.மா. முத்துக்கூத்தனைத் தெரிந்திருக்க வாய்ப்பில்லை. அண்ணா, கலைஞர், எம்.ஜி.ஆர்.—ஜெயலலிதா என நான்கு முதல்வர்களுடனும் நாடகங்களிலும் சினிமாவிலும் நெருங்கிப் பழகிய இந்த எழுபத்தாறு வயது இளைஞர், பொம்மலாட்டக் கலையில் பல்வேறு புதுமைகளைச் செய்தவர். காட்டாங்குளத்தூரில் வசிக்கும் அவரைச் சந்தித்தோம்.**

ஆரம்பத்துல நான் நாடக நடிகன். அண்ணாவின் 'ஓர் இரவு', 'வேலைக்காரி' உட்பட நிறைய நாடகங்களில் நடித்தேன். நகைச்சுவை நடிகர்தான் என் வேடம். இந்த நேரத்தில் கலைவாணர் என்.எஸ். கிருஷ்ணன் நாடகங்களைப் பார்த்தும் அவர் மீது மானசிகமான மரியாதை ஏற்பட்டது. அவரைச் சந்தித்துப் பேச வேண்டுமென்று மனத்துக்குள் நீண்ட நாளாக ஆசை. அப்பொழுதுதான் ஒரு நாள் என்.எஸ். கிருஷ்ணனை எதேச்சையாகச் சந்தித்தேன். அவருக்கு என்னைப் பிடித்துப்போய்விட்டது. பிறகு அவருடைய நாடகங்களில் நடிக்க ஆரம்பித்தேன்.

'லட்சுமிகாந்தன்' கொலை வழக்குத் தொடர்பாக கலைவாணர் சிறைக்குச் சென்ற பிறகு, 'கிருஷ்ணன்' நாடகக் குழு என்றும் 'மோகன கான சபா' என்றும் கலைவாணரின் நாடகக் குழு பிரிந்தது. நான் இரண்டு நாடகக் குழுவிலும் நடித்து வந்தேன்.

இதற்கிடையில் கலைவாணரின் வில்லுப்பாட்டு என்னைக் கவர்ந்திழுத்தது. எனக்கும் வில்லிசைப்புலவராக ஆகவேண்டும் என்று ஆசை வந்தது. ஆனால் அதற்கான சூழல் அமையவில்லை.



• எம்.ஜி.ஆருடன் முத்துக்கூத்தன்

கலைவாணர் மறைந்த பிறகு, அவரது பிறந்ததினத்தை முன்னிட்டு நிகழ்ச்சிகள் ஏற்பாடு செய்வதற்கான கூட்டம் தென்னிந்திய நடிகர் சங்கத்தில் நடந்தது. அப்போது நான் கலைவாணரைப் பற்றி வில்லுப்பாட்டில் பாடப்போகிறேன் என்றேன். அந்தக் கூட்டம் அதற்கு அனுமதி மறுத்துவிட்டது. நான் குருவாக நினைக்கும் ஒருவரைப் பற்றிப்பாட அனுமதி மறுத்ததை என்னால் ஏற்றுக் கொள்ள முடியவில்லை. கூட்டத்தை விட்டு வெளியில் வந்துவிட்டேன். அழுகைப் பொத்துக்கொண்டு வந்தது. வாசலுக்குக் கண்ணீரோடு வந்தபோது மதுரம் அம்மாள் என்னைப் பார்த்துவிட்டார். 'ஏன் அழுகிறீர்கள்?' என்று கேட்டார். நான் விஷயத்தைச் சொன்னேன்.

''அவ்வளவுதானே; நினைவு நாள் வருகிறது; அப்போது வில்லிசையில் பாடுங்கள்'' எனறு ஆறுதல் சொன்னார். எனக்கு எல்லையில்லா மகிழ்ச்சி.

அவரின் நினைவு நாளில் நான் பாடினேன். அவர் பயன்படுத்திய வில், பக்கப் பாட்டு ஆட்கள் எல்லாம் அவருடன் இருந்தவர்கள்தான்.





என்னுடைய பாட்டைக் கேட்டுப் பாராட்டுக் குவிந்தது. அதுவே எனக்குப் பெரிய பலமாக இருந்தது.

இப்பொழுது மாதிரி, அப்போது நடிகர்கள் பெயரில் ரசிகர் மன்றங்கள் இடையாது. ஆனால் கலைவாணருக்கு மட்டுந்தான் நற்பணி மன்றம் என்று இருந்தது. அவருடைய மன்றங்களைச் சேர்ந்தவர்கள் என்னை அழைத்து வில்லுப்பாட்டுப் பாடச் சொன்னார்கள்.

ஒவ்வொரு முறையும் வில்லுக்குச் செல்லும்போது கலைவாணர் வீட்டுக்குச் சென்று அவரின் வில்லை எடுத்துக்கொண்டு போவேன். நிகழ்ச்சி முடிந்ததும் அவர் வீட்டில்





''எதுக்குங்க பிச்சைக்காரனை சிரிக்கச் சொல்லி இம்சைப் படுத்தறீங்க...?''

'''ஏழையின் சிரிப்பில் இறைவனைக் காணலாம்'னு சொன்னாங்களே!''

— என். நாசர்

---

கொடுத்து விடுவேன்.

இப்படியான ஒரு நாள் மதுரம் அம்மாள் கலைவாணரின் வில்லை என்னிடம் கொடுத்து, ''இது உங்களுக்குத்தான்; நீங்களே வைத்துக் கொள்ளுங்கள்'' என்றார். எனக்கு ஆனந்தக் கண்ணீர். என் குருவின் வில் எனக்குக் கிடைத்ததில் பரவசம் ஏற்பட்டது. அந்த வில்லை வைத்து நான் பல நிகழ்ச்சிகள் செய்தேன். இப்போதும் அந்த வில் என்னிடம் இருக்கிறது.

பிறகு சினிமாவுக்குச் சென்றுவிட்டேன். ஏழு படங்களுக்கு உதவி இயக்குனராக இருந்தேன். 'செந்தமிழே வணக்கம்', 'ஆயிரம் கைகள் மறைத்து நின்றாலும் ஆதவன் மறைவதில்லை' உட்பட சுமார் நாற்பது பாடல்கள் எழுதியிருக்கிறேன்.

இந்த நேரத்தில் என் மகன் கலைவாணன் பொம்மைகளை வைத்து விளையாடிக் கொண்டிருந்தான். ஒரு நாள் அதைப் பார்த்தேன். இரண்டு முட்டை ஓடுகளை இரண்டு ஆட்காட்டி விரல்களிலும் பொருத்திக் கொண்டு அவன் ஆடிய விதம் என்னைக் கவர்ந்தது. உடனே அதைச் செயல்படுத்த நினைத்தேன். பொம்மைகளை வாங்கி கைக்குள் வைத்து மகனுக்கு ஆட்டிஆட்டிக் காண்பிப்பேன். இந்தக் கலையில் என் மகனையும் ஊக்குவித்தேன். பிறகு பொம்மலாட்டமாக, சமுதாயத்துக்குப் பயன்படுகிற மாதிரி ஏதாவது செய்யலாம் என்று நினைத்தேன். பொழுதுபோக்குக்காகச் செய்து கொண்டிருந்த பொம்மலாட்டத்தைத் தேர்தல் பிரசாரத்திலிருந்து விழிப்புணர்வு பிரசாரங்கள் வரை கொண்டு சென்றேன். பொம்மலாட்டக் கலையைப் பொறுத்தவரை என் மகனே எனக்குக் குருவானான்.

தன்னார்வ தொண்டு நிறுவனங்கள், இலக்கிய அமைப்புகளிடமிருந்து எங்களுக்கு அழைப்புகள் வருகின்றன.

பல்வேறு ஊர்களுக்குச் சென்று நிகழ்ச்சி நடத்தியிருக்கிறோம்.

ஒருமுறை வத்திராயிருப்புக்கு நிகழ்ச்சி ஒன்றிற்காகச் சென்றிருந்தோம். அது மூலிகை பற்றிய நிகழ்ச்சி. பொம்மலாட்ட நிகழ்ச்சி முடிந்தும் மக்கள் கலைந்து செல்லவில்லை. அமர்ந்திருந்தார்கள். எங்களுக்குப் பாராட்டுகளைச் சொல்லப்போகிறார்கள் என்று பார்த்தால், நாங்கள் மருத்துவர்கள் என்று நினைத்து, 'இதுக்கு என்ன செய்யலாம்?' 'அதுக்கு என்ன செய்யலாம்?' என்று கேட்க ஆரம்பித்து விட்டார்கள்.

இலக்கிய, பொம்மலாட்ட நிகழ்ச்சியாக 'குமணன் கதை'யை நடத்தினோம். பாடலும், ஆடலும் வரும்போது மக்களை இழுக்க நாங்கள் மேற்கொண்ட முயற்சிகள் பலனளித்தன. நிகழ்ச்சியில் கண்ணீர் காட்சி வரும்போது மக்களும் அழுதார்கள். அவர்களை என் பொம்மலாட்டத்துக்குள் நான் இழுத்ததையே பெரிய வெற்றியாக நினைக்கிறேன்.

நாட்டுப்புறக் கூத்து, ஆட்டங்கள் என்ற பெயரில் இரட்டை அர்த்த வசனங்களைதான் எல்லோரும் நிகழ்த்தி வருகிறார்கள். அவற்றிலிருந்து முற்றிலும் மாறுபட்டு, நானே வசனம், பாடல் எழுதி, புதிய புதிய விஷயங்களைப் பொம்மலாட்டத்தில் பயன்படுத்தி வருகிறேன். டி.வி. நிகழ்ச்சிகளும் ஏராளமாகப் பண்ணியிருக்கிறோம்.

பிறகு பொம்மலாட்டத்துக்கான பொம்மைகளை நானும் என் மகன் கலைவாணனும் தயாரிக்கத் தொடங்கினோம். இப்போது இருநூறு பொம்மைகளுக்கு மேல் இருக்கின்றன.

பொம்மலாட்டம் என்பது சாதாரணமாக நிகழ்த்தக் கூடியதல்ல. வாய் பேசும். இரண்டு கைகளும் வெவ்வேறு அசைவுகளை உடனே உடனே மாற்றிக்கொண்டே இருக்க வேண்டும். பேச்சு ஒரே விஷயத்தையும் பொம்மைகளின் அசைவுகள் வேறு மாதிரியாகவும் அமைந்தால் ஆட்டத்தின் போக்கே கெட்டு விடும்.

கடந்த இருபத்தைந்து வருடங்களாக நானும் என் மகனும் இந்தக் கலையில் ஈடுபட்டு வருகிறோம். ஆனால் அரசிடமிருந்து எங்களுக்கென்று எந்தவித ஆதரவும் இல்லாதது வருத்தத்துக்குரியதாக இருக்கிறது.

பிற நாடுகளில் இம்மாதிரி கலைகளுக்கென்று தனி மானியம் வழங்கி கலைஞர்களை அரசு வாழ வைக்கிறது. அது மாதிரி இல்லையென்றாலும் கூட, அரசு விழாக்களில் விழா தொடங்கும் முன்பாக இதுபோன்ற நிகழ்ச்சிகளை நடத்தவாவது அரசு முன்வரவேண்டும். அது மாதிரி செய்தால் இந்தக் கலையை அழியாமல் காக்கலாம் என்று நினைக்கிறேன்.

சந்திப்பு: **சலாம்ஜி**





# சொல்ல மறந்த கதை!

நடிகனாகியே தீருவது என்ற லட்சிய வெறியோடு மதுரை மேலூரிலிருந்து சென்னை வந்து மரியாதைக்குரிய இயக்குனராய் தன்னை வெளிப்படுத்திக் கொண்ட சேரன் இப்போது ஹீரோ!

'அழகி'யால் தமிழ் சினிமாவை ஒரு கலக்கு கலக்கியிருக்கும் தங்கர்பச்சான், அடுத்து இயக்கும் 'சொல்ல மறந்த கதை'யில்தான் சேரனின் தொடக்க கால லட்சியம் நிறைவேறுகிறது.

''பாண்டவர் பூமி படப்பிடிப்பின் போது, நீ நடிப்புச் சொல்லித் தருவதைக் கூர்ந்து கவனித்துக் கொண்டேயிருந்தேன். இந்தக் கதைக்கான முகம் நீதான் என்று சொல்லிவிட்டார் தங்கர் பச்சான். மண்ணின் கதைக்கு, இந்த மண்ணின் முகமாகவே அறிமுகமாவதில் மகிழ்ச்சி'' என்று சொல்லும் சேரன், ''இந்தப்படம் ஆகஸ்டில் முடிந்தபிறகு உடனடியாக எனது அடுத்தப் படத்தை இயக்குவேன். எனது தோற்றத்துக்கு ஏற்ற கதையென்றால் நடிக்கவும் செய்வேன்... என்றாலும் இயக்கம்தான் எனது தாய். நடிப்புக்கு நான் சேய்'' என்கிறார் அடக்கமாக.

— ஜெ.



# அடையாளங்கள்

ஜெயந்தன் ஆர்.சி

- அவசரமாய் முகர்ந்து
  பரவசமாய் அனுமதிக்கும்
  அன்னையின் மார்பில்
  மோதிக்குடிக்கும்
  ஆட்டுக் குட்டிகள்

- ஆற்றுப் படுகையில்
  பசுமை கரண்டும்
  எருமைக் கன்றின்
  நடு முதுகில்
  பேன்தேடி ஓய்ந்த காகம்.

- தெக்கத்தி வாய்க்காலில்
  வால்பிடித்து வட்டமடிக்கும்
  வாத்துச் சுழல்.

- குட்டிச் சூரியன்கள்
  கொட்டிக் கிடக்க
  அடிக்கடி தடுக்கிவிழுந்தபடி
  பள்ளித் திடலில்
  பட்டாம்பூச்சி துரத்தும்
  குட்டிநாய்.

- தூரத்துச் செவ்வானம்
  தொலைபேசிக் கம்பிகளில்
  வரிசையாய் அசையும்
  தூக்கணாங் குருவிக் கூடுகள்.

- பூக்களின் வாசனையில்
  சிதை நாற்றத்தையும்
  சிறை வைத்துவிடும்
  சுடுகாட்டு இலுப்ப மரங்கள்.

- புருஷன் பிடித்த
  தூண்டில் மீன்களை
  ஒற்றைக் கோரையில்
  கற்றையாய்க் கோத்து
  ''கொரவ மீனே...''
  எனக் கூவி வரும்
  அஞ்சம்மா.

- நீளும் பட்டியலில்
  காணக்கிடைப்பதில்லை
  ஒன்றேனும்
  கறுப்பு நதியோடும்
  கடற்கரைப் பட்டினத்தில்.





"தமிழிலக்கிய வகுப்பு மாணவர்கள், பண்டைய இலக்கியங்களைப் படித்துக் கற்றுக் கொள்வதோடு கூடப் புதிது புதிதாகப் படைக்கவும் வேண்டும். அப்படிச் செய்வதன் மூலம்தான் மொழிக்கு நீங்கள் வளம் சேர்க்க முடியும்" என்கிற முத்தாய்ப்போடு தம்முடைய கல்வி அறக்கட்டளைச் சொற்பொழிவை நிறைவு செய்தார் டாக்டர் மா.இராமலிங்கம் என்னும் எழில் முதல்வன். சென்னை பல்கலைக் கழகத் தமிழ்த் துறை சார்பில் நடந்தது சொற்பொழிவு.

ஒரு பத்து நிமிட இடைவேளை விட்டு இரண்டு பகுதிகளாக அவர் ஆற்றிய நூறு நிமிட ஆய்வுச் சொற்பொழிவு அப்படியே நூல் வடிவம் பெற்றால் மிகவும் பயனுடையதாக இருக்கும்.



'சிறுகதை இலக்கியம் - புதிய போக்கு

# கதைகள்!

கள்' என்று தாம் எடுத்துக் கொண்ட தலைப்பில், ஏறக்குறைய இருபத்தைந்து எழுத்தாளர்களின், நாற்பது சிறுகதைகளைத் தொட்டுக் காட்டினார்.

"முன்பெல்லாம், சிறுகதைகள் என்றால் ஒரு தொடக்கம், மையக் கருத்து, முடிவு ஆகிய கட்டுக் கோப்பு இருக்க வேண்டும் என்கிற முறையில் எழுதினார்கள். இப்போது அசோகமித்திரன் போன்றவர்கள் மையப் பகுதி என்று எதுவும் இல்லாமலே கதை எழுதலாம்'' என்று கூறுவதைச் சொல்லி, படிக்கிறவர்கள், படித்து முடித்த பிறகு சிந்திக்க வைக்கிற ஆற்றல் வெளிப்படுவதையும் குறிப்பிட்டார்.

ஒரு மேல் நாட்டு அறிஞர் சொன்னபடி இந்த மாதிரியான பரீட்சார்த்தமான கதைகளுக்குத்தான் அதிகம் திட்டமிட வேண்டியிருக்கிறது என்றும் சொன்னார்.

முன்பெல்லாம் சில விஷயங்களை எழுதலாகாது என்று ஒதுக்கி மரபு காத்தார்கள். இப்போது அந்த நிலை முற்றிலும் மாறிக் கொண்டு வருகிறது. எதைப் பற்றி வேண்டுமானாலும் எழுதலாம் என்று ஆகிவிட்டது. டாக்டர் மாத்ருபூதம் சொல்கிற 'அறிவியல்' ரீதியிலான பல விஷயங்களை நம்முடைய சிறுகதை ஆசிரியர்கள் ஏற்கெனவே கையாண்டுவிட்டார்கள் என்றும் சொன்னார்.

"இந்த முப்பது ஆண்டுகளில் சிறுகதைகளின் 'பாடு பொருள்' பெரும் அளவில் மாற்றம் பெற்றது. காலம் காலமாகச் சொல்லப்பட்டு வந்த சமுதாய மதிப்பீடுகள் மறு பரிசீலனை செய்யப்பட்டன. மதம் சார்ந்த அமைப்புகள் உருவாக்கிய நம்பிக்கைகளை மூட நம்பிக்கைகள் என்று ஒதுக்கவும் முடிந்தது."

இந்திரா பார்த்தசாரதியின் 'யுக தர்மம்' வாஸந்தியின் 'சிறை', வண்ணதாசனின் 'கலைக்க முடியாத ஒப்பனைகள்', பாலகுமாரனின் 'பொறுத்துப் பொறுத்துப் பார்த்தேன்', கி.ராஜநாராயணனின் 'வந்தது', ஜெயகாந்தனின் 'லவ் பண்ணுங்கோ சார்' சுஜாதா, சிவசங்கரி என்று பல குறிப்பிடத்தக்க கதைகளை அற்புதமாய் எடுத்துச் சொன்னார்.

"இன்றைய கதைகளில் உளவியலின் தாக்கம் அதிகமாகவே இருக்கிறது. கதாசிரியர் உளவியல் படித்திருப்பாரோ இல்லையோ அந்தச் சிந்தனை நிறைய இருக்கிறது. கதையாசிரியர்கள் கதையோட்டத்தில் குறுக்கிட்டுப் பேசிய காலம் உண்டு. இப்போது அந்த ஆசிரியர் குறுக்கீடு என்பதே இல்லாமல் போய் விட்டது" என்றும் சொன்னார்.

டாக்டர் இராமலிங்கத்தின் உரையில் வகைப்படுத்திக் காட்டப்படாத ஓர் அம்சம் சென்ற நூற்றாண்டின் பின் பகுதியில் சுஜாதா போன்றவர்கள் அறிமுகம் செய்த அறிவியல் புனை கதைகள். இந்த உரை, நூல் வடிவம் பெறுகிறபோது, இந்தப் பகுதியைப் பற்றியும் தம்முடைய பார்வையைப் பதிவு செய்வார் என நம்பலாம்.

- சுப்ர. பாலன்



"சுடலை மாடன் துணை", "குரங்கணி அம்மன் துணை", "மதுரைவீரன் துணை", "முத்தாரம்மன் துணை" என்று லாரிகளில் எழுதியிருக்கும் வாசகங்கள் மூலம்தான் எனக்குக் கிராமதேவதைகள் முதன் முதலாக அறிமுகமானார்கள். இப்படியெல்லாம் தெய்வங்கள் உள்ளனவா? என்று வியப்பேன். இந்த வியப்பின் விளைவாகத்தான் இவை குறித்த எனது தேடல் தீவிரப்பட்டது.

கிராமத்திலிருந்து சென்னை நகரத்துக்கு வந்த நண்பர்களிடம் இந்த மக்கள் தெய்வங்கள் குறித்த தகவல்களைக் கேட்டபடி இருப்பேன். பிறகு நான் தமிழகத்து ஓவிய, சிற்ப வெளிப்பாடுகள் குறித்த பரவலான புகைப் படப் பதிவுகளை ஏற்படுத்தும் முயற்சியில் இறங்கியபோது, தமிழகத்தின் ஒவ்வொரு சிறு கிராமத்துக்கும் எனது புகைப்பட உதவியாளருடனும், ஆராய்ச்சி உதவியாளருடனும் பயணப்படத் தொடங்கினேன். அப்போதுதான் தமிழ்நாட்டின் மூலைமுடுக்குகளிலெல்லாம் இருந்து மக்களின் நம்பிக்கையைச் சுவாசித்து இன்றும் உயிர்த் துடிப்போடு இருந்து வரும் மக்கள் தெய்வங்களை அறிந்து வியக்கும் வாய்ப்பினைப் பெற்றேன்.

பார்வதி தேவியின் வியர்வைத் துளியிலிருந்து தோன்றிய முத்தாரம்மனிலிருந்து, சிவனின் வலக்கண்ணிலிருந்து பிறந்த பத்திரகாளியம்மன் வரை அம்மன்களில்தான் எத்தனை வகை! பிடாரி, மாரி, கூளி, இசக்கி என்று பெண் தெய்வங்களில்தான் எத்தனை வகை! இந்தத் தெய்வங்களைச் சுற்றிப் பின்னப்பட்டிருக்கும் கதைகள் அந்தச் சமூகத்தின் பல்வேறு பரிமாணங்களைப் பிரதிபலிக்கும் விதமாக அமைந்துள்ளன.



நான் நகரத்து மனிதன் என்பதால் இந்த மக்கள் தெய்வங்களின் உருவச் சிலைகள் குறித்துத் தனிப்பட்ட தேடுதல் கொண்டவனாக இருந்தேன். குறிப்பாகப் பெண் தெய்வங்களை எடுத்துக் கொண்டால் மிகவும் கொடூரமான முறையில் அவை சித்திரிக்கப் பட்டிருப்பதைக் காண நேர்ந்தது.

சுடுமண் சிற்பமாக வழிபடப்படும் இசக்கியம்மன் ஒரு சிறு குழந்தையை வாயில் கடித்துக் கொண்டு இருக்கிற அதே நேரத்தில் இன்னொரு குழந்தையை இடுப்பில் சுமந்து கொண்டிருக்கிறது. மற்றொரு குழந்தையைக் காலடியில் போட்டிருப்பதையும் காண நேர்ந்தது.

இத் தெய்வத்தின் உக்கிரம் எனக்கு அதிர்ச்சியூட்டுவதாக இருந்தது. ஆனால் இவை குறித்த கர்ண பரம்பரைக் கதைகளை ஊர் பெரிசுகளிடம் விசாரிக்கிற போதுதான் இவை தோன்றியதற்கான மானிடவியல்ரீதியான காரணங்கள் நமக்குப் புலப்படத் தொடங்கும்.

உதாரணமாக தமிழகம் முழுவதும் காணப்படும் ஐயனார் சிலைகளை எடுத்துக் கொள்வோம். ஒரு ஐயனார், குதிரையின் மீது அமர்ந்த நிலையில் காணப்படுகிறது என்று சொன்னால் அவர் பௌத்தர் என்றும், யானையின் மீது அமர்ந்த நிலையில் காணப்பட்டால் அவர் சமணர் என்றும் பழம் பெரும் ஆய்வாளர் மயிலை. சீனி.வேங்கடசாமி எழுதுவதைப் படிக்கிற போது வியப்பு

மேலிடுகிறது.

அடுத்ததாகக் குறிப்பிட்டுச் சொல்லத் தகுந்தவர்கள் திருநெல்வேலி பகுதிகளில் பரவலாகக் காணப்படும் பல்வேறு சுடலை மாடன்கள். இவற்றிற்கு உருவரீதியான சிலைகள் கிடையாது. கூம்பு வடிவத்தில் ஒரு மகுடத்தைக் கட்டி விட்டு அதைச் சுடலை மாடன் என்று குறிப்பிடுகிறபோது அருபமயமான ஒரு புரிதலுக்கு நமது மக்கள் பழக்கப்பட்டிருப்பது தெரியவரும்! சில மாடங்களில் முகங்கள் மட்டும் பதிக்கப்பட்டிருக்கும். கொடைவிழா நடைபெறும் நாட்களில் மட்டும் இந்த மாடங்களைப் பூக்களாலும், மஞ்சள், குங்குமம், சந்தனம் ஆகியவற்றாலும் பல்வேறு வண்ணங்கள் பூசப்பட்டு இந்தக் கிராம தெய்வங்களின் முகங்கள் மக்களின் கற்பனை சக்திக்கேற்ப உன்னதமான முகமூடிகளாகவும் செய்யப்படுவதுண்டு. அதுபோன்ற நேரங்களில் சுடலைமாடனுக்கு அமைக்கப்பட்ட ஒரு முகமூடியில் இரண்டு கொம்புகள் வைக்கப்பட்டிருப்பதையும் கண்டேன்.

இத் தெய்வங்களின் தோற்றம் குறித்த கதைகள் மிகவும் சுவாரசியமானவை. நாட்டுப்புறவியலில் சிறப்பு அக்கறை கொண்டவர்கள் தங்களுக்குள் இருக்கும் குழுமாச்சர்யங்களை விட்டு ஒன்றுகூடி முயல்வார்களென்றால் இக் கதைகளை மட்டுமே திரட்டி பல்வேறு தொகுதிகளாகக் கொண்டு வர முடியும். குறிப்பாக இத் துறையில் சாதனை படைத்தவர்களான டாக்டர். தே. லூர்து, ஆ. சிவப்பிரகாசம்,



“சிறு தெய்வங்கள் என்று இவர்களை அழைப்பதில் எனக்குச் சம்மதமில்லை. கிராம மக்களின் முழுமையான நம்பிக்கைக்கு உரியவை இவை.”

அலங்கரித்து அதில் ஓர் உருவத்தைக் கொண்டு வருவார்கள். இதே போல்தான் சங்கிலி கருப்பன், பிணமாலை சூடும் பெருமாள், தளவாய் மாடசாமி போன்ற தெய்வங்களும்.

மூன்று, நான்கு பீடங்களாக இருப்பவை விழாக்காலங்களில் இருபத்தோரு பீடங்களாக மாறிவிடும். துணிகளை இணைத்துத் தைத்து ஒரு கூடாரம் அமைப்பது போன்ற அலங்காரங்களும் நடைபெறுவதுண்டு. காகிதக் கூழினைப் பயன்படுத்தி, அதன் மீது ஆறு. இராமநாதன், ஆ. செல்வபெருமாள், ஆ. தனஞ்செயன், சு. சண்முகசுந்தரம் என்று நீளும் ஆராய்ச்சியாளர்களின் உதவி நாடப்படுமானால் நாட்டுப்புறத் தெய்வங்கள் குறித்த மிக நல்ல புரிதலை நாம் உருவாக்க முடியும். இத் தெய்வங்கள் குறித்த ஆய்வில் ஈடுபடுகிறபோது நமது அன்றாடப் பேச்சு வழக்கில் காணப்படும் பல்வேறு சொற்களுக்கும் கூட விளக்கம் கிடைக்க முடியும்.

பொதுவாக இன்றைக்கும் கூட சென்னை நகரத்தில் அலுவலகங்களில் வேலை செய்கிற

வர்கள் மத்தியில் ஒரு பேச்சு வழக்கு உண்டு. உயர் அதிகாரியிடம் தன்னை, இன்னொருவர் இரகசியமாகக் குறைசொல்லிவிட்டு வர நேர்ந்தால் அதை "அவன் போட்டுக் கொடுத்துட்டாங்க'' என்று சொல்வதுண்டு. இது திருநெல்வேலி பகுதிகளில் கிராம தெய்வங்கள் குறித்த ஒரு பேச்சு வழக்கிலிருந்து வருகிறது. "போட்டுக் கொடுத்த சாமி" என்று இக் கிராம தெய்வங்களில் சிலவற்றைச் சொல்லும் வழக்கமுண்டு.

ஒரு பகுதியில் வாழும் மக்கள் அங்கிருந்து புதிய இடத்திற்கு வாழ்தல் காரணமாக இடம் மாறிப் போகிற போது அந்தப் புதிய இடத்தில் தாங்கள் வழிபடும் சாமிக்கான கோயில் கட்டுவது வழக்கம். உதாரணமாக சென்னையில் வாழும் ஒரிசாவிலிருந்து வந்த ஒரிய மொழிக்காரர்கள், இங்கு தாங்கள் வழிபடும் பூரி ஜெகநாதருக்காகப் பெரிய கோயிலைக் கட்டி இருப்பதைச் சொல்லலாம். இதே போல் டெல்லியில் கட்டப்பட்டிருக்கும் நமது முருகன் கோயில். இதனை 'மலைமந்திர்' என்று அழைப்பதுண்டு. இதே போன்று ஒரு கிராமத்திலிருந்து இன் னொரு கிராமத்துக்கு இடம்பெயர்கிறபோது, தாம் வழிபட்டு வந்த சுடலைமாடனின் பீடத்திலிருந்து ஒரு பிடி மண்ணை எடுத்துக் கொண்டு போய் புதிய இடத்தில் அதைப் போட்டு அங்கு ஒரு புதிய பீடத்தை அமைப்பது வழக்கம். இந்தப் பழக்கம் குறித்து டாக்டர் தே. லூர்து விளக்கமாக எழுதியிருக்கிறார். இப்படி அமைக்கப்பட்ட சாமியைப் 'போட்டுக் கொடுத்த சாமி' என்று இப் பகுதி மக்கள் அழைக்கிறார்கள். இந்த போட்டுக் கொடுத்தல்தான் சென்னை போன்ற நகரங்களில் "போட்டுக் கொடுத்தல்'' என்று நகைச்சுவையாக வழங்குகிறது.

இந்தக் கிராம தெய்வங்கள் தோன்றும் முறை மிகவும் சுவாரசியமானது. இதில் பல தெய்வங்கள் கொலையில் உதித்தவை என்று குறிப்பிடுகிறார் ஆய்வாளர் ஆ. சிவசுப்பிரமணியன்.

காத்தவராயன், மதுரை வீரன், சின்ன நாடான், கௌதவமாடன் போன்ற தெய்வங்கள் அவர்களது ஊர்களுக்குள் நிலவும் சாதி அமைப்பின் முறைகளை மீறியவர்கள். இதனால் இவர்கள் கொல்லப்பட்டனர்.

முத்துப்பட்டன் தாழ்த்தப்பட்ட சங்கிலியப் பெண்டிரை மணந்து கொண்டவன்.



''சோறு கண்ட இடமே 'சொர்க்கம்'னு இருந்தானே உங்க பையன்... இப்ப என்ன பண்றான்?''

''கோயிலே 'கதி'னு இருக்கிறான்!''

— எஸ். சக்திகுணசீலன்

இவன் பகைக் கூட்டங்களை மீட்பதற்காகப் போர் மேற்கொண்ட போது கொல்லப்பட்டவன். இவர்கள் ஒரு சமூகநீதி கருதிய போரில் கொல்லப்பட்ட காரணங்களினால் தெய்வங்களாக மாறி விடுகிறார்கள். இவர்கள் குறித்த கதைகளில் கொலையுண்டவன் ஆவியாக மாறி பழி வாங்கத் தொடங்கி விடுகிறான். நீலி கதையில் ஒரு பிறவியில் நடந்த கொலைக்கு அடுத்த பிறவியில் பழிவாங்கப்படுகிறது. இவர்கள் மட்டுமின்றி பிள்ளைப் பெறாது இறந்த பிள்ளைத்தாய்ச்சிகளும் கூட கிராம தெய்வங்களாக மாறி விடுகிறார்கள்.

இந்த 'மக்கள் தெய்வங்கள்' குறித்துப் பேசுகிற போது பொதுவாக 'சிறு தெய்வங்கள்' என்று அழைக்கப்படுவதுண்டு. 'சிறு தெய்வங்கள்' என்று இவர்களை அழைப்பதில் எனக்குச் சம்மதமில்லை. கிராம மக்களின் முழுமையான நம்பிக்கைக்கு உரியவை இவை. மக்களின் கூட்டுக் கனவிலிருந்து வடித்து எடுக்கப்பட்ட வண்ண வடிவ பிரதிகள் இவை. இவை கிராமத்தின் ஒருங்கிணைந்த வாழ்க்கைக்கும், ஒழுக்க நியதிகளுக்கும் ஆதாரமாக இருக்கும் நம்பிக்கைகளின் அடிப்படையில் தோற்றுவிக்கபட்டவை. தெய்வநம்பிக்கையில் சிறியது பெரியது என்று ஏதேனும் இருக்கிறதா என்ன? ○

புதிய தொடர்கதை

# 1

அன்று ஓர் அசாதாரணம் நடக்கப்போகிறது என்பதற்கான அறிகுறி ஏதும் இருக்கவில்லை. நடந்த நிகழ்வுகளை வரிசைப்படுத்தி மீண்டும் நினைவுக்குக் கொண்டுவரும்போதெல்லாம் சகுந்தலாவுக்கு அப்படித்தான் தோன்றிற்று. தொலைவில் இருக்கும் மசூதியிலிருந்து வழக்கம்போல விடியற்காலை நாலரை மணிக்கு விநாடி பிசகாத முனைப்புடன் சுருதி பிறழாத சத்தத்துடன் 'அல்லாஹு அக்பர்' கேட்டது. தில்லி மாநகரம் விழிப்பதற்கு முன் மொட்டு போல, பரத் படுக்கையில் எழுந்து அமர்ந்தான், வழக்கம் போலவே. ராஜாவை எங்கே குழந்தை எழுப்பிவிடுமோ என்கிற கவலையினால் அவள் தூக்கக் கலக்கத்துடன் அதை மறுபடி படுக்கச் செய்து முதுகில் தட்டியதும் பரத் தூங்கிப்போனதும் அவளுக்குக் கனவைப் போல ஞாபகம் வந்தது. கனவைப் போல நித்தியம் நடக்கும் நிகழ்ச்சி அது என்பதால் அன்றும் அப்படித்தான் நடந்திருக்கும் என்று அவளுக்கு நிச்சயமாகத் தெரியும். ஆனால் அன்றைய தினம் அசாதாரணமானதாக இருக்கும் என்று நிச்சயமாகத் தெரிந்திருக்கவில்லை.

# பொய்யில் பூத்த நிஜம்



உலக வர்த்தக மையத்தில் தாக்குதல் நடந்த அன்றும் எப்போதும் போலத்தான் விடிந்திருக்க வேண்டும். அங்கு வேலை செய்த பல இனத்து அப்பா அம்மாக்களுக்குப் பல இனத்து அமெரிக்கக் குழந்தைகள் டாட்டா சொல்லியிருக்கும். அன்று காலை பரத், ராஜாவுக்கு டாட்டா சொன்னதுபோல. காதல் மனைவிகள், சிநேகிதிகள் சிநேகிதர்கள் காதலிப்பவர்களுக்கு முத்தம் பதித்து அனுப்பியிருப்பார்கள். அவன் பதித்த மாதிரி. கன்னத்தில் இன்னும் ராஜாவின் அதரங்களின் ஸ்பர்சத்தை சகுந்தலா உணர்ந்தாள். ஆபத்து வரப்போவது முன்கூட்டியே மனுஷனுக்குத் தெரிந்து போனால் விபத்துகள் இல்லை, சேதங்கள் இல்லை என்று நினைக்கத் தோன்றிற்று. அவளுக்குப் பாட்டியின் நினைவு வந்தது. பாட்டி, தான் அசாதாரணமானவள் என்பதை அடிக்கடி நிரூபித்துக் கொள்வாள். வீட்டு மனிதர்கள் யாராவது இறந்து போனால், அவளுக்கு முன்கூட்டியே சமிக்ஞைகள் ஏற்பட்டிருந்ததாகச்

# ● வாஸந்தி



சொல்வாள். தளதளவென்று இருந்த துளசி வாடிப்போனதும், முந்தைய மாதம் நடந்த சமங்கலிப் பிரார்த்தனையின் போது இறந்தவர்களின் பெயர்ப் பட்டியலோடு இப்பொழுது இறந்த வளின் பெயரை வாய்தவறி சொன்னதும், வரவிருக்கும் நிகழ்வுகளுக்கான எச்சரிக்கையின் அடையாளங்கள் என்று தான் பயந்ததாகச் சொல்வாள். சகுந்தலாவின் அம்மா பானுமதி, அதாவது பாட்டியின் மகள், 32 வயதில்

இறந்தபோது அதைச் சொல்லித்தான் பாட்டி புலம்பினாள். சுமங்கலிப் பிரார்த்தனையில வாய்தவறி சொன்ன பெயர் பானுமதியாம். "ஆனா வரப் போறதை யாரால் தடுக்க முடியும்? தயாராயிரு, அதிர்ந்து போயிடாதேன்னு, நமக்கு பகவான் காண்பிக்கிற சிக்னல் அது" ஆனால் பாட்டியின் பெண் இறந்தபோதும், தம்பி இறந்தபோது, இப்படிப்பட்ட சிக்னல்கள் முன்கூட்டி கிடைத்திருந்தும், இரண்டு துக்கமும் தாங்காமல் பாட்டி உடைந்து போனாள். சகுந்தலாவுக்குப் பாட்டியின் சூட்சுமம் இல்லாததால், வரப் போகும் நிகழ்ச்சியைப் பற்றி எந்த அடையாளமும் தெரியவில்லை. இனி என்ன நடக்கும்? என்று நினைத்துப் பார்க்கவே பயமாக இருந்தது.

> எதையோ பற்றிக் கொள்ள வேண்டும் போல் இருந்தது. எந்த உருப்படியான பிரார்த்தனை வரிகளும் நினைவுக்கு வராமல், கடவுளே கடவுளே என்று தன்னிச்சையாக வாய் ஜபித்தது.

தெரிந்திருந்தாலும் என்ன செய்திருக்க முடியும்? வெளியில் போகவேண்டாம் என்று ராஜாவைத் தடுத்திருக்க முடியுமா? 'போகாதே போகாதே என் கணவா, பொல்லாத சொப்பனம் நானும் கண்டேன்' என்று தன்னால் சொல்ல முடியாது – கனவுகளே அவளுக்கு வருவதில்லை என்பதால். ராஜாவும் கேட்கும் ஆசாமியில்லை – அவன் மற்ற கணவன்மார்களைப் போன்றவன் இல்லையென்பதால்.

பரத்துக்குப் பரபரப்புடன் ஃபேரக்ஸ் கொடுத்து வாயைத் துடைத்து பவுடர் போட்டுச் சொக்காய் அணிவித்து கிரெஷ்ஷில் விடுவதற்கான ஆயத்தங்களின் ஊடே வரும் ஃபோன்கால்களுக்குப் பதில் சொன்னபடி அவள் நினைத்துக் கொண்டாள். பாட்டிகளின் காலம் முடிந்தது. பேத்திகளின் காலத்தில் துளசி இலையில் செய்தி வராது. ஒவ்வொரு தருணமும் இப்போது சஸ்பென்ஸ். அது ஆபத்தைச் சுமக்கிறதோ ஆனந்தத்தை இறக்குகிறதோ! அதை நேரிடையாக எதிர்கொள்ளத் தயாராயிருக்க வேண்டும், தாங்க சக்தியிருக்கிறதோ இல்லையோ.

லிஃப்டின் பொத்தானை அழுக்கும் போது கண்களில் நீர் கோத்து ஊசி முனை போல் குத்திற்று. லிஃப்ட் வாயைப் பிளந்து வழி விட்டதும் பரத் ஏதோ தரிசனம் கண்டதுபோலச் சிரித்தான். இடுப்பில் அவனைத் தூக்கியபடி பார்க்கிங் லாட்டில் இருந்த காரின் கதவைத் திறந்து குழந்தைக்காகப் பொருதப்பட்டிருந்த சீட்டில் உட்கார்த்தி பெல்டைப் போட்டதும் பரத் குஷியுடன் காலை உதைத்துச் சிரித்தான். 'அம்மா மாதிரி ஊர் சுத்தி' என்று ராஜா சொல்வான். 'அப்பா மாதிரி ஏமாத்துக்காரன்' என்பாள் அவள் பதிலுக்கு.

"ஏய், நா என்ன செஞ்சேன் அப்படி ஒரு பட்டத்துக்கு?"

"பின்னே என்ன? சிரிச்சு சிரிச்சே என்னைச் சம்மதிக்கவெச்சே!"

"என் சிரிப்பைப்பாத்து நீ சம்மதிக்கல்லே, சுய உணர்வோடதான் சம்மதிச்சே. உன்னையே நீ இறக்கிப் பேசாதே, நீ முட்டாள் பெண்ணில்லே!"

க்ரெஷ் நெருங்கிவிட்டதை உணர்ந்து அவள் வண்டியை நிறுத்தினாள். குழந்தைக்கான சீட்டின் பெல்டைக் கழற்றி பரத்தைத் தூக்கி இடுப்பில் வைத்துக் கதவைப் பூட்டி, அவள் அழைப்பு மணியை அழுத்தியதும் ஸல்வார் கமீஸ் அணிந்த வெளேர் என்ற நடுத்தர வயது பெண்மணி ஒருத்தி வெளியில் வந்தாள். ரத்தச் சிவப்பு உதடுகளை விரித்து 'நமஸ்தேஜி, ஆயியே' என்றாள். 'நீங்க ஃபோன் பண்ணதா வேலைக்காரப் பெண் சொன்னா. என்ன இன்னிக்கு லேட்டா வந்திருக்கீங்க? ஆபீசுக்குப் போகலையா?"

"இல்லே. மிஸஸ் மல்ஹோத்ரா. லீவிலே இருக்கேன். பரத்துடைய அப்பா ஆஸ்பத்திரியிலே இருக்கார். நேத்து ஆக்ஸிடென்ட் ஆயிட்டது."

"அடாடா எப்படி?" மிஸஸ் மல்ஹோத்ராவின் கண்கள் அனுதாபத்துடன் விரிந்தன. குழந்தையை வாங்கிக் கொண்டபடி, 'சீரியஸ் இல்லையே?' என்றாள். சகுந்தலா உதட்டைக் கடித்தபடி இலேசாகச் சிரித்தாள். "தெரியல்லே. டாக்டர் சரியா எதுவும் சொல்லல்லே. இவருக்கு இன்னும் நினைவு வரல்லே."

மிஸஸ் மல்ஹோத்ராவுக்கு எதிரில் தன் பலவீனத்தைக் காண்பிக்கக் கூடாது என்று அவள் தீவிரமாக முயற்சிசெய்தாள். கண்கள்

குளமாகிப் போயின. சங்கடமேற்பட்டது. மிஸஸ் மல்ஹோத்ராவின் இடது கை அவள் தோள் மேல் அமர்ந்தது.

"தக-தக-ரிலாக்ஸ் பெஹறன்ஜி, ஆண்டவன் இருக்கிறார். கவலைப்படாதிங்க, எந்த ஆஸ்பத்திரி?"

"அப்பொல்லோ இந்திரப்ரஸ்தா."

"அப்பொல்லோவா, ரொம்ப தூரமில்லே?"

"கொஞ்சம் தூரம்தான், அவருடைய ஆபீசுக்குப் பக்கம்னு ஆபீஸ்காரங்க சேர்த்திருக்காங்க."

"ஓ, சரிதான், உதவிக்கு யார் இருக்காங்க?"

இவன் ஏன் தொணதொணக்கிறான்?

"ஃப்ரெண்ட்ஸ்தான் மிஸஸ் மல்ஹோத்ரா. நா கிளம்பறேன். நா வர்ற கொஞ்சம் லேட்டானா..."

"நோ ப்ராப்ளம், குழந்தையை நா பார்த்துக்கறேன்."

அவளுக்கு உண்மையிலேயே நன்றி சுரந்தது. "தாங்க்யூ, அதுக்கு எக்ஸ்ட்ரா பேமெண்ட் பண்ணுவேன்."

மிஸஸ் மல்ஹோத்ரா கருணையுடன் சிரித்தாள். "நோ ப்ராப்ளம் பெஹறன், நாங்க வியாழக்கிழமை சாயி பஜன் செய்வோம். பிரார்த்தனை பண்றோம். உங்க புருஷன் நன்றாக ஆகிவிடுவார். உங்களுக்குக் கடவுள் நம்பிக்கை இருக்கோ இல்லையோ!" சகுந்தலா அவள் தோளைத் தொட்டு, "தாங்க்யூ. உங்க பிரார்த்தனை எனக்குத் தேவை" என்றபோது நாபியிலிருந்து வார்த்தைகள் கிளம்பி அவளை நெகிழ்வித்தன. பரத்தின் கன்னத்தைத் தட்டி 'சமத்தாயிரு கண்ணு' என்றாள் தமிழில். 'டாட்டா' என்று அவள் கையசைத்தபோது அது 'டாட்டா' என்றது. 'சமத்து' என்றபடி அவள் காருக்குத் திரும்பினாள். இதுவரை இல்லாமலிருந்த பலவீனம் அவளை ஆட்கொண்டிருந்தது.

'உனக்குக் கடவுள் நம்பிக்கை இருக்கோ இல்லையோ?' பாட்டியின் காலம் முடிந்த கையோடு எல்லாம் போச்சு என்று மிஸஸ் மல்ஹோத்ராவிடம் விளக்கிக் கொண்டிருக்க முடியாது. அது ஒரு பாரதக் கதை. எமதூதன் வந்து நின்ற சமயத்தில் பாட்டியே விரக்தியின் எல்லைக்குச் சென்றிருந்தாள். இன்று பாட்டி உயிரோடு இருந்திருந்தால் சகுந்தலா வாழும் வாழ்க்கையைக் கண்டு அதிர்ந்திருக்க மாட்டாள். சாமியே வேண்டாங்கற ஞானியா நீ? என்று கேட்கமாட்டாள்.

ஆனால் இன்று நடுக்கடலில் நிராதரவாகத் தத்தளிப்பதுபோல இருந்தது. எதையோ பற்றிக் கொள்ள வேண்டும் போல் இருந்தது. எந்த உருப்படியான பிரார்த்தனை வரிகளும் நினைவுக்கு வராமல், கடவுளே கடவுளே என்று தன்னிச்சையாக வாய் ஜபித்தது. 'ராஜா பிழைக்கணும், நல்லபடியா ஆகிடணும்.' இதுவரை அவள் கூப்பிடாத, தேவையில்லை என்று அவள் நிராகரித்த கடவுள் வந்து நிற்பாரா? என்று நிச்சயமில்லை. இப்போதைக்கு டாக்டர்கள் தான் கடவுள்கள். ஆனால் அவர்களைப் பார்க்கும்போது நம்பிக்கை ஏற்படவில்லை. அவளுக்குப் பீதி ஏற்பட்டது. அவர்கள் கட்டுக்குள் அவளுடைய வாழ்வு வசமாகச் சிக்கிக் கொண்டதுபோல. ராஜாவுடன் குடும்பம் நடத்திவரும் இந்த இரண்டு ஆண்டு



"உன்னை இடிச்சுட்டு அந்தப் போலிஸ்காரர் என்ன சொல்லிட்டுப் போறார்?"

" 'தொந்தி'ரவுக்கு மன்னிக்கவும்'னு சொன்னார்."

— மதுரை என். உஷாதேவி

களில் ஒருமுறை கூட அவனோ அவளோ எந்த நோவுக்கும் ஆஸ்பத்திரிக்குச் சென்றதில்லை. பரத்தின் பிரசவத்துக்காக அவள் மூன்று நாள் சென்றதைத்தவிர. நேற்று காலைவரை ராஜா நினைத்திருக்க மாட்டான், ஆஸ்பத்திரியில் பலவித குழாய்கள் பொருத்தப்பட்டு பாண்டேஜ் துணிகளால் கட்டப்பட்டு சாகக்கிடப்பவர் மத்தியில் இன்டென்ஸிவ் கேரில் படுக்க நேரும் என்று.

அவனுக்குச் சுயநினைவு வந்தபிறகுதான் தெரியும், எப்படி இந்த நிலைக்கு ஆளானான் என்பது. இப்போது நினைவு திரும்பியிருக்கலாம். கையில் அவனுடைய மொபைலை எடுத்துக் கொண்டு வராதது மடத்தனம். நேற்று அவன் கையில் இருந்த மொபைல். விபத்தை எதிர்பார்த்திருந்தானானால் யாருக்காவது சொல்லியிருப்பான்.

ரிங் ரோடில் டிராஃபிக்கினால் இடிபடாமல், கம்பத்தில் மோதி கார் நொறுங்கியதாகச் சொன்னார்கள். நியூ ஃப்ரெண்ட்ஸ் காலனிக்கு அருகில், அலுவலகத்துக்குச் சமீபத்தில். 'அவன் பிழைச்சிருப்பதே உன் அதிர்ஷ்டம்' என்றான் ராஜாவுடன் வேலை செய்யும் விவேக் குப்தா. அவள் பத்து வயதுச் சிறுமியாக இருந்தபோது தூரத்து மாமா ஒருவர் மோசமான விபத்தில் மாட்டிக் கொண்டு உயிர் பிழைத்தபோது அவர் பிழைத்தது மாமியின் தாலி பாக்கியம் என்று பாட்டி மெய் சிலிர்த்தது ஞாபகத்துக்கு வந்தது. அவளுக்கு இலேசாக உடம்பு நடுங்கிற்று. கடவுளே - இப்படிப்பட்ட நினைவுகளிலிருந்து எனக்கு எப்போது விமோசனம்?

டிராஃபிக்போலீஸ் விரைந்து வந்து பார்த்து அவனுடைய அலுவலக அடையாள அட்டையில் இருக்கும் எண்ணிற்கு அவனது மொபைலிலேயே தொடர்பு கொள்ள, விவேக்தான் சிலருடன் சென்று சற்று அருகில் இருக்கும் அப்பொல்லோவில் சேர்த்திருக்கிறான்.

“காரைப் பார்த்ததும் கடவுளே உனக்கு எப்படி செய்தி சொல்வேன்னுதான் எண்ணம் வந்தது. எனக்கு நம்பிக்கையே இருக்கல்லே அவனை உசிரோடு பார்ப்பேன்னு.”

விவேக் மகா நல்லவன். போனில் செய்தி சொல்லி அவளைக் கலவரப்படுத்தாமல், ஆபீஸ் வண்டியை எடுத்துக் கொண்டு அவள் வேலை செய்யும் இடத்துக்கே வந்துவிட்டான். அவனுடன் ஆஸ்பத்திரிக்குப் பயணிக்கும்போது அங்கு ஏதும் விபரீதம் காத்திருக்கக் கூடாதே என்று அவள் பதைத்ததும் கைகள் நடுங்கியதும் அவனுக்கு வெளிப்படையாகத் தெரிந்தன.

“பிழைச்சிருக்கான் என்னை நம்பு” என்றான் திரும்பத்திரும்ப. கண்ணால் பார்க்கும்வரை அவளுக்கு நம்பிக்கையில்லை. டாக்டர்கள் உயிர் இருக்கிறது என்று சொன்னதைத் தவிர வேறு எந்தச் சலனமும் ராஜாவின் உருவத்தில் தெரியவில்லை. மிகைப்படுத்தப்பட்ட சினிமாக் காட்சிபோல ஏக ட்யூப்கள் பொருத்தப்பட்டு அங்கு நினைவில்லாமல் படுத்துக்கிடப்பது ராஜா என்று நம்புவது கஷ்டமாக இருந்தது. கை நழுவி அவன் போய்விட்டதாக அவளுக்குத் தோன்றிற்று. டாக்டர்கள் இறுக்கமாகத் தெரிந்தார்கள். 48 மணி நேரம் செல்ல வேண்டும் என்று கெடு சொன்னார்கள். “எங்களால் அதிகபட்சம் முடிந்ததைச் செய்கிறோம் டோன்ட் ஓர்ரி.”

தன்னிச்சையாக வண்டி ஓடுவதுபோல் இருந்தது. எங்கே இருக்கிறோம் என்று டிராஃபிக் ஜாமுக்கிடையே கண்ணைத் துழாவினாள். நிஜாமுதின் ப்ரிட்ஜைத் தாண்டி மகாராணி பார்க்கில் நிற்பது புரிந்தது. இங்கிருந்து ஆஷ்ரம் – இடப்பக்கம் ஒடித்து தில்லி மத்ரா ரோடு என்று நினைவுபடுத்திக் கொண்டு நகர்ந்தாள். சற்று தொலைவில் அப்பொல்லோ மருத்துவமனையின் பிரும்மாண்டக் கட்டடம் தெரிந்தது. ஐந்து நட்சத்திர ஓட்டல் போல. சவக்களை காட்டாத ஆஸ்பத்திரி. திட்டமிட்ட மாயத்தோற்றம். அந்த நினைப்பே வயிற்றைக் கலக்கிற்று. அவள் வண்டியை நிறுத்திவிட்டு நடந்தாள். வலப்பக்கம் தென்னிந்திய பாணியில் சின்ன கோபுரத்துடன் கோவில். பிள்ளையார் கோவிலாக இருக்க வேண்டும். வெளியிலே நின்றபடி வேஷ்டி அணிந்த இருவர் தோப்புக்கரணம் போட்டார்கள். முகப்பு வாசலைத் தாண்டியது! ஏக நோயாளிக் கூட்டம் அல்லது பார்வையாளர் கூட்டம். அவள் படிப்பறிவில்லாதவள் போல சற்றுத் தடுமாறி ராஜமோஹனைக் காண வந்திருக்கும் அவனது மனைவி என்று ரிஸப்ஷனில் சொல்லி, ரிஜிஸ்டரில் கையெழுத்திட்டு, ஐ.ஸி.யு. வார்ட்டுக்குச் செல்வதற்குள் பதைத்துவிட்டாள். கதவருகில் நின்றிருந்த விவேக்கும், ராஜாவுடன் வேலை பார்க்கும் இன்னொரு நண்பன் கதிர் கோஷும், 'வா' என்பதுபோல் தலையசைத்தார்கள். விவேக் இலேசாகப் புன்னகைத்ததுபோல் இருந்தது. அவள் விரைந்து அருகில் சென்று உள்ளே பார்த்தபடி “எப்படியிருக்கிறான்?” என்றாள்.



“எந்த மாற்றமும் இல்லை” என்றான் விவேக். “மோசமாயிடல்லே.”

“நல்ல வேளை” என்றாள் அவள் பிரமை பிடித்தவள்போல. “டாக்டர் வந்தாரா? என்ன சொன்னார்?”

“வந்தார். நினைவு வந்துட்டா கவலையில்லேங்கறார்!”

அவளுக்குச் சொரேல் என்றது. டாக்டர்

பொறுப்பில்லாமல் பேசுவதுபோல இருந்தது.

"அதை நாகூட சொல்வேனே? அவர் என்னதான் சொல்லவரார்? நினைவு வருமா வராதாமா?"

குரல் உயர்ந்ததை உணர்ந்து கண்களில் தளும்பிவிட்ட நீரை நினைத்து, சங்கடத்துடன் அவள் தலையைக் குனிந்து கொண்டாள். விவேக்கின் கை அவள் தோளின் மேல் இதமாக அமர்ந்தது.

"உன்னுடைய நிலைமை எனக்குப் புரிகிறது, எங்களுக்கே தாங்கல்லே. இ டாக்டர்ஸ் ஆர் டூயிங் தெர் பெஸ்ட். ஒரு முக்கியமான விஷயம், ராஜாவுக்கு விபத்துக்கு முந்தி மாரடைப்பு வந்திருக்கணும்னு சொல்றார்."

"என்னது?" என்றாள் அவள் அதிர்ச்சியுடன்.

"ஆமாம். உன்னோடு பேசணும்னு சொன்னார். [illegible]

## தாத்தா வீடு!

இப்படி சிதிலமடைந்து கிடக்கும் வீடு தமிழ்த்தாத்தா உ.வே.சாவினுடையது. கபிஸ்தலம் அருகிலுள்ள உத்தமதானபுரத்தில் இருக்கும் இந்த வீட்டில் இப்போது யாருமில்லை. தமிழக அரசு இந்த வீட்டை உ.வே.சாவின் நினைவு இல்லமாக ஆக்க வேண்டுமென்று இப்பகுதி மக்கள் நினைக்கிறார்கள்.

_ பிரசன்ன குமார்.
குடந்தை

இங்க வருவாரா[illegible] அப்பனுக்கு ஏதாவது ப்ராப்ளம் இருந்ததான்னு கேட்டார். அதாவது நெஞ்சுவலி மாதிரி..."

"நெவர்!" என்றாள் அவள் உறுதியுடன். "ராஜா தலைவலின்னுகூட படுத்ததில்லே. என்னாலே நம்பமுடியல்லே விவேக்! அன்னிக்குக் காலையிலேகூட ரொம்ப நார்மலாத்தான் கிளம்பிப் போனான்."

"அவனுடைய குடும்பத்திலே யாருக்காவது இப்படி இருக்கான்னு டாக்டர் கேட்டார்" என்றான் கதிர்.

அவள் ஒரு வினாடி திகைத்து நின்றாள். பிறகு தன்னைச் சமாளித்துக் கொண்டு "எனக்கு அதப்பத்தித் தெரியாது" என்றாள். "ராஜா எங்கிட்ட எதுவும் சொன்னதில்லே."

அவர்கள் ஏதோ சொல்லத் தயங்குவது போலத் தோன்றிற்று.

"நான் ராஜாவைப் பார்த்துட்டு வரேன்" என்று சட்டென்று அவள் ஐ.ஸி.யுக்குள் நுழைந்தாள். அங்கிருந்த மயான நிசப்தம் வயிற்றைக் கலக்கிற்று. பிரேதக்களையுடன் படுத்திருக்கும் உடல்கள். பீதியில் உறைந்து பிரேதங்களாய்க் கட்டிலை ஒட்டி அமர்ந்திருக்கும் ஒன்றிரண்டு முகங்கள். ராஜாவின் கட்டிலுக்கருகில் செல்வதற்குள் பாதங்கள் பின்னலிட்டுத் தடுமாறின. உயிர் இருப்பதற்கு அடையாளமாய் மார்பு எழுந்து எழுந்துத் தணிந்ததைத் தவிர அந்த முகத்தில் உயிர்த் துடிப்பின் அடையாளமில்லை. இவன் கண் விழித்துப் பார்ப்பானா? சுபாவமான குறும்பும் சிரிப்பும் திரும்புமா? அவள் சற்று நேரம் ஓசைப் படுத்தாமல் கண்ணீர் விட்டாள், பல வித ட்யூப்களின் பிணைப்பில் அமானுஷ்யமாகத் தோன்றிய அந்த உடம்பைத் தொடக் கூட பயந்து. இரண்டு கட்டில் தள்ளி அமர்ந்திருந்த ஒரு பெண் அவளை அனுதாபத்துடன் பார்த்து, 'ஆப்கா ஹஸ்பெண்டு ஹை க்யா?' என்றாள். அவள் 'ஆமாம் என்று தலையாட்டிவிட்டு கண்ணை அழுத்தித் துடைத்துக் கொண்டு வெளியே வந்தாள். அவள் முகத்தைக் கண்டு திகைத்தவர்கள் போல விவேக்கும் கதிரும் தங்கள் பேச்சை நிறுத்திக் கொண்டார்கள்.

"சகுந்தலா!"

விவேக் ஏதோ சொல்ல விரும்புகிறான் என்று உணர்ந்து அவள் அவனைப் பார்த்தாள்.

"ராஜமோஹனுடைய அப்பா அம்மாவுக்குத் தெரிவிக்கணும்னு நானும் கதிரும் நினைக்கிறோம்."

அவள் சற்று நேரம் மௌனத்துடன் எதிரே தெரிந்த புல்வெளியைப் பார்த்தாள். ஒரு வயதான பெண் இரண்டு சிறுவர்களுடன் அமர்ந்திருந்தாள். ஐ.ஸி.யுவில் இருக்கும் ஒரு பேஷன்டின் அம்மாவாக இருக்கலாம்.

"யார் தெரிவிக்கிறது?"

"நீதான் தெரிவிக்கணும்" என்றான் விவேக்.

சகுந்தலா மறுபடி அந்தப் பெண்ணின் பக்கம் பார்வையைத் திருப்பினாள்.

"நா யாருன்னு அவங்களுக்குச் சொல்லட்டும்?"

புல்வெளியில் அமர்ந்திருந்த பெண் எழுந்து விளையாடச் சென்ற சிறுவர்களை அழைத்தாள்.

"சோட்டு, பீட்டு! ஆனா!"

(தொடரும்)

# தெரிஞ்சுக்குங்க...

● வளைகுடா நாடுகளுள் ஒன்று பக்ரைன். இந்த நாட்டின் மொத்த ஜனத்தொகை 6,20,378தான்.

இதில் 2,40,396 பேர் வெளிநாட்டினர். இவர்களில் இந்தியர்கள் மிக அதிக பட்சமாய் 1,40,000 பேர் இருக்கின்றனர்!

● 'கறுப்புத் தங்க உலகம்' என அழைக்கப்படும் நாடு சவுதி அரேபியா. இங்கு 263 பில்லியன் பேரல் எண்ணெயிருப்பு உள்ளதாகக் கணக்கிட்டுள்ளனர். இது உலகின் மொத்த எண்ணெயிருப்பில் 26 சதவிகிதம் ஆகும்! இந்த நாட்டின் ஜனத்தொகை சுமார் 2 கோடியே 14 லட்சம்! இங்குள்ள எண்ணெய் சார்ந்த தொழிலகங்கள் 3418.

- இரா. திலீப்

# நெகிழ்ந்து போனேன்!

● ''நான் என் கணவரை முதலில் சந்தித்தது 1962ல். எங்களிடையே காதல் அரும்பியது. அவர் தன் விருப்பத்தைத் தன் தாயிடம் கூறி எங்களைச் சந்திக்க வைத்தார். என்னைப் பார்த்ததும் முதலில் அவர் தாய் கூறியது என்ன தெரியுமா? ''நான் ஒரு தாய். என்னைப் பார்த்து நீ பயப்படத் தேவையில்லை'' என்பதுதான். அவரிடம் சிறிது நேரம் பேசிக்கொண்டிருந்துவிட்டு கிளம்பினேன். 'கொஞ்சம் இரு' என்றவர், ஒரு ஊசியையும் நூலையும் எடுத்து வந்தார். ஒன்றும் புரியாமல் நின்று கொண்டிருந்த என்னைச் சற்றுத் திரும்புமாறு கூறியவர், என் கவுனின் முதுகுப் பக்கத்தில் சற்றே தையல் பிரிந்திருப்பதைச் சரி செய்துவிட்டார். நான் மிகவும் நெகிழ்ந்து போனேன்.''

- இப்படிச் சொல்லியிருப்பவர்: சோனியா காந்தி!

அரிச்சந்திரன்

# இரண்டையுமே!

கி.வா.ஜ, ஒருமுறை நண்பர் ஒருவரின் வீட்டில் தங்கியிருந்தபோது அவர், கி.வா.ஜ.விடம், ''இன்று பலகாரமா, சாப்பாடா?'' என்றார்.

''ஏன் கேட்கிறீர்கள்? என்ன விஷயம்?'' என்றார் கி.வா.ஜ.

''இல்லை. இன்று திருக்கணித பஞ்சாங்கப்படி ஏகாதசி. வாக்கிய பஞ்சாங்கப்படி துவாதசி. நீங்கள் எந்தப் பஞ்சாங்கத்தின்படி விரதம் இருப்பீர்களோ எனக்குத் தெரியாது. அதனால்தான் கேட்டேன்!'' என்றார் அவர்.

''நான் யாரையுமே விரோதித்துக் கொள்வதில்லை. ஆகவே இரண்டையுமே போடுங்கள்!'' என்றார் கி.வா.ஜ. சிரித்தபடி!

- ஏ.கே. நாசர்

# கல்யாண ராகங்கள்!

திருமணச் சடங்குகளின்போது ஒலிக்க வேண்டிய ராகங்கள்:

● மாப்பிள்ளை அழைப்பு: கல்யாணி, சங்கராபரணம்.

● மாப்பிள்ளை அழைத்து வரும்போது: கரகரப்ரியா, தோடி, காம்போதி.

● நிச்சயதார்த்தம்: கானடா, அடாணா, பேகடா.

● திருமணத்தன்று காலை: கேதாரம், பூபாளம், பிலஹரி.

● முகூர்த்தத்துக்கு முன்பு: தன்யாசி, நாராயணி

● முகூர்த்த வேளையின்போது:

நாட்டைக்குறிஞ்சி.

● தாலி கட்டும்போது: ஆனந்தபைரவி.

- ஆர்.ஆர். பூபதி.

பெண்களுக்காகத் தொடங்கப்பட்ட முதல் தமிழ் பத்திரிகை 'அமிர்த வசனி.' இது 1880ஆம் ஆண்டில் வெளிவந்தது.











## தேன் கூடு

● க்யூவில் நிற்கும் பழக்கம் இங்கிலாந்தில்தான் முதன்முதலாக நடைமுறைக்குக் கொண்டு வரப்பட்டது.

● அச்சுத்தட்டில் கதையைப் படைத்த முதல் எழுத்தாளர் மார்க்ட்வெயின்.

● வெளிநாட்டுப் படங்களுக்கு இசை அமைத்த முதல் இந்தியக் கலைஞர் பண்டிட் ரவிசங்கர்.

● கிளி சோதிடம் முதன்முதலில் பர்மாவில் தோன்றியது.

● முதன்முதலாக கே. பாலசந்தர் நடத்திய நாடகத்தின் பெயர் 'சினிமா விசிறி'!

- சின்னை எஸ். ராஜமழை.

## நம்பினால் நம்புங்கள்...

அமெரிக்காவில் உள்ள மேற்கு கடற்கரை நகரமான சியாட்டில் (Seattle) நகரத்தில் மூக்கு முட்டக் குடித்திருந்த மனிதன் கைது செய்யப்பட்டான். அவன் பெயர் அல்கோஹால்! (Alcohol)

- கிருஷ்ணவேணி ரங்கநாதன்

## கள்!

''கள்ளைக் குடித்தால்தான் போதை என்பதில்லை. 'கள்' என்று சொன்னாலே பலர் மயங்கி விடுகிறார்களே! 'நீ' என்று சொல்வதற்குப் பதில் 'நீங்கள்' என்று சொல்லிப் பாருங்கள். அந்த 'கள்' என்ன வேலை செய்கிறது என்பது தெரிந்து விடும்.''

(வாரியார் உரையிலிருந்து)

- பா.குணா

# கொள்ளு என்றால்...!

**(பிற பத்திரிகைகளில் வெளியான சில கடிதங்கள், சற்றே சுருக்கமாக)**

"இந்திய ஜீவனாம்ச சட்டப்படி ஷாபானு வழக்கில் வழங்கப்பட்ட தீர்ப்பு, முஸ்லீம்களின் ஷரியத் சட்டத்திற்கு முரண்படுவதால் அதை ஏற்றுக் கொள்ளவில்லை" என்றும் அதே சமயம் "கிரிமினல் குற்றங்களில் ஈடுபடும் முஸ்லீம்களுக்கு இந்திய தண்டனை சட்டத்தின்படி தீர்ப்பை மதிக்கிறோம்" எனவும் இப்பகுதிக்கு வரும் கடிதங்களில் தெரிவிக்கப்பட்டுள்ளது.

இந்திய ஜீவனாம்ச சட்டத்தைப் போலவே, இந்திய தண்டனை சட்டமும் ஷரியத் சட்டத்திற்கு முரண்பாடானது தான். கிரிமினல் குற்றங்களுக்குக் கடுமையான சிறைவாசமும், அதிகபட்சத் தண்டனையாகத் தூக்கிலிடுவதும் இந்திய தண்டனை சட்டத்தில் கூறப்பட்டுள்ளது. ஆனால், கிரிமினல் குற்றங்களுக்குக் கைகால் வெட்டுதல், கல்லால் அடித்துக் கொல்லுதல் முதலிய தண்டனைகள் ஷரியத் சட்டத்தில் கூறப் பட்டுள்ளன.

அரபு நாடுகளில் உள்ள முஸ்லீம்கள் ஷரியத் சட்டத்தை மட்டும் பின்பற்றுவதைப் போலவே, இந்திய முஸ்லீம்கள் இந்திய சட்டதிட்டங்களையோ அல்லது ஷரியத் சட்ட திட்டங்களையோ – ஏதாவது ஒன்றைமட்டும் ஏற்றுக் கொள்ள வேண்டும்.



• சச்சின்

தங்களுக்குச் சாதகமான ஜீவனாம்ச வழக்குகளில் ஷரியத் சட்டத்தை ஏற்றுக் கொள்வதாகவும், பாதகமான கிரிமினல் வழக்குகளில் இந்திய தண்டனை சட்டத்தை ஏற்றுக் கொள்வதாகவும் கூறுவது, "கொள்ளு என்றால் வாயைத் திறப்பேன், கடிவாளம் என்றால் வாயை மூடிக் கொள்வேன்" என்ற கதையாக உள்ளது."

**(தினமலர் – கே.கே.வேதபுரி, நெற்குன்றம்)**

"ஜெயேந்திர சரஸ்வதி சுவாமிகள் கோடிக்கணக்கான இந்துக்களின் உணர்வுகளைச் சரியாகவே வெளிப்படுத்தியிருக்கிறார். நேர்மைக்கும் தியாகத்துக்கும் எடுத்துக்காட்டான ராமபிரான் வன்முறை மற்றும் ரத்த ஆற்றினால் உருவாகும் ஒரு கோவிலில் உறைவாரா? மாறாக சர்ச்சைக்குரிய இடத்தில் நாட்டுக்காக உயிரைவிட்ட ராணுவ வீரர்களுக்கு ஒரு நினைவுச் சின்னம் எழுப்பலாமே."

**(தி வீக் – ஸ்காரியா கன்னீமுத்து, பெங்களூர்)**



• ராபின்

"உலகின் குறிப்பிடத்தக்க ஒரு நிலப்பிரிவைத்தான் கண்டம் என்று அழைப்பது வழக்கம். தென் அமெரிக்கா மற்றும் வட அமெரிக்காவுக்கிடையே இந்தப் பூகோளப் பிரிவு பளிச்சென்று தெரியும். அதுபோலதான் ஆப்பிரிக்கா – ஆசியா, ஆஸ்திரேலியா – அண்டார்டிகா ஆகியவற்றுக்கிடையே உள்ள பிரிவுகளும்.

ஆனால் ஆசியாவிலிருந்து ஐரோப்பாவை வேறுபடுத்தும் அளவுக்கு நிலப்பகுதியின் எந்தப் பிரிவினையும் இல்லை. இரண்டையும் யூரல் மலைத்தொடர் பிரிக்கிறது. அவ்வளவே. இதை ஒரு அளவுகோலாக எடுத்துக் கொண்டால் பிறநாடுகளிலிருந்து இந்தி



யாவை இமயமலைகூடத்தான் பிரிக்கிறது. அப்படியானால் இந்தியாவும் ஒரு கண்டம் தானே!

பல நூற்றாண்டுகளாகவே ஆசிய கண்டத்தின் மேற்கு பகுதியில் உள்ளவர்கள் தங்களை உயர்வானவர்களாகக் கருதினர். அதனால்தான் இப்படித் தங்களை ஒரு தனி கண்டத்தைச் சேர்ந்தவர்களாக உருவாக்கிக் கொண்டார்கள்.

பூகோள நியதிப்படி ஐரோப்பா ஒரு தனி கண்டமல்ல. அதை மேற்காசியா என்று வேண்டுமானால் குறிப்பிடலாம். இப்போது மேற்காசியா என்று அழைக்கும் பகுதியை "தென்மேற்கு ஆசியா" என்று குறிப்பிடலாமே."

**(அலைவ் – கே.பி.ராஜன், மும்பை)**

"விவசாயிகளுக்கான மின்கட்டணத்தையும், கூட்டுறவு வங்கிகளிடமிருந்து அவர்கள் பெறும் வட்டி மற்றும் அசலையும் அரசு ரத்து செய்வதுபோல, 2002 - 2003 ஆண்டுக்கான சாலை வரியை அரசு ரத்து செய்யவேண்டும். ஏனென்றால் 2001 – 2002ஆம் ஆண்டில் அரசு சாலைகளைச் சரியாகப் பராமரிக்கவில்லை.

வண்டியோட்டிகள் மோசமான சாலைகளினால் தங்கள் வண்டிகளை ரிப்பேர் செய்ய நிறைய தொகை அழவேண்டியிருக்கிறது. இதற்கு அரசுதான் பொறுப்பு. நம்மில் சிலர் முதுகு வலி மற்றும் பிற உடல் உபாதைகளுக்குச் சிகிச்சை எடுத்துக் கொள்வதற்குக் காரணமாகவும் மோசமான சாலைகள் அமைகின்றன."

**(தி ஹிண்டு – வி. சங்கர், ராஜா அண்ணாமலைபுரம்)**

"ஷேவாக் நல்ல ஃபார்முக்கு வந்து கொண்டிருப்பதால் சச்சின் துவக்க ஆட்டக்காரராக இருப்பதைவிட நடுவரிசைக்குச் செல்ல வேண்டும். பதானி, யுவராஜ், கனிட்கர், சோதி, மார்ட்டின், கைஃப் என்று பல வீரர்களைக் கொண்டு தேர்வாளர்கள் சோதனை செய்து பார்த்து விட்டார்கள். ஆனால் வயதைக் காரணம் காட்டி அணியிலிருந்து விலக்கப்பட்ட ராபின் சிங்கின் இடத்தை இவர்களால் நிரப்ப முடியவில்லை. சீரான பேட்ஸ்மேனாக மட்டுமில்லாமல் சிறந்த பீல்டராகவும் இருந்தவர் ராபின். அணித் தலைவரும் தேர்வாளர்களும் இவரை ஈடு செய்யும் அளவுக்கு ஒருவர் வந்து சேர்ந்த பிறகே நீக்கியிருக்க வேண்டும்.

**(ஸ்போர்ட்ஸ் ஸ்டார் – சி.ஆர். பால்ராஜ், மாவேலிக்காரா, கேரளா)**



"என்னோட பாஸ், முதலாளி மாதிரியே நடந்துக்கறதில்லே, ரொம்ப சகஜமா பழகறார்னு சந்தோஷப்பட்டது தப்பாப் போச்சு..."

"ஏன் என்ன ஆச்சு?"

"இன்னிக்கி என்கிட்ட ஆயிரம் ரூபாய் கடன் கேட்டுட்டு, நைச்சியமா பேசி வாங்கிட்டார்!"

– சாயம் வெ. ராஜாராமன்



• விஷுவல்தாசன்

ஸ்டூடியோவுக்குள் முக்காடிட்டுக் கிடந்த தமிழ் சினிமாவை மண் வாசனைக்கு அறிமுகப்படுத்தியவர் ஜீன்ஸுக்குள் சிறைபட்டுக் கிடக்கும் பாரதிராஜா! சமீபத்திய அவரது படங்கள் தோல்வியடைந்திருக்கின்றன ... ஏன்? மண்வாசனை மக்கிப் போச்சா? சில நேரங்களில் கொதித்தும், சிரித்தும் உருகியும் அவரளித்தப் பேட்டி...





*இன்றைய தேதிக்கு ரவுடியிசக் கதைகளின் மீது தமிழ் சினிமா சவாரி செய்து கொண்டிருக்கிறது. அதைவிட்டால் காதல்... காதல்... என்கிற புலம்பல்கள்... இவற்றுக்கிடையில் மண்வாசனை படங்கள் இத்தனை அரிதாகிப் போனது ஏன்?*

பாரதிராஜா: அடிப்படையான காரணம் என்றால் நாம் சொந்த மண்ணை விட்டு,

# அன்னைக்கும் மண்ணுக்கும் அழிமை!



புலம் பெயர்ந்து போய், இன்னொரு மண்ணில், இன்னொரு கலாசாரத்தில் காலடி வைத்தோம். அந்த நாகரிகம் இங்கே இறக்குமதியானது. இப்படி நாகரிகத்தை நாம் இறக்குமதி செய்த காலம் போய் அன்னிய நாட்டவனே நாகரிகத்தைக் கொண்டு வந்து இறக்கிவிட்டு விட்டுப் போனான். நாவல்களை வைத்து தமிழ்நாட்டு நடுத்தர வாழ்க்கையை நாம் படமாக எடுத்துக் கொண்டிருந்த பீம்சிங் காலகட்டத்தில்கூட, இந்தக் கவர்ச்சி நடனம், ரத்தக் களரி போன்ற வெஸ்டர்ன் பொல்யூஷன் எதுவும் கிடையாது. நடையும் உடையும் மாறியிருந்தன. மற்றபடி தமிழக வாழ்க்கை அப்படியேதான் இருந்தது. எம்.டீ.வி, வீ.டீவி போன்ற சானல்கள் வந்து புகுந்த கடந்த பத்தாண்டுகளில்தான் அடிப்படையை உலுக்குகிற மாதிரியான விபரீதம் நிகழ்ந்தது. இந்தத் தொலைக்காட்சிகளில் காட்டப்படும் பாப், வீடியோ ஆல்பங்கள் பிரமிப்பை ஏற்படுத்தின. அந்த பிரமிப்பும் ஃபாண்டசியும் தமிழ் சினிமாவையும் விட்டு வைக்கவில்லை. ஒரேமாதிரியான பாடல்கள், இலக்கணத்திற்கு உட்படாத நடனம் என்றெல்லாம் மாறி, கதை உப்புக்குச் சப்பாணியாக மாறிவிட்டது. வீட்டிற்குள்ளேயே வந்து உட்கார்ந்து கொண்டு விட்ட தொலைக்காட்சியோடு எப்படிப் போட்டி போடுவது என்று சிந்தித்தபோது, இதைப் போலவே திரையிலும் பிரம்மாண்டம் காட்ட முடிவு செய்தான். இப்படித்தான் நமது கலாசாரத்தைக் கதையை, மண்வாசனையை மெல்ல மெல்ல இழந்துகொண்டே வந்திருக்கிறோம்.

***தொலைக்காட்சி மட்டும்தான் முதன்மை காரணம் என்பதுபோல் இருக்கிறது உங்கள் வாதம்?***

மண்வாசனை, பார்த்த வாழ்க்கைதானே என்று நினைக்கிறான். தொலைக்காட்சியில், இவன் பார்க்காத ஒரு கனவைச் சொல்லும்போது அதைப் பிடித்துக்கொண்டு தொங்குகிறான். பிரிட்னி பியர்ஸையும், ஃபேஷன்ஷோக்களில் கேட்வாக் செய்யும் ஐரோப்பிய அழகிகளையும் பார்த்து வாய்

பிளக்கிறான். இதன் தொடர்ச்சியாக எப்போது மொழி தெரியாத வடக்கத்திய கோதுமை அழகிகளைத் தமிழன் இறக்குமதி செய்ய ஆரம்பித்தானோ, அந்த ஃபாண்டஸியிலிருந்து இன்னும் வெளியே வரவில்லை. இதனால் பாலிவுட் மாதிரி எடுக்க வேண்டும் என்ற எண்ணம் வந்துவிட்டது. தமிழ் சினிமாவின் கதையும், கதைக் களமும் விரிவடைவது போய் வியாபார எல்லை விரிவடைந்துவிட்டது. இதனால் தமிழ், தெலுங்கு, ஹிந்தி என எல்லோருக்குமான ஃபாஸ்ட்புட் வகையறாக்களைத் தயாரிக்க வேண்டிய நிலையில், தலையைச் சொறிந்துகொண்டிருக்கிறான் தமிழ் சினிமாக்காரன். ஆக தமிழ் சினிமா தனது தனித்தன்மையை நிறையவே இழந்திருப்பது உண்மை.

**'கருத்தம்மா'வுக்குப் பிறகு சமூக அக்கறை கொண்ட படங்களில் கவனம் செலுத்தாததுதான் உங்களின் சமீபத்திய படங்களின் தோல்விக்குக் காரணம் என்று சொல்லலாம் இல்லையா?**

கருத்தம்மாவுக்குப் பிறகு கடந்த இரண்டரை வருடங்களில் நான் இயக்கியது 'தாஜ்மஹால்', 'கடல்பூக்கள்' ஆகிய இரண்டே படங்கள்தான். இடைவெளி அதிகமான காரணத்தினால், நான் ஏதோ நிறைய படங்கள் இயக்கி, எல்லாம் தோல்வியைத் தழுவிய மாதிரியும், ஏதோ நான் மண்வாசனையைச் சொல்லாதது மாதிரியும் தோன்றுகிறது. 'தாஜ்மஹாலி'ன் தோல்விக்குக் காரணம், முன்பு சொன்னதுபோல, நானும் அதே தவறைத்தான் செய்தேன். மக்கள் மத்தியில் ஃபாண்டசிக்கு ஆதரவு இருக்கிறது என்று கருதினேன். ஆனால் என்னிடமிருந்து அதை அவர்கள் எதிர்பார்க்கவில்லை என்றார்கள். பாரதிராஜாவின் கிராமம் ஜீன்ஸ் கிராமமாக மாறிவிட்டது என்று விமர்சித்தார்கள். யதார்த்தத்தை விட்டுவிட்டுப் போய்விட்டார் என்று அந்தப்படத்தை ஏற்றுக் கொள்ள மறுத்து விட்டார்கள்.

***ஆனால் 'கடல்பூக்களி'ல், கடல்வாழ் மனிதர்களின் வாழ்க்கைப் பின்னணியில், ஒரு நல்ல நட்பை மண்வாசனையோடு தானே தந்தீர்கள்... அதையும் ரசிகர்கள் கைவிட்டார்களே... இதிலிருந்தே, நீங்கள் குறிப்பிடும் கடந்த பத்தாண்டு காலத்தில் தமிழ் ரசனை தீவிரமாக மழுங்கிப் போய் இருக்கிறது என்றுதானே அர்த்தம்?***

நான் அப்படி நினைக்கவில்லை. ஆங்காங்கே மிகைப்படுத்தல்கள் இருந்தாலும் 'அழகி' மிக யதார்த்தமாக எடுக்கப்பட்டு இருக்கிறது. 'ஆனந்தம்' மிடில்கிளாஸ் வாழ்க்கையைக் கொஞ்சம் யதார்த்தமாகக் காட்டியது. 'காசி'யில் கதை இருந்தது. பெரிய பெரிய யானைகளுக்கு மத்தியில் இந்த மூன்று முயல் குட்டிகளும் ஓடியதற்குக் காரணம் தரம். தரம் இருந்தால் தமிழ் ரசிகன் ரசிப்பான். அதே நேரம் அது எத்தனை தரமென்றாலும் அது கடகட இருந்தால்தான் அவனுக்குப் பிடிக்கிறது. 'கடல்பூக்கள்' பேசப்பட்டுப் பேசப்பட்டு ஒன்றரை ஆண்டுகாலம் பெட்டியில் தூங்கியது. அதன்பிறகு வெளிவந்தபோது ரசிகனுக்கு அது ஆறிப்போன படமாகிவிட்டது. நல்ல பசியிலும் ஆறிப் போனதென்றால் தோசையைக்கூட தூரமாய்த் தூக்கி வைப்பதுதானே நமது இயல்பு. இப்படித்தான் 'கடல்பூக்கள்' கருகிப் போனது... ஆனால் நல்ல படமென்று பத்திரிகைகள் பாராட்டின. திரைக்கதைக்குத் தேசிய விருது கிடைத்தது.

***'கடல் பூக்களு'க்கு நேர்ந்த விபத்து ஒரு பக்கம் இருக்கட்டும். ரசனை மழுங்கிக் கிடக்கிறது என்று சொன்னதன் பின்னணியில் தாதா சாயம் பூசிக் கொள்ளும்***

**"வாழ்க்கை பூரா கஷ்டப்பட்ட நம்ம முனுசாமிக்கு விருது கிடைச்சிருக்காமே! என்ன விருது?"**

**"'வாழ்நாள் சோதனையாளர்!"'**

**- உ. ராஜாஜி**

***ஹீரோக்கள் ஒளிந்துகொண்டு இருக்கிறார்கள் என்ற பதிலை உங்களிடமிருந்து எதிர்பார்த்தோம்...***

வீடுகளில் உட்கார்ந்துகொண்டு, வி.சி.டி.யில் படம் பார்க்கும் பழக்கம் அதிகமாகி விட்டதும், ஹாலிவுட்டிலிருந்து வரும் அதிரடி ஆக்ஷன் படக் குப்பைகள் உடனுக்குடன் இறக்குமதியாவதும், குரூரமான ரத்தக்களரி காட்சிகள் தமிழ் சினிமாவில் இடம் பெறுவதைச் சகஜமாக்கிவிட்டது. இப்போதெல்லாம் ஹீரோ குத்தினால் அடி வாங்குபவன் வாயிலிருந்து அரை லிட்டர் இரத்தம் கொட்ட வேண்டும். தலை தனியே, கால் தனியே வெட்டப்பட்டு விழுவதைக் காட்ட வேண்டும். புதிதாக ஒரு ஹீரோ அறிமுகமாகிறான் என்றால், அவன் கையில் சைக்கிள் செயினைக் கொடுக்க வேண்டும். ஏற்கெனவே பிரபலமான ஹீரோ என்றால் கத்தி மேலோ, அல்லது பிஸ்டல் மேலோ ஒரு

ரோஜாப் பூவைக் குத்தி வைக்க வேண்டும் என்றாகிவிட்டது. வீட்டில் உள்ள சின்னப் பசங்களுக்கு அடிதடி என்பது திரில்லான விஷயம் என்று இதுபோன்ற சினிமாக்கள் விரைவாக போதையேற்றுகின்றன. நெகட்டிவான விஷயங்களும், வயலென்சும் இனிக்க ஆரம்பித்திருக்கிறது. கதாநாயகன் நான்கு பேட்டைகளுக்குத் தலைவர் என்றால், அது நல்ல கலாசாரம் என்பது போல காட்டி வருவது கொடுமையான விஷயம்.

காதலுக்கு யாராவது முட்டுக்கட்டை போடுகிறார்களா...? ஹீரோ உடனே அங்கே போகிறான். அங்கேயிருக்கும், தொலைக் காட்சிப் பெட்டி, டைனிங் டேபிள், ஜன்னல் கண்ணாடி இப்படி கண்ணில் படுவதையெல்லாம் போட்டு உடைக்கிறான். அப்புறம் சம்பந்தப்பட்டவனைப் பார்த்து... இப்போ உனக்குக் காதல் புடிக்கணும், புடிக்கும் என்று அவன் கழுத்திலே கை வைக்கிறான். எந்தக் கால கட்டத்தில் இப்படியெல்லாம் நடக்கும் என்று எனக்குத் தெரியவில்லை.



***'தாஜ்மஹால்' படத்தில் கொஞ்சம் மணிரத்னம் தனம் இருந்தது என்ற விமர்சனத்தை ஏற்றுக் கொள்கிறீர்களா?***

இதை நான் ஏற்றுக் கொள்ள மாட்டேன். ஒரு மனிதனுடைய பாதிப்பு இருப்பதைத் தப்பென்று சொல்லமாட்டேன். என்னுடைய பாதிப்பு எத்தனையோ பேருக்கு இருந்திருக்கலாம். இலக்கியமென்றாலும், இசையென்றாலும் பாதிப்பு இல்லாமல் எந்தப் படைப்பும் இல்லை. கால மாற்றங்கள் வரும்போது பாதிப்புகள் வெவ்வேறு பரிமாணங்களை எட்டுகின்றன. புதுப் புதுப் படங்கள் என்னைப் பாதிக்கும்போது நான் கொஞ்சம் மாறுதலுக்கு முயற்சிக்கிறேன். இப்படி மணிரத்னம்கூட எங்கேயாவது என்னைப் பாதித்திருக்கலாம்.... காரணம் மணிரத்னத்தை நான் ரசித்திருக்கிறேன். ஒரு மெகபூப்கான், சாந்தாராம், சத்தியஜித்ரே, குருதத், பக்கத்திலிருக்கிற அடூர்கோபாலகிருஷ்ணன், இங்கேயிருக்கிற ஸ்ரீதர் போன்ற கலைஞர்கள் என்னைப் பாதித்தார்கள். எனது முதல் படமே அன்றைய மலையாளத்திற்கு இணையாக யதார்த்தமாக எடுத்தேன். அப்போது எனக்குப் பாதிப்பே இல்லையென்று சொல்ல முடியுமா?

***அப்படியானால் பாரதிராஜாவுக்கு மண் வாசனையின் மீது பிடிப்பு குறைந்து விட்டதா?***

மண்ணுக்கும் அன்னைக்கும் இவன் அடிமை. ஆனால் மண் வாசனைக்கு நான் மட்டுமே சொந்தக்காரன் இல்லை. இந்த மண்வாசனைக்குள்ளே மட்டும் வாழ்ந்து எனது வாழ்க்கையை நான் முடித்துக் கொண்டால், மக்களுக்கு வேறு எதையுமே சொல்லாமல் போய் விட வேண்டும்? இதுவரை யதார்த்தமான கிராமத்தைச் சொன்னேனே தவிர கிராமத்து வாழ்க்கையை ஊடோடிச் சொல்லவில்லை. அந்த வாழ்க்கையை 'கருத்தம்மா'வில் மெல்லத் தொட்டுப் பார்த்தேன். இதற்கு மேல் மீண்டும் ஆழமாகச் சொன்னால் இதுக்குத்தான் இவர் வந்திருக்கிறார் என்பான். கள்ளிக்காட்டு இதிகாசத்தைப் படம் பண்ண ஆசைதான். ஆனால் அது படமாக வரும்போது, பணம் கொடுத்து சினிமா என்கிற மாயையைப் பார்க்க எதையோ எதிர்பார்த்து உட்காருகிறவனிடம், கலாசார வாழ்க்கையைச் சொன்னால் புளித்துப் போய எழுந்து வந்துவிடுவான். எனவே இனிப்பைக் கலந்து கொடுக்க வேண்டியிருக்கிறது.

***தமிழ் மண்ணின் அடையாளமற்ற நடிகர்கள், நடிகைகளைக் கொண்டு தமிழ் மண்ணின் அடையாளமற்ற கதைகளைப் படமாக்கி, அதைத் தமிழ் சினிமா என்று சொல்வதும், தமிழ் பேசினால் மட்டும் போதும் அது தமிழ் சினிமாதான் என்றாகிவிட்டதும் உங்களுக்கு அபத்தமாகப் படவில்லையா?***

எனக்குப் பட்டு என்ன செய்ய...? ஆனால் ஒரு முயற்சி மேற்கொள்ள உத்தேசித்திருக்கிறோம். இயக்குனர் சங்கத்தின் உதவியோடு, இயக்குனர்களுக்கெல்லாம் பயிற்சி வகுப்பு ஏற்பாடு செய்யலாம் என்பதுதான் அந்த முயற்சி. என்னதான் வியாபார ரீதியாக இருந்தாலும் சரி, நாம் நம்மை விட்டு எங்கோ போய்க் கொண்டிருக்கிறோம் என்பதை இதில் எடுத்துச் சொல்ல இருக்கிறோம். நம்மைப் பற்றி மற்றவர்கள் விமர்சனம் செய்யும்முன்பு, நம்மை நாமே மறுபரிசீலனை செய்து கொள்வது ஆரோக்கியமானது என்பதால் தமிழ்ப் புத்தாண்டிற்கு பிறகு இந்த முயற்சியை செயல்படுத்துவோம்.

***பாரதிராஜா, இளையராஜா, வைரமுத்து இந்த மூவர் கூட்டணியிலிருந்து மீண்டும்***

**படைப்புகளை எதிர்பார்க்கலாமா?**

இதற்கு உத்தரவாதம் தர இயலாது. காரணம் இந்த மூவரும் படைத்த படைப்புகள் வேறு. இந்தப் படைப்புகளைத் தாண்டி மூவரும் மனிதர்கள்தானே. மூவரின் கலவை, கலாசாரப் பின்னணியை ஜீவனோடு வெளிக் கொண்டு வந்தது. ஆனால் இந்த மூவரும் தியாகி இல்லையே! கோபம், வக்கிரம், காழ்ப்புணர்ச்சி எல்லாமே இருக்கும் தானே! நல்ல கலைஞன், நல்ல மனிதனாகவும் இருந்துவிட்டால் அபூர்வம் தான். ஆனால் என்ன செய்ய....? நாங்கள் நல்ல கலைஞர்கள் என்று சொல்கிறீர்கள்... நல்ல மனிதர்களா? என்று பிறர் சொன்னால் தானே தெரியும்! தூங்கிக் கொண்டிருக்கும் இந்த மனிதர்களை யாராவது உசுப்பி விட்டால் மீண்டும் இணைந்து பணியாற்ற வாய்ப்புக் கிடைக்கலாம்.



**மண்வாசனையை நேசிக்கிற பாரதிராஜா மேற்கத்திய வாசனையோடு ஜீன்ஸ் டீசர்ட் அணிவதன் ரகசியம் என்ன?**

கலைஞனுக்குக் கொஞ்சம் 'முறுக்கு'த் தேவைப்படுகிறது. கலைஞன் தன்னை ஜீவித்துக் கொள்வதற்காக இளமையைக் காப்பாற்றிக் கொள்ள வேண்டியது அவசியம். ஊரிலிருந்து வரும்போது என்னிடம் எத்தனைத் துடிப்பும் வேகமும் இருந்ததோ அதைக் கடைசிவரை காப்பாற்றிக் கொள்ள வேண்டும் என்பது என் விருப்பம். எண்பது வயதிலும் இருபது வயது இளமை முறுக்கோடு வாழ்ந்து சாக ஆசைப்படுகிறேன். அதற்கொரு வழி இறுக்கமாக ஜீன்ஸ் அணிவது. ஜீன்ஸ் அணிந்தால் உற்சாகம் பீறிடும். வேஷ்டி அணிந்தால் உடல் தளரும். உடல் தளர்ந்தால் உள்ளம் தளரும். இது மனோதத்துவ இயல்பு!

அட்டை, வண்ணப்படங்கள்: யோகா

# கல்கி - VBC Jewellery

இணைந்து வழங்கும்

## புன்னகைப் போட்டி - 6 முடிவு

சர்வதேச விண்வெளி நிலையத்தில் ஆராய்ச்சி செய்துவரும் ஜப்பானிய விஞ்ஞானிகள், தங்கள் நாட்டின் கலாசாரத்தைப் போற்றும் விதமாக, பாரம்பரிய தேநீர் தயாரிக்கிறார்களாம். இதுவே, நம்ம ஊர்க்காரங்க, ஸ்பேஸ் ஸ்டேஷன் போனால், பாரம்பரியத்தைப் போற்றும் விதமாக என்ன செய்வார்கள்? என்று கேட்டிருந்தோம். வந்து குவிந்திருந்த வாசக கற்பனைகளில் தலா நான்கு கிராம் தங்கம் பெறும் இரண்டு கமெண்ட்டுகள்:

'சர்வதேச விண்வெளி நிலைய ஜோதிகா ரசிகர் மன்றம்' போர்டு வெச்சு மற்ற நாட்டு விஞ்ஞானிகளுக்கு இலவசமாக நோட்டுப் புத்தகம் வழங்குவார்கள்.

வே. செந்தில்குமார்,
கோரணம்பட்டி போஸ்ட்,
கொங்கணாபுரம் (வழி) எடப்பாடி,
சேலம் மாவட்டம், 637 102

'விண்வெளிக்கு ஜிந்தாபாத்!' - என வீறுகொண்ட கோஷத்துடன் 'சர்வதேச முன்னேற்றக் கழகம்' என கட்சி ஆரம்பிப்பதுதான்!

ஜி.ஜி. சரவணன்,
52, மேலவீதி,
திரு இந்தளூர்,
மயிலாடுதுறை டவுன், 609 001



# ஸ்ரீ மஹா ப்ரத்யங்கிரா தேவி, ஸ்ரீ நீலசரஸ்வதி தேவி, ஸ்ரீ விரஜா கால பைரவர் தேவஸ்தானம்

அபராஜிதபுரி,
சோழங்கநல்லூர்,
சென்னை - 600 119,
போன்: 4501404

## ஸ்ரீ மஹா வாராஹி கும்பாபிஷேகம்

**நாள்: 4.5.2002 சனிக்கிழமை காலை 7.00 - 10.30 வரை**

அன்புடையீர்,

ஸ்ரீ மஹா ப்ரத்யங்கிரா தேவியின் வாம சக்தியாக, தெற்கு திசையில் இருந்து வடக்கு திசை நோக்கி அமர்ந்த கோலத்தில் ஸ்ரீ மஹா வாராஹி என்றும், தண்டினி என்றும், சதாசிவத்தின் சைதன்ய சக்தி என்றும் மூன்று சக்திகளில் கிரியா சக்தி என்றும், மந்திர, யந்திர, தந்திர வித்தைகளின் தலைவி என்றும், ஸ்ரீலலிதையின் சேனைத் தலைவியாகவும், மாந்திரீக தோஷங்களின் நிவாரணத்துக்குரிய ஸ்ரீ உன்மத்த பைரவரின் தர்மபத்தினியாகவும் அதர்மவாதிகளை தண்டிப்பவளாகவும், பண்டாசுரன், தாருகாசுரன், கம்பாசூரன் ஆகிய அசுரர்களை அழிக்க ஸ்ரீ லலிதையின் சக்தியாக விளங்கியவளும் இந்த பூமி (வாராஹம்)யில் நடக்கக்கூடிய கெட்டவைகளை தடுத்து நிறுத்தி பக்தர்களை அல்லும் பகலும், இமைப்பொழுதும் விலகாமல் காப்பாற்றி வாழ வைக்கக்கூடியவளும்தான் மஹாவாராஹி.

சுமார் 6 மாத காலத்திற்கு முன்னால், இத்திருக் கோவிலில் ஸ்ரீ வாராஹி அம்பாளை வடக்கு நோக்கி ப்ரதிஷ்டை செய்ய வேண்டும் என்று ஸ்ரீ ப்ரத்யங்கிரா ஸ்வாமிகளின் திருவாக்கிலே அருள்வாக்கு மலர்ந்தது. அம்பாளின் வாக்குப் பிரகாரம் 6¼ அடி உயரமுள்ள ஒரே கருங்கல்லில் நான்கு கைகளுடன், ஸ்ரீ மஹாவாராஹி 4.5.2002 சனிக்கிழமை காலை 7.00 மணி முதல் 10.30க்குள் ப்ராண ப்ரதிஷ்டையும் மஹா கும்பாபிஷேகமும், ஸ்ரீ சிருங்கேரி, ஸ்ரீ காஞ்சி மஹாஸ்வாமிகள் அனுக்ரஹத்துடன் ஆகம நியமனப்படியும், அதர்வண வேத முறைப்படியும் நிறைவேறவுள்ளது. ஆஸ்திக அன்பர்கள் இதனையே அழைப்பிதழாக ஏற்று இந்த மஹா வைபவத்தில் கலந்து கொண்டு நன்மைகள் பல பெற்று நீடூழி வாழ அழைக்கிறோம்.

இந்த புண்ய காரியத்திற்கு நன்கொடை தர விருப்பமுள்ளவர்கள் **'ஸ்ரீ ப்ரத்யங்கிரா ஆஸ்ரமம் டிரஸ்ட்'** என்ற பெயருக்கு டிராப்ட்/செக்குகள் அனுப்பி அம்பாளின் அனுக்ரஹம் பெறலாம்.

## ரிமோட்

சாதாரணமாய்ப் பல் வலியையே நம்மால் தாங்கிக் கொள்ள முடிவதில்லை. The only person who enjoys a toothache is a dentist என்பார்கள். அப்படியிருக்க வயிற்றின் இந்தப் பக்கத்திலே குத்தி, முதுகின் அந்தப் புறத்திலே கம்பி இழுப்பதை எப்படித்தான் பொறுத்துக் கொள்ள முடிகிறதோ அந்த மனிதரால்! பிறகு இடது விலாவில் குத்தி வலது விலாவில் இழுக்கப்படுகிறது கம்பி! சொட்டு ரத்தம் சிந்தவில்லை! இந்திய யோகா முறையைக் கற்று நரம்புகளைக் கட்டுப்படுத்தக் கற்றுக் கொண்டதாக இவர் சொல்கிறார்.

ரிப்லேயின் Believe it or Not என்ற அதிசயங்கள் ரொம்பக் காலத்துக்கு முன்பு புத்தகங்களில் சித்திரமாக வந்தன. பின்னர் திரையிலும் இடம் பெறத் தொடங்கியுள்ளன. தலைப்பே சொல்கிற மாதிரி நம்புகிற மாதிரி கொஞ்சம்; நம்ப முடியாதபடி நிறைய. ஆனால், மேஜிக் போல வெறும் கைப்பழக்கத்தினால் வரும் திறமைகளை நம்பவும் முடிகிறது. ரசிக்கவும் முடிகிறது. உதாரணமாக, ஆறு பில்லியர்ட்ஸ் பந்துகளை ஒன்றன் மீதொன்றாகச் செங்குத்தாய் அடுக்கி வைத்து, கீழ்ப் பந்தை மட்டும் தட்ட, மற்ற உந்து பந்துகள் சரிந்து விழாமல் அதே ஒழுங்குடன் நிற்கும்படி செய்து காட்டினார் ஒருவர். எந்த நிறப் பந்து எந்தப் பாக்கெட்டில் விழும் என்பதை முன்கூட்டியே அறிவித்து, ஒரே அடியில் அவை அப்படி விழும்படி செய்ததும் சாமர்த்தியம்தான். There are ten men in one man என்று சும்மாவா சொன்னார்கள்!

தற்செயலாகத் திருப்பிய ஒரு தமிழ் மெகா சீரியலில், தற்செயலாகப் பார்த்த ஒரு காட்சியில், தற்செயலாகக் கேட்ட

# பல் வலியைப் பொறுத்



ஓர் உரையாடல்:

'நான் சொன்னது எதையுமே நீ ஒழுங்கா செய்து முடிக்கலே!'

'என்னம்மா அப்படிச் சொல்லிட்டீங்க? ஏதாவது கோளாறு ஏற்பட்டுத் திட்டம் கெட்டுப் போறது.'

'என்னத்தைத் திட்டம் போட்டீங்க?'

'பாருங்க, அந்த முதியோர் இல்லத்துக்குப் போகிற சாப்பாட்டில் விஷம் கலந்து அனுப்பினேன். ஏதோ தவறு நேர்ந்து அது திரும்பி வந்திட்டுது.'

எப்படி! சமுதாயத்துக்குப் பயனுள்ள விஷயங்களை டீவி தருவதில்லை என்று இனிமேல் யாரேனும் சொல்ல முடியுமா? கொலை செய்ய _ அதுவும் முதியோர்களைக் கொலை செய்ய _ என்ன அருமையான யோசனைகள் சொல்லித் தருகிறார்கள்! God knows best what is good for us

என்றார் சாக்ரடீஸ். அடுத்தபடியாக, மெகா தொடர்க்காரர்களுக்கும் தெரியும்.

It is a riddle wrapped in a mystery inside an enigma என்று ஸ்டாலினின் ரஷ்யாவைப் பற்றி சர்ச்சில் ஒரு முறை சொன்னார். அது போன்ற மர்மம் குஷ்புவின் 'கோடீஸ்வரி'.

கோடீஸ்வரிகள் இருக்கட்டும், லட்சாதிபதிகளே எத்தனை பேர் உருவானார்களோ அதுவே தெரியவில்லை. ஆனால் உச்சக் குரலும் உயர்த்தித் தாழ்த்தும் கைவீச்சுமாகக் குஷ்பு பாட்டுக்குக் 'கோடீஸ்வரி'யை உற்சாகமாக நடத்திக் கொண்டு போகிறார். (இப்போதும் 'உங்களுக்கு அடுத்த கேள்வி'தான். 'ள்' வேலை நிறுத்தம்.)

பொற்கோவில் எந்த மதத்தைச் சேர்ந்தது, குருதேவ் என்று அழைக்கப்பட்ட கவிஞர் யார், ஈபில்



# துக் கொள்ள முடியுமா?

டவர் எந்த நாட்டில் இருக்கிறது என்பது போன்ற குழந்தைத் தனமான வினாக்களைக் கேட்டுச் சிரிப்பு வந்தாலும் ஒரு புதுமையை ஒப்புக் கொள்ள வேண்டும்.

டீ.வி. விளம்பரங்களில் வரும் வாக்கியம் அல்லது இசை, பாட்டு முதலியவற்றை ஒலிபரப்பி, இது எந்த விளம்பரம்? என்று கேட்கிறார். வேறு புதிர் நிகழ்ச்சிகளில் இதுபோல உண்டா என்று தெரியவில்லை. கல் ஒன்று, மாங்காய் இரண்டு.

எண்பதுக்கு மேற்பட்ட எபிஸோடுகள் ஆகியும், கௌதமி போன்ற திறமைசாலியான நடிகை தலைமைப் பாத்திரம் ஏற்றிருந்தும் 'இந்திரா' ஏன் வெற்றிகரமான தொடர் என்ற பெயரைப் பெறாமலே நழுவிக் கொண்டிருக்கிறது?

தப்பு செய்த கணவனை மன்னிக்கவே முடியாது என்று பிடிவாதமாக இருக்கும் மனைவி, அவள் மன்னிக்கும் வரை சாப்பிடப் போவதில்லை என்று உண்ணாவிரதம் இருக்கும் கணவன் – கதை என்னவோ அழுத்தமாகத்தான் இருக்கிறது. வசனமும் நயமானது; இயல்பானது. பின்ன என்ன?

கூர்ந்து கவனித்தால், மூவ்மென்ட்டுகள் கம்மி என்று தோன்றுகிறது. இரண்டிரண்டு பேர் எதிரெதிராக நின்று கொண்டு (அல்லது உட்கார்ந்து கொண்டு) பேசிக் கொண்டிருக்கிற காட்சிகள் அதிகமாக இருப்பதால் மேடை நாடகத்தின் வாசனை அடிக்கிறது.

காட்சிகளை வேறு விதமாக அமைத்தால் சரியாகுமா? என்று பார்க்கலாம். இன்னும் அவகாசம் இருக்கிறது. Your best can always be made better.

**வினோத்**



● சு. சமுத்திரம்

# சாமியாட்டத்தில் ஊழலாட்டம்!



நெல்லை மாவட்டத்தில் உள்ள எங்கள் ஊரான திப்பணம்பட்டி, விவகாரம் என்று வந்துவிட்டால் கிட்டத்தட்ட இந்தியா மாதிரிதான். இங்குள்ள தமிழ்த் தேசியர்களும், பிற மாநிலங்களில் உள்ள இவர்களைப் போன்றவர்களும், இந்தியா ஒரு நாடல்ல - ஒரு துணைக் கண்டம் என்று சொல்வதுபோல், எங்கள் ஊரில் அந்தக் காலத்து விவேகிகளும் (அறிவு ஜீவிகள்) திப்பணம்பட்டி என்பது பல ஊர்களின் கூடாரம். அதுவே ஓர் ஊரல்ல என்பது மாதிரி பிரச்னையைக் கிளப்புவார்கள். என்றாலும் திப்பணம்பட்டி என்ற கிராமமே வெளிவட்டாரங்களில் தெரிந்த பெயர்.

ஆனால், இந்த ஊருக்குள்ளேயே, வினைதீர்த்த நாடார்பட்டி, அருணாசலபுரம், சானுவன் முருகவேல் பட்டி, மீனாட்சிபுரம் போன்ற பல ஊர்கள் இருப்பதாக அங்கு வசிப்பவர்கள் கூறுவதுண்டு. ஒவ்வொரு 'ஊரு'க்கும் இரண்டு வீடுகள்தான் வித்தியாசம். ஆனாலும் இந்த ஊரபிமானம், கிராமிய தேசியத்தைச் சிலசமயம் விழுங்கி விடுவதுண்டு.

ஒரு தடவை கலைஞர் பாணி கதைவசனத்தில் ஒரு நாடகம் நடத்தியபோது, அழைப்பிதழில் திப்பணம்பட்டி என்று போட்டுவிட்டோம். வினைதீர்த்த நாடார்பட்டி என்று ஏன் போடவில்லை? என்று 'ஊர்ப் பெரிசுகள்' ஒரு பக்கமும், சிறுசுகள் ஒரு பக்கமுமாக பஞ்சாயத்தைக் கூட்டிச் சண்டை போட்டது இன்னும் நினைவுக்கு வருகிறது. இதில் அதிகமாக உருண்டது எனது தலைதான். இதன்மூலம் நான் கிராமத்துப் போராளியாகவும் மாறினேன். அல்லது மாற்றப்பட்டேன். இப்படி 'கிராமூட்டித்'தனங்கள் - அதாவது எதற்கெடுத்தாலும் எதையும் விவகாரமாக்குவது எங்கள் ஊருக்குக் கைவந்த கலை. இப்போது எப்படியோ- அப்போது- அதாவது சுமார் ஐம்பது ஆண்டுகளுக்கு முன்பு இதுவே நிசம்.

திப்பணம்பட்டி (இப்படி எழுதுவதற்கு இன்னும் பயமாகவே இருக்கிறது) பாவப்பட்ட கிராமங்களில் ஒன்று. மேற்கே, பத்து கிலோ மீட்டர் தொலைவில் தென்காசி, குற்றாலம் ஆகிய பகுதிகள் சிற்றாறு வளப்படுத்துபவை. முக்கனி மரங்களும், பசுமையான நிலவெளிகளும் கொண்ட பகுதி. வடக்கே, கரண்டை, தெற்கே கடையம் (பாரதியார் மனைவி பிறந்த ஊர்), கிழக்கே நெல்லை ஆகியவை சின்னச் சின்ன ஆறுகளாலும் தாமிரபரணியாலும் நீருட்டப்பட்டவை. ஆனால், இவற்றிற்கு மத்தியில் உள்ள ஐம்பது கிராமங்களில் பாவப்பட்ட ஒரு கிராமம் எங்கள் ஊர். பன்னிரண்டு வருடத்திற்கு ஒரு தடைவதான் குளம் பெருகும். வானம் பார்த்த பூமி, பனங்காடும், கரிசல் செடிகளும் மன்றி பெரும்பாலான மக்களை அன்றாடங்காய்ச்சிகளாக ஆக்கிக்காட்டும் கிராமம்.

நான் இரண்டே இரண்டு தடவைதான் ஏரியை விடப் பெரியதாக இருந்தாலும் குளம் என்று அழைக்கப்படும் எங்களது 'முடிதீர்த்தான்' குளம் பெருகியதைப் பார்த்திருக்கிறேன். இதர சமயங்களில் இது 'பயிர் தீர்த்தான்'தான். பத்துப் பன்னிரண்டு வயதில் குளம் பெருகிய போது இடுப்பில் கயிறு கட்டித் தாத்தா நிறை கிணற்றில் தூக்கிப் போட்டார். கயிறைப் பிடித்திருப்பதாக ஒரு அனுமானத்தை ஏற்படுத்திக் கொண்டு என்னை விட்டுவிட்டார். நானும் கயிறு தாத்தாவின் பிடியில் இருக்கிற தைரியத்தில் நீந்தினேன். இதில் தேர்ச்சி பெற்ற பிறகு காலையில் இதர சிறுவர்களோடு கிணற்றில் தான் குளியல். கமலைக் கம்பில் - அதாவது கமலைக்கான இரண்டு சாய்வு கம்புகளையும் மத்தியில் ஒரு பலகையையும் இணைற்றோரமாகக் கொண்ட மர அமைப்பில் - நின்று கொண்டு ஒருவன் கையில் கொளிஞ்சிச் செடியைப் பிடித்துக் கொண்டு தலைகீழாகப் பாய்ந்து கிணற்றுக்குள் எவ்வளவு ஆழத்திற்குப் போக முடியுமோ அவ்வளவு ஆழத்திற்குப் போய் போட்டுவிட்டு வருவான். உடனே, நான் அவன் வந்ததும் குதித்து கிணற்றுக்குள் போய் அந்தச் செடியை எடுத்துக் கொண்டு வர வேண்டும். செடி கைக்கு வருவதுபோலவும், வராதது போலவும் பாவலா காட்டும் போது மூச்சு முட்டும். உயிர் பெரிதா? வீர விளையாட்டுப் பெரிதா? என்ற சோதனையில் வெற்றி தோல்வி மாறி மாறி வரும்.

எங்கள் ஊர் பனங்காட்டுக் கிராமம் என்பதால் சிறுவர்கள் எல்லாம் சேர்ந்துகொண்டு கையில் மண்வெட்டியோடும், கூடவே ஒரு நாயோடும் எலிவேட்டைக்குப் போவோம். எலிவேட்டை என்பது புலிவேட்டையைவிட முக்கியமானது. காட்டில் உள்ள எல்லாப் பொந்துகளிலும் எலி இருக்காது. சல்லடை போட்டு சலித்தது போன்ற மினுக்கமான குருத்துமண் உள்ள பொந்துகளில்தான் எலிகள் இருக்கும். பத்துப் பதினைந்தடி தொலைவில் அப்பாவித்தனமாக இன்னொரு குருத்துமண் குவியல் கிடக்கும். அதை விலக்கிப் பார்த்தால் இன்னொரு பொந்து இருக்கும். அடிப்பொந்தை வெட்டும்போது, எலிகள் இந்த வெளிப்பொந்து வழியாக வெளியேறித் தப்பிக்கும். ஆனாலும் நாங்கள் இந்தப் பொந்துகளில் துண்டைப் போட்டு மூடிவிடுவோம். பொந்தை வெட்டி வெட்டி கீழ்நோக்கிய வாய்க்காலாக அது மாறும்போது, சில சமயம் பாம்புகள்கூட சீறி வரும். ஆகையால் மிகவும் எச்சரிக்கையாக





மண்வெட்டியால் தோண்டுவோம். வேறு வழியில்லாமல் எலி இன்னொரு பொந்து வழியாக மேலே ஏறும்போது துண்டுக்குள் சிக்கிக் கொள்ளும். அனேகமாக 'கண்டெலி'தான் கிடைக்கும். இதைவிட பலமடங்கு பெரிய 'வெள்ளெலி' கிடைத்தால், காட்டு விறகில் நெருப்பூட்டி கையோடு கொண்டுபோன 'மஞ்சமசாலா உப்பை'ப் போட்டுச் சாப்பிடுவதுண்டு. சில சமயம், 'வாதமடக்கி' கம்பில் தூக்குக் கயிறு மாதிரி ஒரு சின்னக் கயிறைக் கட்டி, மரத்தில் இருக்கும் ஓணானின் தலை வழியாக அதன் கழுத்தில் சுருக்குப் போட்டு, கீழே இழுத்து அவற்றை ஊர் முழுக்கும் ஓட்டுவதுண்டு.

**சாமியாடிகளும், பாட்டாளிகளும் :**

அந்தக் காலத்து சாமியாட்டங்கள், இந்தக் காலத்து சாமியாட்டங்களிலிருந்து முற்றிலும் மாறுபட்டது. எல்லா ஊர்களையும்போல எங்கள் ஊரிலும் பல்வேறு பங்காளி குழுக்கள், கூட்டங்கள் என்று அழைக்கப்படும். 'பண்டாராம் கூட்டம்', 'சாளுவன் கூட்டம்', 'பன்னிமாடன் கூட்டம்', 'திண்ணக்கன் கூட்டம்', 'துன்னன் கூட்டம்', 'சங்கிலி கூட்டம்', 'வைரவன் கூட்டம்', 'மாதவன் கூட்டம்' - இப்படிப் பல்வேறு கூட்டப் பெயர்கள். ஒவ்வொரு கூட்டத்துக்கும் ஒரு 'வக்கணைப்' (நையாண்டி) பெயர் உண்டு. இப்போது அவற்றைச் சொன்னால் நான் ஊருக்குள் நுழைய முடியாது. ஒவ்வொரு கூட்டத்திற்கும் ஒரு குலதெய்வம் உண்டு. பொதுவாக அத்தனை குலதெய்வங்களும் 'இருபத்தொரு மாடதேவதைகள்தான்'. என்னுடைய குலதெய்வம் 'உதிர மாடன்'. இவர் முக்கோணம் போன்ற ஆறடி நீள மண் உருவில் கம்பீரமாக நிற்பார். இவர்தான் இருபது தேவதைகளுக்கும் கதாநாயகன். இன்னொரு கூட்டத்தின் குலதெய்வக் கோயில் 'கோட்ட மாடன்'. இங்கே உதிர மாடனை மாதிரி கோட்டமாடன் கதாநாயகன். உதிர மாடன், சுடலை மாடன் போன்றவை பீடத்தைப் பொறுத்த அளவிலும் வழிபாட்டிலும் எக்ஸ்ட்ரா தேவதைகள். என்னுடைய அப்பா வழித் தாத்தாவும், அம்மாவழித் தாத்தாவும் காளியம்மா சாமியாடிகள்.

அப்பாவழித் தாத்தாவான பாட்டையா, சாமியாடும்போது, அவர் கையில் பழமும் தட்டுமாகக் கொடுப்பார்கள். நான் தாத்தா ஆடுகிற ஆட்டத்திற்கு ஏற்ப நகருவேன். என்னை ஓரக்கண்ணால் பார்க்கும் பாட்டையா ஆவேசப்பட்டு ஆடுவது போல் ஆடி, கையிலுள்ள பழங்களையும், எள்ளுப் புண்ணாக்கையும் என் கைகளில் திணிப்பது தெரியாமல் திணித்துவிடுவார். பல சாமியாடிகளுக்குக் கழுத்தில் மாலை போடுவார்கள். அவர்களும் மாலையைச் சுழற்றி எதேச்சையாக வீசுவதுபோல் தத்தம் குடும்பப் பெண்கள் இருக்கிற பக்கம் கொண்டைக்குப் பூவாக வீசுவார்கள். இப்படி சாமியாட்டத்திலும் ஓர் ஊழலாட்டம் உண்டு. சிலசமயம் சாமிகளுக்குள் தகராறு வருவதுண்டு. இருபது பேருக்குத் திருநீறு அளித்து ஆடுவதற்கு அனுமதி வழங்க வேண்டியது 'மாடத்தி'யின் பொறுப்பு. இந்த மாடத்தியை எங்களுடைய பெரிய பாட்டி கம்பீரமாக பீடத்தின் முன்னால் உட்கார்ந்து கொண்டு உடலை ஆட்டாமலே தலையை மட்டும் ஆட்டி கலைநயம் செய்வார்.

ஒரு தடவை 'முத்தாரம்மன் சாமியாடி'க்கு விபூதி பூச மறுத்துவிட்டார். உடனே பக்தர்களான ஊர்ப்பெரியவர்கள் சமரசம் செய்து வைத்தார்கள். அந்தக் காலத்தில் எல்லை தாண்டிய சாமியாட்டம் ஏற்பட்டால் ரகளைதான். ஒரு கூட்டத்து சாமியாடி ஆடியபடியே இன்னொரு கூட்டத்தின் கோயில் முன்னால் போகக் கூடாது. அங்கேயுள்ள சாமியாடி ஆட்சேபித்து 'வெளிச்சாமியாடியை'த் துரத்துவார். ஒரு பெண், சாமியாடும்போது எல்லோரும் வயது வித்தியாசமில்லாமல் அவள் காலில் விழுவார்கள். அவளும் அவர்களுக்கு நெற்றியில் விபூதி பூசுவாள். ஆனால் அவள் கணவர் மட்டும் விழமாட்டார். விபூதியையும் வாங்கிக் கொள்ளாமல் முகத்தை வேறு பக்கமாகத் திருப்பிக் கொள்வார். அதேசமயம், மனைவியான சாமியாடிக்குச் செய்ய வேண்டிய அத்தனைப் பணிவிடைகளையும் செய்வார்.

**தருமரின் சொர்க்கமும் - வழியனுப்புப் படலமும் :**

சில ஏழை - பாழை வீடுகளில் பெரிசுகள் நோய் வாய்ப்பட்டிருக்கும். ஆனால் சீக்கிரம் உயிர் போகாது. பொதுவாக, அம்பாசமுத்திரம் போன்ற இடங்களில் தங்கி இருந்து அறுவடைக் கூலி ஆட்களாகச் செல்லும் ஏழை

களுக்கு இது ஒரு பெரிய பிரச்னை. ஆசாமி தேற மாட்டார். ஆனால் அவரை விட்டு விட்டுப் போக முடியாது. போகாமலிருந் தாலோ, அந்த ஆண்டு மட்டுமல்ல, அதற்கு அடுத்த ஆண்டும் அம்பாசமுத்திரம் பண்ணை யார்கள் இவர்களை அறுவடைக்குச் சேர்த்துக் கொள்ள மாட்டார்கள். என்றாலும் இந்தச் சிக்கலுக்கு ஒரு தீர்வு உண்டு. உயிருக்குப் போராடும் தாத்தா பாட்டிகளின் தலைமாட்டி லிருந்து தருமர் சொர்க்கத்திற்குப் போன பெரிய எழுத்துப்புத்தகத்தை உள்ளூர் விவேகி களை வைத்து, ராகம் போட்டுப் படிக்க வைப் பார்கள். தருமர் சொர்க்கத்திற்குள் நுழைகிற பாட்டைப் பாடும்போது இவர்களுடைய உயிரும் போய்விடும். அந்தக் காலத்திலேயே சிறுவர்களில் 'விவேகி'யாகக் கருதப்பட்ட நான், இப்படி பல பெரிசுகளின் தலைமாட்டிலிருந்து தருமரின் சொர்க்க வரலாறை ராகம் போட் டுப் பாடி பலரை வழியனுப்பி வைத்திருக் கிறேன்.

**கமலையும் - காதலும் :**

வயல்களுக்கும், தோட்டம் - துரவுகளுக்கும் கிணற்றுமூலமாக கமலை அடிப்பது ஒரு இன்பக் கிளர்ச்சி. கிணற்றை ஒட்டியுள்ள கமலைக் கிடங்கின் மத்தியில் கிணற்றோடு இணைக்கப்பட்ட 'வடத்தில்' உட்கார்ந்து கொண்டு, இரு பக்கமாக 'நோக்காலில்' பூட்டியுள்ள மாடுகளை இலேசாக சாட்டைக் கம்பால் தட்டியபடியே கீழ்நோக்கிச் சென்று, வால் கயிற்றை இழுத்து, நீரை வெளிப்படுத்திப் பின்னர் மாடுகளோடு மேட்டுப் பக்கம் பின்னோக்கி நகர்வது ஓர் இனிய அனுபவம். பக்கத்து வயலில் பாத்திகளுக்குத் தண்ணீர் பாய்ச்சிக் கொண்டிருந்த ஓர் இளம் பெண்ணை நோக்கி, கையிலுள்ள சாட்டைக் கம்பை, தற்செயலாக ஆட்டிக்காட்டுவது போல் ஆட்டிக்காட்டியதும், உடனே அவள் சரல்மேட்டில் ஏறி, கீழே குதித்து என்னை நோக்கி கையை ஆட்டிக் காட்டியதும், ஓர் இனிய அனுபவம். அவள் போனபிறகு, அவள் அப்படிச் கையை ஆட்டியது தற்செயலானதா, அல்லது என்மீது ஏவப்பட்ட காதல் ஏவு கணையா? என்பதைக் கண்டறிய, எங்கள் சரல்மேட்டில் ஏறிநின்று, அவளை மாதிரியே கையைத் தொங்கப் போட்டுக் கொண்டு கீழே குதித்த நினைவுகள் குதிபோட்டு வருகின்றன. ஒரு குதிப்பில் அவள் என்னை நோக்கி கையை ஆட்டியதுபோலவும், மறு குதிப்பில் அவள் தற்செயலாக கையாட்டியது போலவும் தேறாமல் தெளிந்ததும், தெளியாமல் தேறியதும் இப்போது என்னுள் அசைபோடுகின்றன. தென்னைகள் வரவேற்பு வளையமாக, ஆமணக்குச் செடியின் நிறத்தில் அகத்திக்கீரை மாதிரி, பசுமையான கொண்டாங்கிக் கொண்டையோடு அவள் இப்போதும் என் கண்முன்னால் நிற்கிறாள். இன்னும் அவள் தற்செயலாகக் கையாட்டினாளா...? வேண்டு மென்றே ஆட்டினாளா...? என்கிற புதிரி விருந்து விடுபட முடியவில்லை.

**அழுகையும்.... புன்னகையும்...**

*1958*ஆம் ஆண்டு சென்னையில் கல்லூரி யில் படிக்க கிராமத்தை விட்டுப் புறப்பட்ட போது, நண்பர்கள் புடை சூழ வழியனுப்பப் பட்டேன். அப்போது 'மாங்கு மாங்கு' என்று அழுதேன். எப்போதாவது கிராமத்துக்கு போகும்போதுதான் அழுகை வருகிறது. பழக் கப்பட்ட முகங்கள் படுத்துவிட்டன. 'எங்க அண்ணாச்சி வந்துட்டாக..' என்று சொன்ன சகோதரிகளையும் காணவில்லை. 'அட எங்க அக்கா மகனா!..' என்று என்னைப் பார்த்து அதிசயிக்கும் சித்திகளையும் எல்லாவற்றுக்கும் மேலாக என் தாய் மாமா தங்கையாவும் காணாமல் போய்விட்டார். மாறாக, 'பெல் பாட்டம்' இளைஞர்களும், சல்வார் கமீஸ் பெண்களும், பீடி சுற்றும் நங்கைகளும் கண்ணில் படுகிறார்கள். இவர்கள் எனக்குப் புதியவர்கள். அவர்களுக்கு நானும் புதியவன். உறவுக்காரர்கள் பெற்றுப் போட்ட பிள்ளைகள்தான். ஆனால் உறவாட முடியாத இடைவெளி. தலைமுறை இடைவெளியோ... தலைநகர் இடைவெளியோ... எல்லாமே அன்னியமாகத் தெரிகிறது. மனத்தில் ஒரு சோகம் மண்டுகிறது. ஆனாலும், தொல்காப் பியச் சூத்திரத்தை நினைத்ததும், அந்தச் சோகமே புன்னகையாகிறது.

'பழையன கழிதலும்... புதியன புகுதலும்... வழுவல..' ●

---

**'' 'ஃபேர் எவர்' குடுங்க..''**

**''இது கள்ள நோட்டு, வேற தாள் குடுங்க!''**

**'' 'ஃபேர் எவர்' விளம்பரத்தில் மாற்ற முடியாதது எதுவும் இல்லன்னு சொல் றாங்களே!''**

***- சோழபுரம் யாக்கோப்***



# நீங்கள் கேட்டவை - தராசு!

# பாபாவுக்கு இத்தனை 'பீடி'கை, பந்தா ஏன்?

● **கே. கணேசன், சென்னை - 16**

*? எம்.பி. பதவிக்காலம் முடிந்து ராஜ்ய சபாவை விட்டு வெளியேறும்போது ஜெயப்பிரதா கதறி அழுதுவிட்டாராமே?*

! அவர் கட்ட வேண்டிய வரிபாக்கியை யாராவது நினைவுபடுத்திவிட்டார்களோ என்னவோ!

● **எஸ்.பி.பாபு, தூத்துக்குடி**

*? மனித நேயம் என்றால் என்ன..?*

! தலால் ஆஸ்மியைக் காதலனுடன் சேர்த்து வைக்க பத்திரிகைகள் முதல் முதல்வர் வரை எடுத்துக் கொண்ட முயற்சிகள்.

● **ஆர். கவிதா, மதுரை - 3**

*? விபூதி வழக்கைச் சந்திப்பேன் என்கிறாரே கருணாநிதி?*

! இதற்கு வழக்குப் போடுவதே அசட்டுத்தனம். கொஞ்சம் வாதத்துக்கும் நிறைய விதண்டாவாதத்துக்கும் இடமளித்து, திருநீறை மேலும் கேவலப் படுத்தும்.

● **ஆர்.கர்ணன், பெத்தரெங்கப்புரம்** ❑

*? எப்போது எல்லா துறையிலும் தமிழகம் முதல் இடத்தில் வரும்...?*

! தலைவர்கள் அரசியலைக் கடந்து சிந்திக்கும்போது. ஏற்றுமதி கொள்கையில் மத்திய அரசு அறிவித்த மாற்றங்களை ஏற்றுமதியாளர்களே வரவேற்றிருக்க, தமிழக முதல்வர் மட்டும் அதை மட்டம் தட்டியிருக்கிறார். மாறாக, தமிழக ஏற்றுமதியாளர்களை இச் சந்தர்ப்பத்தில் தட்டிக் கொடுத்தால் முன்னேற்றத்துக்கு முதல் படியாக அமையுமல்லவா!

● **ஔவை ஏ.எஸ்.யோகானந்தம், கலிங்கியம்**



● கண்ணீரும் காரணமும்

*? பாபாவுக்கு எதற்கு இத்தனை 'பீடி'கை, இத்தனை பந்தா?*

! அந்த முத்திரையின் உள் அர்த்தம் என்ன...? 'கெய்க்கோ யமாடா' ஜெயிக் ஆவாரா? மாட்டாரா? என்பதையும் பொறுத்துத்தானே பீடி பற்றுமா பற்றாதா என்று நிர்ணயிக்க முடியும்! பந்தா உருவாக்குவதே இந்த எதிர்பார்ப்புகளைத் தோற்றுவிக்கத்தான்.

● **வளர்மதி ஆசைத் தம்பி, தஞ்சாவூர்**

*? கர்நாடகாவில், தியாகராஜருக்குக் கோவில் கட்டிக் கும்பிடுகின்றனர். ஆனால், திருவள்ளுவர் சிலையைத் திறக்கக்கூடாது என்கின்றனர். தெலுங்கை நேசிக்கும் கன்னடர்கள் தமிழை எதிர்ப்பது ஏன்..?*

! இசை என்பது மொழியைக் கடந்தது. தியாகராஜர் சிலை நிறுவுவதில் கன்னடியருக்கு மட்டுமின்றி தமிழருக்கும் ஈடுபாடு உண்டு. ஆனால், வள்ளுவர் சிலை பெங்களூர் வாழ் தமிழர்களால் நிறுவப்படுகிறது. அந்த முயற்சியில் சில கன்னடியர்களையும் தொடக்கத்திலேயே சேர்த்துக் கொண்டிருந்தால் பிரச்னையாய் இராமல் கூட்டு முயற்சி ஆகியிருக்கும்.



● தெலுங்கும்...



● ... தமிழும்



● பந்தாவும் போஸும்

● **எஸ்.முரளி, குறிஞ்சிப்பாடி**

*? கலைஞர் மகள் கனிமொழி சின்னத் திரை இயக்குனராகப் போகிறாராமே..?*

! அவரது கவிதைகள் அளவுக்குச் சிறப்பாக இருந்தால், சின்னத்திரை தரமான தயாரிப்புகளைக் காணும்.

● **ஆர். சுப்பாராவ், திருக்கோவிலூர்**

*? 'அரசு சார்பில் கொண்டாடும் காமராஜர் நூற்றாண்டு விழாவுக்குச் சோனியா காந்தியை அழைக்க வேண்டும்' என்று தமிழக காங்கிரஸ் தலைவர்கள் கூறுகிறார்*



• கவிதையும் கன்னி முயற்சியும்

கனே..? இது நடக்கிற காரியமா?

! எங்கே அழைத்துவிடப் போகிறாரோ என்று பயந்துகொண்டு, அதைத் தவிர்க்க இப்படி அறிக்கை விட்டிருக்கலாம். காரியவாதிகள்தான்!



• காதலும் ஆதரவும்

● கே. கணேசன், சென்னை

? 'ஹிந்து கோயில்களில் ஆன்மிக வகுப்பு நடத்த ஆசிரியர்களைப் பயன் படுத்துவது சமயசார்பற்ற அரசுக்கு உகந்ததல்ல' என்கிறாரே டாக்டர் ராமதாஸ்?

! சமயச் சார்பை ஒதுக்கிவிட்டுப் பார்த்தாலும் ஆசிரியர்களைப் பயன்படுத்தினால் அங்கே ஆன்மிகம் இராது. அலுப்பு வகுப்பு தான் நடக்கும். ஓதுவார்களை அழைத்தால், அவர்கள் மாணவர்களைத் தேடி ஓட வேண்டி வரும். எப்படிப் பார்த்தாலும் இதெல்லாம் பயனற்ற வேலை. ரிமோட் பாணியில் சொன்னால், the business of a government is to govern; not interfere!

● சி. எஸ்.ராஜமழை, சின்னமனூர்

? கோவையில் ஒரு கொலை நடந்திருப்பது எதைக் குறிக்கிறது..?

! கோவை மட்டுமா..? ஜம்முவில் கோயிலில் நுழைந்து தற்கொலைப் படை ரகளை; பதிலுக்கு ஹுரியத் தலைவர் மீது சிவசேனா தலைவர் தாக்குதல்; குஜராத்தில் தொடரும் கொடூரம்; போதாக் குறைக்குச் சென்னையில் கொள்ளைகள் தொடர்பான படு கொலைகள்.. நாடு முழுவதும் ரத்தக் களறி!

● ந. விநாயகமூர்த்தி, சென்னை - 13

? 1984இல், ராமர் - ஜானகியின் ரத யாத்திரையைப் பாதுகாப்பதற்காக ஏற்படுத்தப்பட்ட பஜ்ரங் தளத்தின் கோட்பாடுகள் பாதுகாப்பு, சேவை, கல்வி ஆகியவை. ஆனால் இப்போது தடம் புரண்டு பெரிய அரசியல் சக்தியாக உருவெடுத்து விட்டதே..?

! சக்தி அல்ல; தடம்புரண்டு அரசியல் சகதியில் சிக்கியிருக்கிறது.

● அ. ராஜா ரஹ்மான், கம்பம்

? அமைச்சர்களோடு முதல்வர் நேருக்கு நேர் பேசும் வீடியோ கான்ஃபரன்சிங் முறை தலைமைச் செயலகத்தில் அமைக்கப்படுகிறதாமே..?

! ஜெ. பாணி அரசியலில் கான்ஃபரன்ஸிங்குக்கு இடமிருக்கிறதா என்ன? வீடியோ கமான்டிங் சிஸ்டம் என்று வேண்டுமானால் சொல்லுங்கள்.

● வி. சுரேஷ், கும்பகோணம்

? புத்தர் சிலையை உடைத்ததால் தானே ஆஃப்கானிஸ்தானில் பூகம்பம் வந்து ஐயாயிரம் பேர் பலியானார்கள்?

! கருணாமூர்த்தியான புத்தரைப் பற்றி இப்படிச் சொல்வது தாலிபானின் காட்டுமிராண்டித் தனத்தோடு போட்டி போடுவதாக உள்ளதே!

● கோமதி சங்கர், காலிகட் ★



• வழக்கும் விதண்டாவாதமும்

? அரசியல் என்று சொல்லிக் கொண்டு நடத்தப்படும் அரை வேக்காட்டுத்தனங்கள் நடப்பது எப்போது மாறும்?

! 'கருணை' என்ற பெயரில், நாக்கறுக்கும் தொண்டருக்கும் தற்கொலை செய்து கொண்டவரின் குடும்பத்துக்கும் உதவி செய்வது போன்ற கால்வேக்காட்டுத்தனங்கள் போற்றப்படும்வரை மாறாது.



• ஆலோசனையும் ஆணையும்!

☐ ரூ. 100 பரிசு பெறுபவர் :
**ஆர்.கண்ணன்**, பெத்தரெங்கப்புரம்,
தனக்கர்குளம் (அஞ்சல்),
வடக்கன்குளம்-627 116, நெல்லை மாவட்டம்.

★ ரூ. 50 பரிசு பெறுபவர் :
கோமதி சங்கர், 13/525, கல்லை ரோடு,
காலிகட் - 673 002.

# ஸர்வதேவதா அஷ்டோத்திர

## சதநாமாவளி மாலா

(முழுவதும் ஸம்க்ருதத்தில்)

பவிஷ்ய, வாராஹம் முதலிய புராணங்களிலிருந்து 31 அஷ்டோத்ரங்கள் மற்றும் ருத்ரத்ரிசதி ஆகியவற்றை இணைத்து அர்ச்சனை செய்வதற்கு தகுந்ததாக தேவநாகரியில் உள்ள புத்தகம்.

**விலை 75/-**

**ஸ்ரீ சுரபி ஜகத்குரு சதாப்தி பப்ளிகேஷன்ஸ்**

புதிய எண்.84/12, (158/12) லேக் வியூ ரோடு,
மேற்கு மாம்பலம், (Junction of Station Road)
சென்னை–600 033. போன் : 4747066

---

**25 ஆண்டுகள் அனுபவமிக்க**



# SRINIVASA SEWING MACHINE SERVICE CENTRE

159, கொன்னூர் ஹை ரோடு,
அயன்புரம், சென்னை - 23
போன்: 6450073

எமது அனைத்து வாடிக்கையாளர்களுக்கும் நன்றி

போன் செய்தால் போதும்! தங்கள் இல்லத்திற்கே வந்து திருப்திகரமாக நம்பிக்கையாக உங்கள் வீட்டு தையல் மிஷினை நல்ல முறையில் ஓவராயிலிங் செய்து தருகிறோம்.
(சென்னைவாசிகளுக்கு மட்டும்)

நல்ல தரமான, உத்திரவாதத்துடன் கூடிய மிஷின்கள் விற்பனைக்கும் உள்ளன.

தொடர்பு கொள்ளவும்:
**Prop. K. SRINIVASAN**

---

# பட்டுப் போன்ற மென்மையான ஒரு அனுபவம்



- 100% சேலம் ஸ்டீல்
- சிறந்த சோக்-ஸ்டாப்
- 22 மாடல்கள் 59 விதமான அளவுகளில்
- ஸாடின் ஃபினிஷில் கிடைக்கிறது

*Introducing Elegance Unique*

• பாத்திரங்கள் துரிதமாக உலர்வதை உறுதி செய்யும் விதத்தில் டிரெய்ன் போர்டில் தண்ணீர் தேங்காதபடி வெளியேறும் அமைப்பு.

இந்தியாவின் நம்பர்.1 சிங்க்

**NIRALI®**
STAINLESS STEEL KITCHEN SINKS

Mfgrs: JYOTI (I) METAL INDUSTRIES P. LTD., P.O. Box No: 9136, Mumbai -400025. Fax: 022-4362543 Website: www.niralisinks.com

Distributors: M/s. Sagar Metals Corp., Chennai. Tel: 044-5353871/4165 • M/s. Truthful Co., Madurai. Tel: 0452-604440/624496 • M/s. Shri Raja Traders, Pondicherry. Tel: 0413-252681/254799

Sunny



# கோபத்தில் குப்புசாமி!

● தி.மு.க. பாராளுமன்ற உறுப்பினர் குப்புசாமி மிகவும் கோபத்திலிருக்கிறார். காரணம் அவருக்குக் கிடைக்க வேண்டிய பாராட்டை வைகோ தட்டிக் கொண்டு போய்விட்டாராம். நெய்வேலி நிலக்கரி நிறுவனத்தைத் தனியாருக்குத் தாரை வார்க்கும் யோசனையில் மத்திய அரசு இருப்பதாக அறிந்தபோது குப்புசாமியும் மற்றொரு தி.மு.க. உறுப்பினரான ஆதிசங்கரும், மக்களவையில் கடுமையாக எதிர்த்துப் பேசினார்கள். உடனே அமைச்சர் அருண்ஷோரி இடையில் புகுந்து ''உறுப்பினர்களின் கருத்துக்களை அரசு கவனத்தில் எடுத்துச் செயல்படும்; அவசரகதியில் இந்த நடவடிக்கையை மேற்கொள்ளாது'' என்று அறிவித்தார். அன்று மாலை வைகோ பிரதமரைச் சந்தித்தார். 'நிலக்கரி நிறுவனத்தைத் தனியாருக்கு மத்திய அரசு விற்காது'' என்று பிரதமர் தம்மிடம் உறுதிமொழி அளித்திருப்பதாக தில்லியிலிருந்து சென்னை பத்திரிகைளுக்கு ஃபோன் செய்து தகவலைச் சொல்லி விட்டார். மறுநாள் பேப்பர்களில் வந்துவிட்டது இச்செய்தி! ''ஏதோ இவரது முயற்சியால்தான் மத்திய அரசு இந்த விவகாரத்தில் பின் வாங்கி விட்டது போல் பெருமை பேசிக் கொள்கிறார்'' என்கிறாராம் குப்புசாமி. கோபத்துக்குக் காரணம் புரிந்திருக்குமே!



● தி.மு.க. பொதுக் குழுவில் தி.நகர் எம்.எல்.ஏ. அன்பழகன் பேசியது, மற்ற சீனியர் உறுப்பினர்களைக் கொஞ்சம் சூடாக்கி இப்போது சட்டமன்றத்தில் விறுவிறுப்பாகச் செயல்பட வைத்திருக்கிறது. ''ஐந்து வருட காலம் ஆட்சியின் பலன்களை அனுபவித்து வந்தவர்கள் இப்போது சட்டமன்றத்தில் வாயில் பிளாஸ்திரி போட்டுக் கொண்டு அமர்ந்திருப்பதைக் கண்டு தொண்டர்கள் டென்ஷனில் இருக்கிறார்கள். அதில் பெட்ரோல் ஊற்றும் விதமாக சிலர் முதல்வரைப் பாராட்டியும் பேசுகிறார்கள்'' என்று அன்பழகன் ஆவேசத்துடன் பேசிவிட்டு அமர்ந்தபோது ஒரே கைதட்டல். முன்னாள் மாண்புகள் முகம் சுருங்கிப் போனார்களாம்.

● எப்போதும் அரசியல் லாவணிகள், ஊழல், கொள்ளை, என்று எழுதிக் கொண்டிருந்தால் எப்படி? அரசியல்வாதிகள் நல்ல பணிகளே செய்வதில்லையா? என்று எரிச்சலுடன் கேட்பவர்களுக்கு ஆறுதலாக இரண்டு செய்திகள். சிவகாசி நாடாளுமன்ற தொகுதியில் உள்ள ஏழை எளிய மாணவ, மாணவிகளுக்கு எந்த கட்டணமுமின்றி இலவசமாக, நுழைவுத் தேர்வு பயிற்சியை கடந்த மூன்றாண்டுகளாக நடத்தி வருகிறார் வைகோ. தொகுதியில் ஆறு இடங்களில் பயிற்சி முகாம் நடத்துகிறார். அடுத்து, டாக்டர் ராமதாஸ் வழிகாட்டுதலில் செயல்படும் 'பசுமைத் தாயகம்' என்ற அமைப்பு ''நீர்வள ஆதாரங்கள் மேலாண்மை'' என்ற ஆக்கபூர்வமான கருத்தரங்கைச் சமீபத்தில் நடத்தியது அரசியல் கலப்பில்லாத உருப்படியான விஷயம்.

— சஞ்சயன்



● பாஸ்கர் சக்தி

# தம்பி லட்சுமணா!



ஊருக்கு நடுவுல ஒரு மண்டபமுண்டு. மண்டபமென்ன மண்டபம்! அதென்ன ஆயிரங்காலு மண்டபமா! அதில்லை மண்டபம்!! ஒரு வட்டம் நான் மதுரைக்குப் போனேன்ல... அப்ப களுதைய எனக்கு என்ன ஒரு முப்பது வயசிருக்குமா? இருக்கும்; இருக்கும். நானும் எங் கூட்டுக்காரன் லச்சுமணனும்தான் மதுரைக்கிப் போனோம். அப்பல்லாம் எப்பயாச்சும் ஒரு டி.வி.எஸ். பஸ்ஸு மதுரைக்குப் போகும். அதுக்கே ஏறுறதுக்கு ஆளு இருக்காது. நீ வா, நீ வான்னு கூப்பிட்டுக்கிட்டு நிப்பாங்க. அந்தச் சமயத்துல



எல்லாம் சனங்களுக்கும் காடு கரைக்கிப் போறதை விட்டா வேற என்ன தெரியும்? அப்ப பஸ் ஏறுற சனம் ரொம்ப ரொம்பக் கம்மி. இப்பதானயா எதுக்கெடுத்தாலும் பஸ்ல ஏறிக்கிட்டு, ரூவா நோட்டை நீட்டி, 'இம்'முங் கிறதுக்கு எல்லாம் வெளியூர் போயிர்றாங்க. அப்பல்லாம் ஊரைத் தாண்டி ஒருத்தன் வெளியூரு போறதே ரொம்ப அபூர்வம்.

லச்சுமணந்தான் என்னைத் தட்டையேத்திக் கூட்டிப் போனான். லச்சுமணன் ரொம்ப விறைப்பான ஆளு. யாருக்கும் பயப்பட மாட்டான். ரோசம்னா ரோசம் அப்பிடியொரு ரோசம் உள்ளவன். நானும் அவனுந்தான் சின்ன வயசுலயிருந்து கூட்டாளிகள் அவனை நான் தம்பின்னுதான் கூப்பிடுவேன். ரெண்டு பேருமாப் போயி மகாலு, மீனாச்சி அம்மன் கோயிலு, ஆயிரங்கால் மண்டபமெல்லாம் பாத்தோம்...

... இப்ப என்னத்துக்கு இதைச் சொல்ல வந்தேன்? ...ம் வயசாயிப் போனாலே இப்படித்தான் ஆகும் போலருக்கு. எதையோ நினைக் கப் போயி எது ஏதோ மனசுல வருது. ம்... ஆமாமா... இந்த மண்டபத்தைப் பத்திச் சொல்ல வந்தப்ப அது ஞாபகம் வந்திருச்சு... ஆமாமா சரிதான்.

இது வந்து மண்டபமில்லை... நாலு கல்லுக் காலு நட்டு மேல கூரை போட்ருக்கு... பக்கத் துல வேப்ப மரம் வேற இருக்கா... காத்து, விட்டா வேட்டியை அவுத்துரும். அப்பிடி யொரு சுகமான காத்து... தாயமும், பதினைஞ் சாம் புலி ஆட்டமும் கரியில வரைஞ்சு வச்சி ருக்கு. நாலு கல்லுக்காலும் ஒருகாலத்தில் 'பள பள'ன்னு இருந்துச்சு. எப்பவாச்சும் பக்கத்துல இருக்க கோயிலுக்கு வெள்ளையடிக்கிறப்ப இந்த நாலு கல்லுக்காலயும் சாஸ்திரத்துக்குச் சுண்ணாம்பை இளுகி விட்டுட்டுப் போவாங்க...

சாஞ்சு சாஞ்சு எண்ணெய்ப் பசையாக் கெடக்கும். அப்புறம் என்னயொத்த ஆளுக, வேற எங்க பங்குக்குச் சுண்ணாம்பை இளுகி விட்டுருப்போம்.

மண்டவத்தில நானு, லச்சிமணன் தவிர வெள்ளை, முத்தலீப்னு ஒரு ராவுத்தரு, சின்னையன் அப்படின்னு ஏழெட்டுப் பேரு இருக்கோம்.. இளவட்டப் பயலுக எல்லாருக்கும் எங்களைப் பாத்தா சமயத்தில கேலி, சமயத்தில எரிச்சல்னு இருக்கும். "என்னா பெரிசு? மண்டபத்தைப் பெரிசுகளுக்கு என்ன பட்டாவா போட்டுக் குடுத்திருக்கு"ன்னு ஒரு நா ஒருத்தன் கேட்டான். "எளவட்டங்க எங்கயும் போயி விளையாடலாம். தூங்கலாம். எங்களை மாதிரி ஆளுகளுக்கு இதுதான்யா போக்கிடம்"னு நான் சொன்னதும்... ''அதுஞ் சரிதான்''னுட்டுப் போயிட்டான்.

ஒலகத்துல நடக்குற எல்லாக் காரியங்கள்லயும் வயசு, வாலிபம் இருக்கறவங்களுக்குத்தான் மதிப்பு, மரியாதி, கௌரவம் எல்லாம்... எங்களை மாதிரி செழண்டு போயி ஓரமாக் கெடக்கிறவங்களை, அய்யா... கூப்பிட்டு மரியாதை பண்ண வேணாம்... பேச வேணாம்.. அட! பேசவா பதிலு கூடவா பேசக் கூடாது.. ஓடறாங்கையா! நாங்களும் ஒடுன ஆளுகதான்.. நானும் லச்சுமணனும் ரெண்டு பேரும் எம்புட்டு ஓட்டம் ஓடி இருக்கோம் இணைபிரியாம...

லெச்சிமணன் ஆளு பீமன் மாதிரி இருப்பான். இனியும் அதே மாதிரிதான். ஆனா நல்ல மனசு.. சொல்லு பொறுக்க மாட்டான். எனக்கு நல்லா நினைப்பு இருக்கு... ஒருதரம் தீவாளிக்கு வீட்ல அதிரசஞ்சுட்டாக.. அதிரசம்னாலே அது தீவாளிக்குத்தேன்! நானும் லெச்சுமணனும் போயி செக்கடியிலே எண்ணெய் வாங்கியாந்து தந்தோம்... அடுப்பெரிக்க பருத்தி மாரு கொண்டாந்தோம்.. எப்படா அதிரசம் சுடுவாகன்னு லச்சிமணன் வீட்டையே சுத்திட்டுத் திரிஞ்சோம்.

"போயி வெளையாடுங்கடா"ன்னு அம்மா விரட்டுச்சு. எங்கன போறது! அதிரசந்தான் எங்களைப் புடிச்சு இழுக்குதே.. ஒருவழியா தொழுவத்துப் பக்கம் எண்ணெய் முறுகற வாசனை. மாவும், வெல்லமும் எண்ணெயில முறுகற வாசனை இருக்கே! ம்... அதையெல்லாம் எப்படிச் சொல்ல! மூக்கு, கண்ணு காதெல்லாம் அப்ப தீட்டி வச்ச கத்தி மாதிரி இருந்துச்சு. ம்... வாசனை வந்துச்சா... ரெண்டு பேரும் உள்ள போயிட்டோம். லச்சிமணன் அவுக அம்மா செல்லாயிப் பெரியம்மா தட்டுல அதிரசத்தை அடுக்குறாங்க.. என்னா ஒரு நெறம்.. எங்க வீட்ல செவலைப் பசு ஒண்ணு இருந்துச்சு. அந்த நிறத்தில் மினுமினுன்னு. சூடா... லச்சுமணன் அதை ஆவலா எடுத்தானா இல்லியா... செல்லாயிப் பெரியம்மா மேல 'சுரீர்'னு ஒரு சொட்டு எண்ணெய் விழுந்திருச்சு போல.. போட்டாங்க பாரு ஒரு அடி.... அதிரசம் கீழ விழுந்துருச்சு... கண்ணுல தண்ணி வந்துருச்சு.."



''அதிரசத்துக்கு அம்புட்டு அவசரமாடா தொன்னை நாயி. வாயி கேக்குதோ.... அந்த வாயைத் தைச்சா என்ன" அப்படின்னு கத்தி விட்ருச்சு செல்லாயிப் பெரியம்மா. லச்சுமணன் அழுதுகிட்டே வந்திட்டான். மக்காநாளு தீவாளி. அதிரசத்தைக் கையால கூடத் தொடமாட்டேன்னு சொல்லிட்டான். செல்லாயிப் பெரியம்மா கெஞ்சுது. அழுகுது... ம்ஹூம்.. உங்கையால சுட்ட அதிரசத்தை இனி என் வாயில வைக்க மாட்டேன்னுட்டான். அந்தத் தீவாளிக்குச் செல்லாயிப் பெரியம்மாவும் அதிரசந்திங்கலை. அதுக்கு அடுத்த தீவாளிக்கு அந்தம்மா அதிரசம் சுடலை.. எங்கம்மா போய் சுட்டுக் குடுத்துச்சு.. அதைத்தான் லச்சுமணன் தின்னான். அப்பிடி ஒரு வீம்புக்காரன்.

வயசில நானும் அவனும் எல்லாம் பண்ணி இருக்கோம். எல்லாம்னா... எல்லாம்தான். ஒருமுறை ஒரு வீட்டுக்குப் (யாரு வீடுன்னு சொல்லக் கூடாது..) போயிருந்தோம். அந்தப் புள்ள லச்சுமணனைப் பாத்துட்டுக் கிளம்பி வந்திருச்சு.. ஊருக்குள்ள மறைவான இடமில்லாம வீட்டு மெத்துக்குப் போயிட்டோம். ஓட்டுக் கூரை முகப்புல எறங்கி இருக்கு. காரை வீடு... விசுக்குன்னு அரவங்கேட்டு ஏணி சாத்தி யாரோ ஏறுறாக... சட்டுன்னு என்ன பண்ணான் லச்சிமணன்? வடக்கயிறை மூலையில இருந்த கொண்டியில சுருக்குப் போட்டான். கயிறைக் கீழே தொங்க விட்டு நானும் அவனும் எறங்கிப் போயிட்டோம். வினை எங்க இருந்திச்சன்னா அந்த முடிச்சுல... லச்சுமணனுக்குச் சில முடிச்சுகள் எல்லாம் தெரியும். அது ஒரு வித்தை மாதிரி... தெரியாதவுக அந்த முடிச்சை அவிக்க முடியாது. ஒண்ணு முடிச்சு இறுகும். இல்லாட்டி அவுக்க அவுக்க முடிச்சு வேற விதமா விழுந்தபடி இருக்கும். அவசரத்துக்கு லச்சிமணன் அப்படி ஒரு முடிச்சைப் போட்டு, நாங்க எறங்கிப் போயிட்டோம். அந்தப் புள்ளையோட அப்பங்காரன், அண்ணங்காரன் எல்லாம் வந்து பாத்திருக்காங்க... அந்தப் புள்ளை எங்களை அனுப்பிட்டு கயிறை அவுக்கப் பாத்திருக்கு. நடக்கிற காரியமா? அவங்களும் முயற்சி பண்ணியிருக்காங்க... ஒண்ணும் ஆகலை. இந்த மாதிரி முடிச்சுப் போடுற பய லச்சுமணந்தாண்டான்னு ஊர்க் கூட்டத்தைக் கூட்டிட்டாங்க.. அந்தப் புள்ளை வேத்துச் சாதி. அதுனால தெண்டங் கட்டுனோம். சொந்த சாதின்னா கல்யாணங்

### முகத்திரை அடையாளம்

இராஜஸ்தானைச் சேர்ந்த பெண்கள் மஞ்சள் முகத்திரை அணிந்திருந்தால் அண்மையில் ஆண் குழந்தை பெற்றிருக்கிறாள் என்று பொருள்! ரோஸ் நிற முகத்திரை அணிந்திருந்தால் திருமணத்திற்குத் தயாராக இருக்கும் பெண் என்று பொருள்.

— நெ. இராமன்

---

கட்டியிருக்கணும்.

ம்.. ஆடாத ஆட்டமெல்லாம் ஆடினோம். ஆடி ஓடி சம்பாரிச்ச அப்பன் தந்த பூமிக்கு மேல, முப்பது ஏக்கருக்கும் மேலே லச்சுமணன் சம்பாரிச்சு சேத்துட்டான். எனக்கு அம்புட்டு முடியலை... ஒத்தப் பயலை மிலிட்ரிக்கி அனுப்பிச்சிட்டேன். இன்னொருத்தன் நிலத்தைப் பாத்துக்கிர்றான். பொண்ணை ஒரு டைவருக்குக் கட்டிக் குடுத்திருக்கு.

லச்சுமணனுக்கு ஒத்தப் பொண்ணு, ஒரு பையன்... மவளை ஒரு பெரிய வேலைக்காரனுக்குக் கட்டிக் குடுத்தான். என்னமோ இன்ஜினியராம். மெட்றாசு தாண்டி எங்கியோ வேலை.. அந்தப் புள்ளை நாலு வருசம் அஞ்சு வருசம்னு எப்பயாவதுதான் வரும்.. மகனுக்கு வசதியான எடத்துல பொண்ணை எடுத்தான்... இவன் மகனும் ஆளு ஜம்முன்னு இருப்பான். டிராய்ட்டரு வண்டி வச்சு விவசாயம். மோட்டரு பைக் வச்சு ஓட்டிக்கிட்டுத் திரியறான். ஒத்த மகன் இப்பிடி ராசா மாதிரி இருக்கிறதைப் பாத்து லச்சுமணன் சந்தோசமா இருக்கணுமில்ல.. ஆனா.. அப்பிடித் தெரியலை சாமி - ஏன்னு கேக்கிறீகளா? அதைத்தான்யா சொல்றேன்... வயசு இருக்க வரைக்கிந்தான் வாழ்க்கைன்னு...

காலையில எந்திரிச்சு எதையோ குடுக்கிறதைத் தின்னுட்டு இங்க வந்து மண்டபத்தில படுத்துக்கிட்டு, நாள்பூரா பழசை நினைச்சுக்கிட்டு, மனசுல இருக்கற வருத்தத்தை மறக்கிறதுக்கு என்னென்னத்தையோ பேசிக்கிட்டு எப்ப சாவோம்னு காத்துக் கிடக்குறோம். போற போக்குல, 'கிழவங்க பாடுதான்டா ஜாலி'ன்னு எம் பேரப் புள்ளையே சொல்றப்ப எம்புட்டு கஷ்டமா இருக்கு தெரியுமா...?

அன்னைக்கி நானும், முத்தலீப்பு, லச்சுமணன் மூணு பேரும் இருந்தோம். சின்னையன் வந்தான். சாஞ்சு படுத்தான். கொஞ்ச நேரங் கழிச்சு வருத்தைத் தடவுனான்.

"என்னா சின்னையா, சாப்பாடு பலமா?"ன்னு கேட்டான் லச்சுமணன்.

"இல்லை லச்சுமணா.."

'வீட்ல எதும் விசேஷமா"

"ஆமா... மருமக அதிரசஞ் சுட்டுக்கிட்டு இருக்கா.. துண்டு வாழை எலையை எடுத்து, அதில எண்ணெயைத் தடவி... வடை தட்டுறாப்ல அதிரச மாவைத் தட்டி எண்ணெயில போடுறா... 'கம்'முன்னு அப்படி ஒரு வாசம் வருது..

நான் லச்சுமணன் மூஞ்சியைப் பாத்தேன். அவன் எச்சி முழுங்கிக்கிட்டே கேட்டான்.

"அப்பிடியாடா.. எத்தனை தின்னவன்?"

"காலைலருந்து உக்காந்துக்கிட்டே இருக்கேன் லச்சுமணா... அவ ஒண்ணைத் தின்னுக்கிறா.. புள்ளைக்கி ஒண்ணைக் குடுக்கறா.. அப்றம் சட்டில போடுறா. சரி ஒண்ணாவது குடுத்து விட மாட்டாளான்னு உக்காந்தே இருந்தேன்."

சின்னையன் சொல்லுறப்பயே அவன் குரல் நடுங்குச்சு.. வாயோரத்தில் வழிஞ்ச எச்சியைத் துடைச்சிக்கிட்டான். நாங்க எல்லோரும் எச்சியை முழுங்கிக்கிட்டு எழவு வீடு மாதிரி பேசாம ஒக்காந்து இருந்தோம். அவனே மேக்கொண்டு சொன்னான்.

"———அப்றமா உள்ளருந்து சத்தங் குடுக்கறா– என்னை மண்டபத்து பக்கம் போகலியா? இங்கேயே உக்காந்துகிட்டு இருக்கீங்க?" அப்படிங்கிறா.

"போகணும்மா... காலு நோகுது செத்த கழிச்சுப் போகணும்னேன்."

"மகனைக் கூப்பிட்டு ஒத்த அதிரசத்தைக் குடுத்து விட்டு, இதைத் தின்னுட்டு ஒங்க தாத்தாவைக் கிளம்பச் சொல்லுன்னு சொல்றா."

பேரன் கொண்டாந்து குடுத்தான். தின்னேன். ஒண்ணைத் தின்னுட்டு வர்றதுக்குப் பதிலு திங்காமயே வந்திருக்கலாம்... அம்புட்டு ருசி."

கொஞ்ச நேரம் பேசாம இருந்த சின்னையன் கண்ணுல 'கிசுக்'குன்னு தண்ணி வடியுது. விசும்புனபடியே சொல்றான்.

"இந்த நாக்கு இன்னஞ் சாகலையேடா, பாவிப்பய கடவுளே!"

துண்டை வாயில பொத்திக்கிட்டு அப்பிடியே குப்புறப்படுத்துக்கிட்டான். அவன் சரீரமே குலுங்குது. யாரு என்னத்தைப் பேச. எல்லாரும் 'கம்'முன்னு இருந்தோம். லச்சுமணன் மூஞ்சி ரொம்ப எப்படியோ தெரிஞ்சுச்சு எனக்கு. அவன் பேசாம எறங்கி ஓடைப்பக்கமா நடக்க ஆரம்பிச்சான். நானும் எறங்கி அவன் பின்னாலேயே போனேன்... ஓடைக்குள்ள கொஞ்ச தூரம் போனவன் 'கிசுக்'குன்னு அவன் பாட்டுக்கு நின்னு எதையோ யோசிக்கிறாப்ல இருந்துச்சு.

"லச்சுமணா"

திரும்பிப் பார்த்தான். "என்னா ராசண்ணே நீயும் வந்திட்டியா?"

"ஏன் சட்டுன்னு எறங்கி வந்துட்ட? இங்க எதுக்குச் சும்மா நிக்கிற?"னு கேட்டேன்.

"ஒண்ணுமில்லை ராசண்ணே. மனசு கஷ்டமா இருந்துச்சு."

"அட... சொல்றா லச்சுமணா என்னா

விசயம்?"

"என்னத்தைன்னு சொல்றது!" அப்படின்னான்... நான் அவனையே உத்துப் பாக்கவும் அப்புறம் மெல்ல சொன்னான்... "நான் உங்கிட்ட நிறைய விசயங்களை சொல்றதில்லை ராசண்ணே."

"என்னடா இருக்கா... என்னமோ முடிச்சு வச்சுப் பேசிக்கிட்டு..." வெயிலு எறங்கிக்கிட்டு இருந்துச்சு... அந்த வெளிச்சத்தில லச்சிமணன் மூஞ்சி பளீர்னு இருந்துச்சு...

"ம்... மனசுன்னு ஒண்ணு இருக்கில்ல ராசண்ணே, சின்னையன் பூஞ்சைப் பய... எல்லார்கிட்டயும் வெக்கத்தை விட்டுச் சொல்லி அழுதுட்டான். நானு... வைராக்கியகாரனாச்சே... ஒனக்குத் தெரியாதா?"

நான் பதறிப் போயி அவங்கையைப் புடிச்சேன்.



"ஒரு கம்ப்யூட்டர் வச்சு இன்ஸ்டிட்யூட் நடத்தும்போது நல்லாப் பேசுன ரமா, இப்ப நாலஞ்சு கம்ப்யூட்டர் அதிகம் வாங்கினதும் கண்டுக்க மாட்டேங்கிறா?"

"ஏன்?"

"அவளுக்கு 'மவுஸ்' ஜாஸ்தியாயிட்டுதாம்!"

— வி. சகிதா முருகன்.

"எலேய் லச்சுமணா, நெசமாவா?"

அவன் எங்கையைத் தன் கையால புடிச்சுக்கிட்டான்... எதுத்தாப்புல சீமைக் கருவேல வேலி முழுக்க கோவைக் கொடிக காடாய்ப் படர்ந்து கெடந்துச்சு...

"சின்னப் புள்ளைகள்ல எம்புட்டு கோவைப் பழம் திம்போம்"'னு கையை நீட்டினான் லச்சுமணன். கையிலிருந்த கம்பை நீட்டி கோவைப்பழத்தை அடிச்சுப் பாத்தோம். ஒண்ணுதான் எங்க பக்கம் வந்து விழுந்துச்சு... மத்ததெல்லாம் வேலிக்குள்ளயே விழுந்திருச்சு... வேலிக்குள்ள இடக்கிறதை எடுக்கலாமான்னு ஒரு எட்டு முன்ன வச்சேன். என் தோளைப் புடிச்சான் லச்சுமணன்.

"ஏன் ராசண்ணே இன்னும் எளந்தாரி நினைப்பா? கட்டாப்புக்குள்ள விழுந்துட்டோம்னா தூக்க நாதி இருக்காது. ஞாவகம் வச்சுக்க..."

நான் அவன் மூஞ்சியவே பாத்தேன். "என்ன இன்னைக்கி இப்பிடிப் பேசுறான்?"

"உம் மனசுல என்னமோ இருக்குடா லச்சுமணா..."

"இருக்குண்ணே... எம் மனசில இருக்கு... உம் மனசில இருக்கு... என்ன பண்றது அதுக்கு... இதென்ன தலைச்சுமையா? இறக்கி இன்னொருத்தரு கைமாத்தி விடறதுக்கு... அவுக அவுகதேஞ் சுமக்கணும்... என்னண்ணே சொல்றது?"

"சரி வா... ஓடையில போய் நின்னுக்கிட்டு அங்கிட்டுப் போவோம்" ரெண்டு பேரும் ஓடையை விட்டு வெளில வந்தோம்.

"இப்பிடியே கொஞ்ச நேரம் நடப்பமா?"

ரெண்டு பேரும் நடந்தோம். தோட்டத்து வழியா ஆத்துப் பக்கமா நடந்தோம். வழியில ஒரு தோட்டத்துல தக்காளி போட்டிருந்துச்சு... செகப்பு செகப்பா உருண்டை உருண்டையா பழுங்க கண்ணைப் பறிச்சுச்சு...

"நம்ம செவலை தோட்டந்தா..." அப்படின்னு சொல்லி வரப்பை விட்டு எறங்குனேன்... ரெண்டு பழத்தைப் பிடுங்குறதுக்குள்ள செவலை மகன் கத்திக்கிட்டே ஓடியாந்தான்.

"ஏய் பெரிசு... மருந்தடிச்சிருக்குய்யா... யோவ்" கிட்ட வந்து எங்க ரெண்டு பேரைப் பாத்ததும் சொன்னான்.

"ஏம் பெரியப்பா... பழத்தைப் பாத்தா, பிடுங்கித் தின்னுறானுமாக்கும்... நேத்துத்தான் மருந்து அடிச்சிருக்கு... தின்னுட்டு போய்ச் சேத்துராத. கீழே போடு."

நான் பதறிப் போயி பழத்தைக் கீழே போட்டுட்டு, கையை வேட்டில தொடைச்சிக்கிட்டேன்.

"கையை நல்லாப் போயிக் கழுவு."

அவன் போயிட்டான், நானும், லச்சுமணனும் நடந்து ஆத்தங்கரையில செத்த நேரம் ஒக்காந்திருந்தோம்... பொழுது சாஞ்சிருச்சு. மெல்ல நடந்தே மண்டபத்துக்கு வந்தோம். ரெண்டு பேருக்குமே பேச்சு வரலை... நான் மண்டபம் வந்ததும் கால் வலிச்சு ஒக்காந்தேன். லச்சுமணன் சொன்னான்.

"எதுக்கும் சங்கடப்படாதண்ணே... நான் வீட்டுக்குப் போறேன்."

மிக்காநாளு சாயங்காலம் லச்சுமணனை ஆத்தில இருந்து எடுத்தாங்க... மருந்தடிச்ச தக்காளிப் பழத்தைப் பசியாற சாப்பிட்டுட்டு, நூல் கயிறால தன் காலைக் கட்டிக்கிட்டு ஆத்தில எறங்கிப் பக்கத்து ஊர் நாணல் புதர்ல சிக்குற வரைக்கும் போயிருந்தான் லச்சுமணன். எல்லாரும் மேட்டில போட்டு அழுதாங்க. எனக்கென்னமோ அழுகை வரலை. அவன் மேல கோவந்தான் வந்துச்சு. அழுக்குணிப் பய. அவன் கால்ல கட்டியிருந்த கயிறை அவுக்கப் பாத்தாங்க... தண்ணியில இறுகி இருந்துச. இல்லேன்னாலும் அதை எப்பிடி அவுக்க முடியும்? அதை அவுக்கணும்னா அது அவனாலதானே முடியும்! ❍



# ஆஸ்கர் அழுகை!

ஆஸ்கர் விருதைப் பெறுபவர்களின் கண்களில் நீர் கரை கட்டிக்கொள்வதும், வார்த்தைகள் வெளிவராமல் தடுமாறுவதும் வாடிக்கையான காட்சிகள்தான். ஆனால் இந்த முறை சிறந்த நடிகைக்கான விருதைப் பெற்ற அமெரிக்க நடிகை ஹாலே பெர்ரி, தொடர்ந்து விடாமல் கண்ணீர் விட்டதையும், தேம்பியபடியே மூச்சு விடாமல் அவர் உணர்ச்சி வசப்பட்டு உரையாற்றியதையும் கவனித்தவர்கள் கொஞ்சமாவது வியப்படைந்திருப்பார்கள்.

ஆனால் அந்த நடிகையின் பின்னணியை அறிந்துகொண்டவர்களுக்கு அந்த வியப்பு தோன்றியிருக்காது.

க்லீவ்லாண்ட் பகுதியில் பிறந்து வளர்ந்தவர் இவர். வெள்ளையர்கள் நிரம்பிய அந்தப் பகுதியில் இவர் கலப்புமணம் செய்துகொண்டவர்களுக்குப் பிறந்தவர். அம்மா ஜூடித் வெள்ளையர். அப்பா ஜெரோம் ஓர் ஆப்பிரிக்கர்.

'வரிக்குதிரை' என்று சக பள்ளி மாணவர்கள் தம்மைக் கிண்டல் செய்யும்போது அங்கிருந்து ஓடிச்சென்று தனிமையில் இவர் அழுதது தொடர்கதை!

பள்ளியில் வெகு சூட்டிகையாக விளங்கினார். படிப்பு, இசை, விளையாட்டு போன்ற பல துறைகளில் முத்திரை பதித்ததால் பள்ளித் தலைவியானார். என்றாலும் அந்த முறை வேறொரு வெள்ளை மாணவியும் சக பள்ளி தலைவியாக ஆக்கப்பட்டாள்.

ஒரு கறுப்பர் இளப்பெண்ணுக்கு மட்டுமே இந்த கௌரவத்தைக் கொடுக்க சக மாணவர்களுக்கும் அவர்களின் பெற்றோர்களுக்கும் மனமில்லை என்பதே காரணம்.

பெற்றோரின் அன்பிலாவது திளைக்கலாம் என்றால் அதற்கும் விரைவில் வழியில்லாமல் போனது. அவர்களுக்கிடையே பிரிவு. மனநல மருத்துவமனை ஒன்றில் நர்ஸாகப் பணியாற்றிய அம்மாவுடன் கைக்கும் வாய்க்குமான வாழ்க்கையை நடத்திவந்தார் ஹாலே.

எனினும் அவரது வித்தியாசமான வனப்பு பலரது கவனத்தைக் கவர்ந்தது. ஆளாளுக்குச் சிபாரிசு செய்ததில் அழகிப் போட்டிகளில் கலந்து கொண்ட இவருக்கு, அடுத்தடுத்து வெற்றிக்கனிகள். 1986ல் 'மிஸ்

"பூமராங்" படத்தில் எடி மர்பியோடு நடித்தபோது பெரும் புகழ் பெற்றார் ஹாலே. 'சாலமன் - ஷீபா' படத்தில் இவருக்கு ஷீபா வேடம் அளிக்கப்பட்டதும் பலருக்கு வியப்பு. காரணம் வெள்ளையர் இனத்தைச் சேர்ந்த நடிகைளுக்குதான் இதுபோன்ற வாய்ப்புகள் அளிக்கப்பட்டிருந்தன.

இவ்வளவு சோகங்களையும் தடைகளையும் மீறி வந்ததில்தான் ஆஸ்கார் விருது பெறும்போது அப்படியொரு உணர்ச்சி வெள்ளம். வேடிக்கை என்னவென்றால், இனியும்கூட டீ.வி தொடர்களிலும் தொடர்ந்து நடிப்பாராம் இவர். "இதில் வேடிக்கைக்கு என்ன இருக்கிறது? நல்ல பாத்திரங்கள் எந்த மீடியாவில் கிடைத்தாலும் அதை ஏற்றுக் கொள்ள நான் தயார்" என்கிறார்.



ஹாலேக்கு ஆஸ்கர் பெற்றுத் தந்த 'மான்ஸ்டர்ஸ் பால்' திரைப்படத்திலும் அவருக்குச் சோகமான பாத்திரம்தான். அவரது கணவன் தூக்குத்தண்டனை பெறுகிறான். (அந்தத் தண்டனை நிறைவேற்றப்படும் நேரம் மன உணர்வுகளையெல்லாம் கண்களில் தேக்கியபடி ஓர் இயந்திரம் போல ஹாலே டீ.வி நிகழ்ச்சியைப் பார்க்கும் காட்சி விமர்சகர்களின் பாராட்டுதலைப் பெற்றது.) லெடீஷியா என்ற அந்தப் பெண்ணுக்குப் பத்து வயது மகன். மிகவும் பருமனாக இருக்கும் அவனும் தன் அம்மாவின் வாழ்க்கையை மேலும் சோகமாக்குகிறான். ஹோட்டல் ஒன்றில் வெயிட்ரஸாகப் பணிபுரியும் லெடீஷியாவின் கவனத்தைக் கவர்கிறான் ஓர் ஆடவன். தனது பணியை மகன் அடிக்கடி குத்திக் காட்டுவதால் வெறுப்புற்றிருக்கும் அவனுக்கும் லெடீஷியாவின் அண்மை மருந்தாக அமைகிறது. அவனது பணி என்ன? தூக்கு தண்டனை சரியாக நிறைவேற்றப்படுகிறதா என்பதைக் கவனிக்கும் மேலதிகாரி அவன் கரெக்ட், லெடீஷியாவுடைய கணவரின் மரண தண்டனையையும் அவன்தான் மேற்பார்வையிட்டவன்!

ஒஹையோ'வாகத் தேர்வு பெற்றார். உலக அழகிப் போட்டியில் அதே ஆண்டு மூன்றாம் இடத்தைப் பெற்றார். தொடர்ந்து பல மாடலிங் வாய்ப்புகள். விரைவில் அந்தத் துறை சலிப்பு தட்டவே சின்னத்திரை தொடர்களில் பங்கேற்றார். பிறகு மெல்ல மெல்ல பெரிய திரை வாய்ப்புகளும் வந்தன.

இவரது அழகு பல இளைஞர்களைத் திரும்பிப் பார்க்க வைத்தது. டேவிட் ஜஸ்டிஸ் என்ற கூடைப்பந்து வீரரைத் திருமணம் செய்துகொண்டார். ஆனால் மனவேற்றுமை காரணமாக 1996ல் அவரை விவாகரத்து செய்தார். (மணவாழ்வின் கசப்பான காலகட்டத்தில் ஒருநாள் அவரது இடது செவிப்பறை பெரிதும் பாதிக்கப்பட்டது!)

கடந்த இரு வருடங்களாக 'எரிக் பெனட்' என்ற இசைக்கலைஞரைக் காதலித்து வருகிறாராம் ஹாலே.

— ஜி.எஸ்.எஸ்.

## குருஜி ஏ.எஸ். ராகவன்

மலையும் மலை சார்ந்த இடமும் தமிழ் மரபில் குறிஞ்சி நிலம் என்று அழைக்கப் படுவது நமக்குத் தெரியும். வயலும் வயல் சார்ந்த இடமும் மருதம் என அழைக்கப் படுகின்றன. இந்த இரு நில அழகுகளையும் தனதாக்கிக் கொண்டது போன்ற நூதனப் பெயருடன் 'மருதமலை' என அழைக்கப் படும் ஸ்தலத்தில் முருகன் இரட்டிப்புப் பிர காசத்துடன் அருள்பாலித்துக் கொண்டிருக் கிறான். 'இருநில மீது எளியனும் வாழ எனது முன் ஓடி வரவேணும்' என அருணகிரி நாதர் பாடியதைப் புதுமையாய் அர்த்தம் செய்து கொண்டோமானால், இக-பர சுகங்களை வாரி வழங்க – இந் நிலத்திலும் மேலுலகிலும் சிறப்புற நாம் வாழ்வாங்கு வாழ ஓடி ஓடி அருள்புரிபவன் அழகன் முருகன்! அதற்கு சாட்சியாக அவன் குடி புகுந்த ஸ்தலம் மருத – மலை!

மருதமலையில் அவனைக் காண பாதை அமைத்துப் பேருந்து வசதி செய்திருக்கிறார் கள். கோவை நகருக்கு வடமேற்கே, வயல் களையும் விவசாயப் பல்கலைக்கழகத்தையும் கடந்து செல்ல வேண்டும். மருதம் கடந்து மலையை அடைந்தால், மேற்கு தொடர்ச்சி மலைச் சாரலில் ஒரு பகுதி. ஐந்நூறு அடி உயரம் ஏறிச் சென்றால், கோயில் கட்டு வதற்கென்றே இயற்கை அமைத்ததுபோல் அழகான அளவான சமதளம். சோமாஸ்கந்த மூர்த்தம் போல், இரு மலைக் குன்றுகளுக் கிடையேயான இந்தப் பள்ளத்தாக்கில் அமைந்துள்ளது மருதமலை முருகன் கோயில். வெள்ளியங்கிரி, நீலிமலை என மிகப் பொருத்தமான பெயர்கள் இரண்டு மலைக் குன்றுகளுக்கும்.

பாதை வழியே பேருந்திலும் போகலாம். நிதானமாய்ச் சூழலை ரசித்தபடி படி ஏறியும் போகலாம். ஏற ஏற, ஒரு புறத்தில் பார்த்தால் கோவை மாநகர காட்சி விரிந்து படர்ந் திருக்கிறது. இன்னொரு புறத்தில் முடிவின்றி மலைத்தொடர் நீடிப்பதுபோன்ற கம்பீர மான காட்சி.

படியேறிப் போனால் நாம் முதலில் காண்பது மயில் வாகனத்துடன் கூடிய ஓர் அழகான மண்டபம். 1915லேயே எம்.எம்.ஏ. சின்னப்ப தேவர் கட்டியதாக அறிகிறோம். வயலூரரை உலகறியச் செய்தது வாரியாரின் முயற்சி என்றால், மருதமலையை முருகன் பக்தர்கள் மனத்தில் நீங்காது இடம்பெறச் செய்தது சின்னப்ப தேவரின் முயற்சிதான். தேவரின் 'தெய்வம்' திரைப்படத்தையும் அதில் குன்னக்குடியின் இசையில் மதுரை சோமு பாடிய 'மருதமலை மாமணியே' பாட லையும் நினையாமல் மருதமலை சென்று வருவது இன்று தமிழர்களுக்குச் சாத்தியமே யில்லை! பல திருப்பணிகளை இக்கோயிலுக் குச் செய்திருக்கிறார் தேவர்.

படிகளில் தொடர்ந்து ஏறி இரண்டாவது மண்டபத்தை அடைந்தால், அங்கே தான் தோன்றி விநாயகர் மிகுந்த வனப்போடு காட்சி தருகிறார். அந்த பிரகாசமும் பொலிவும் மூலஸ்தானத்து முருகனின் பிரகாசத்துக்குக் கட்டியம் கூறி வரவேற் பதாக நமக்குத் தோன்றுகிறது.

இன்னும் சில படிகள் ஏறி அருணகிரி நாதர் மண்டபத்தைக் கடக்கிறோம். சமீ பத்திய (20 ஆண்டுகள் முன்பு கட்டிய)

# மருதமலை மாமணி!

தலம்தோறும் தமிழ்க்கடவுள் - 21

கட்டுமானம் இது. அகத்தியரின் சீடனான இடும்பன் காவடி தூக்கிய கோலத்தில் இங்கே காட்சி தருகிறான். திருப்புகழும், கந்தரலங் காரமும் கந்தரனுபூதியும் சுவர்களில் பதித்து எழுதப்பட்டுள்ளன.

மலை உச்சியில், மென் காற்றின் சுகத்தால் சதா அர்ச்சிக்கப்பட்டு நிற்கிறார் மருதப்பரான மருதலை முருகன். தண்டாயுத பாணியான இவரை 'மருதாசலக்கடவுள்', 'மருத மலையப்பன்' என்றெல்லாம் அழைத்து வழிபடுகின்றனர்.

கீர்த்தியையும் விலாசத்தையும் லாம். பழைய கோயிலில் மூலவரின் புராதனத் தோற்றம் காணக்கிடைக்கிறது. இவர் சுயம்பு மூர்த்தி என்கிறார்கள். வள்ளி, தெய்வானை சன்னிதிகள் இருக்கின்றன.

மூலஸ்தானத்திலிருந்து எங்கே சென்றா லும் முருகனின் பிரகாசம் கண்களையும் கருத்தையும் விட்டு அகலாமல் கூடவே வருகிறது.

மருதமலையமக அந்தாதி, மருதமலை அலங்காரம், மருதமலை சந்தப் பதிகம் போன்ற படைப்புகள் இத்தலம் குறித்து எழுதப்பட்டுள்ளன. 'ஈசன் கூறிய மருத மலைச் சிறப்பு' என்றொரு குறிப்பு திருப் பேரூர் புராணத்தில் இடம் பெற்றிருக்கிறது. (கோவை அருகே உள்ள பேரூரில், பழம்பெரும் ஈசுவரன் கோயில் இருக்கிறது.)



மகனுக்கு அளித்துவிட்டு அர்த்த மண்டபத்தில் அம்மையப்பர்கள் அமைதியாய் இருக்கிறார்கள். மார்க்கண்டேஸ்வரர், மரக தாம்பிகை என்று ஊர்ப்பெயருடன் பொருந்தும் ஒலிநயம் அமைந்த நாமங்கள் இவர்களுக்கு! வரதராஜ பெருமான் கூட இருக்கிறார்.

மூலஸ்தான முருகனைப் பார்த் துக் கொண்டேயிருக்கலாம் என்று தோன்றுகிறது. சன்னிதியிலிருந்து அகன்று நின்று அண்ணாந்தால் பொன் விமானம் சூரிய ஒளியில் தகதகப்பதைக் கண்கூசப் பார்க்க

'முருகன் தன் அன்பர்களுக்கு உதவி புரியும் பொருட்டு அழகிய அம்மலையாகி நின்றான். அவன் கைவேலும் மருதமரமாகி அங்கே வளர்ந்தது. பூக்கள் நிறைந்த வனங்களிடையே வண்டுகள் மருத கீதம் இசைக்கத் தொடங்கின. அந்த திவ்ய மலையில் மருத மரம் நிற்கும் குற்றமில்லாத ஒரு காட்சியிலே அது மருதமலை எனப் பெயர் பெற்றது!'

இன்றும் அந்த மருதமரத்தையும் அதன் அடிப்பாகத்தில் ஐந்து விதமான மரங்கள் தழைத்து வளர்ந்திருப்பதையும் காண் கிறோம். அந்த மரத்தினருகிலேயே அழகான சுனை ஒன்று இருக்கிறது. சிவபெருமானின்

திருமுடியை அலங்கரிக்கும் கங்காதேவி, பூவுலகில் குதித்து, இந்த மருத மரத்தின் வேர் வழியே பெருகி இத்தீர்த்தத்தை உண்டாக்கிய தாக புராணம். அத்தீர்த்த மகிமையைக் கேட்டவர்களே நற்கதி அடைவார்கள் என்கிறது புராணம்.

அதற்காக நாம் ஸ்தல வரலாறுகளைப் படித்து, புராணம் கேட்பதோடு நிறுத்தி விடப் போவதில்லை. மருத மலையை முழுமையாகச் சுற்றிப் பார்த்துத்தான் ஆக வேண்டும்.

பிராகாரத்தை வலம் வருகிறபோது பின்புற வாயிலிலிருந்து பாதை செல்வது தெரிகிறது. அதில் மீண்டும் மீண்டும் ஏறியும் இறங்கியும் நடந்து போனால் 'பாம்பாட்டிச் சித்தர் குகைக்குச் செல்லும் வழி' என்ற அறிவிப்புப் பலகை காணப்படுகிறது.



தமிழுக்கும் தமிழ் மக்களின் ஆரோக்கியத்துக்கும் நிறைய செல்வம் அளித்து விட்டுத் தாங்கள் மட்டும் வெட்டவெளியையே மெய்யெனக் கொண்டு வாழ்ந்தவர்கள் சித்தர்கள். அவ்வாறு வாழ்ந்த பதினெட்டு சித்தர்களுள் பெரும்பாலோர் முருகன் குடிகொண்ட மலைச் சாரல்களில்தான் மெய்ஞ்ஞானிகளாய்த் திரிந்தார்கள்!

பழனி முருகன் உருவத்தை, தமது யோக வன்மையினால் நவபாஷாணங்களைக் கொண்டு அமைத்தவர் போகர் என்ற சித்தர் தான். பழனி கோயிலில் தென்கிழக்கு பாகத்தில் போகருக்கு ஆலயமும் அவர் பூஜித்த விக்ரஹங்களும் அவரது சமாதியும் இருப்பதைக் காணலாம்.

பழனிக்கும் போகருக்கும் உள்ள தொடர்பு போன்றதுதான் பாம்பாட்டிச் சித்தருக்கும் மருத மலைக்குமான தொடர்பு. சட்டை முனி என்பவரிடம் தீக்ஷை பெற்றவர் பாம்பாட்டிச் சித்தர். சமாதி நிலையில் அவர் அடங்கியிருந்தபடியே பல சித்துக்கள் செய்தார். மாண்டுபோன அரசனின் உடலுக்குள் புகுந்து உயிர்ப்பித்துக் காட்டினார்; செத்த பாம்பை எழுந்து ஆட வைத்தார். இதனால் இவருக்குப் பாம்பாட்டிச் சித்தர் என்று பெயராகிவிட்டது.

முருகனை நோக்கி மருத மலைச் சாரலில் தவம் செய்தார் பாம்பாட்டிச் சித்தர். தவ வலிமையினால் என்ன செய்ய முடியும் என்று உலகுக்கு உணர்த்த அவ்வப்போது சித்துக்களில் ஈடுபட்டார்கள் இவரைப் போன்ற பெரியோர்கள். ஆனால் அவர்கள் விட்டுச் சென்றுள்ள நிரந்தரச் செல்வம் வைத்திய நூல்களும் ஞானப் பாடல்களும் தான். அவருடைய இந்த ஒரு பாடலே அட்சர லட்சம் பெறும் அல்லவா!

*"தந்திரம் சொல்லுவார்*
*தம்மை யறியார்*
*தனிமந்திரம் சொல்லுவார்*
*பொருளை அறியார்*
*மந்திரம் செபிப்பார்கள்*
*வட்ட வீட்டிலுள்*
*மதி லினைச் சுற்றுவார்*
*வாயில் காணார்*
*அந்தரம் சென்று மே*
*வேர் பிடுங்கி*
*அருள் எனும் ஞானத்தால்*
*உண்டை சேர்த்தே*
*இந்த மருந்தினைத்*
*தின்பீ ராகில்*
*இனிப் பிறப்பு இல்லை*
*என்று ஆடுபாம்பே."*

இறைவன் தியானமும் அதன் மூலம் பெறும் அவன் அருளும் பிறவிப் பிணிக்கான உத்தரவாதமான மருந்துருண்டை என்பதை எத்தனை ஆணித்தரமாகச் சொல்கிறது இப்பாடல்! ○



● 'நம் நாட்டில் ஒவ்வொரு நாளும் சுமார் முந்நூறு குழந்தைகள் இதய நோயுடன் பிறக்கின்றன. மிகவும் ஏழ்மை நிலையில் உள்ளவர்களில் ஆயிரத்தில் ஒருவர் ரியூமேட்டிக் இதயநோயால் பாதிக்கப்படுகிறார்...' சமீபத்தில் பெங்களூரில் ஹார்ட் வால்வ் சர்ஜரி'பற்றி பத்து நாட்களுக்கு நடந்த வொர்க்ஷாப்பில்தான், இத் தகவல்களை அமெரிக்காவிலிருந்து வந்திருந்த 'சில்ரன்ஸ் ஹார்ட் லிங்க் (CHL) என்ற நிறுவனம் கூறியிருக்கிறது. சி.ஹெச்.எல் இதற்கு முன்னும் பலமுறை இந்தியா வந்திருக்கிறது.



12 டாக்டர்கள் கொண்ட இவர்களது குழு பெங்களூரிலிருக்கும் நாராயண ஹ்ருதயாலயாவில் குழந்தைகள் மற்றும் ஏழை நோயாளிக்கு இதய அறுவை சிகிச்சைச் செய்து கொண்டிருக்கிறது. வால்வ் பழுதடைந்து அல்லல்படும் நோயாளிகளுக்கு வெற்றிகரமாகச் சிகிச்சையளித்து வருகிறார்கள், டாக்டர் தேவி ஷெட்டி; அமெரிக்க டாக்டர்களை வெகுவாக நன்றியுடன் பாராட்டுகிறார். "செயின்ட் ஜூட் வால்வ் கம்பெனி 50 வால்வ்களை இலவசமாக வழங்கியிருக்கிறது. அமெரிக்க டாக்டர்கள் தங்களுடன் ஏகமாக மருத்துவ வசதிகளும் கொண்டு வந்து அளித்திருக்கிறார்கள்" என்கிறார். இவர், ஏற்கெனவே பல ஏழை இதய நோயாளிகளுக்குச் சிகிச்சையளித்து வந்திருக்கிறார். நல்லிதயம் படைத்த இதய அறுவை சிகிச்சை நிபுணர்!

● விளக்குகள் ஒரு பக்கம் எரிந்து கொண்டேயிருக்கிறது எண்ணெய் இல்லாமலேயே. ஆனால் பெங்களூரிலோ பயங்கர பவர்கட். பரீட்சை நேரத்தில் மாணவர்களுக்கு அவஸ்தை. பீக் அவரில் தினமும் நான்கு மணி நேரம் கரண்ட் கட் செய்யப் படுகிறது. கர்நாடகாவில் ஆறு மில்லியன் யூனிட் பற்றாக்குறையாம்! விடுவார்களா மாணவக் கண்மணிகள்? தங்கள் கோபத்தை, கர்நாடக மின்சாரத் துறை அலுவலகத்திற்குக்கெதிரே கூடி வெளிக்காட்டினார். இந்தப் பிஞ்சுகள் மனத்தில் ஒரு நிம்மதி? 'கொஞ்சம் மார்க் அப்படி, இப்படி வந்தால் கரண்ட் மீது பழியைப் போட்டுத் தப்பித்து விடலாமே?

# ப்ளாஸ்டிக் ரோடு!

● ரோட்டோரங்களிலும் குப்பைத் தொட்டிகளிலும் அம்பாரமாகக் குவிந்து கிடக்கும் ப்ளாஸ்டிக் பொருள்களை ஒரு வழிப் பண்ண, பெங்களூரில் ஒரு தீர்வு கண்டுபிடித்திருக்கிறார்கள். ரோடு போடுவதற்குத் தேவைப்படும் பல மூலப் பொருட்களில் இனி ப்ளாஸ்டிக்கும் ஒன்றாக இருக்கப் போகிறது. ஒவ்வொரு நாளும் எட்டிலிருந்து பத்து டன் ப்ளாஸ்டிக் குப்பைகள் குவிகிறதாம். இதனால் சுற்றுப்புற சூழல் உட்பட ஏகப்பட்ட தொல்லைகள்.

இதற்குத் தீர்வு காண ஆய்வுக்கூடங்களில் பரிசோதனைகள் செய்யப்பட்டன. ப்ளாஸ்டிக்கை கலந்து போடப்படும் ரோடுகள் இன்னும் ஸ்ட்ராங்காக இருக்கும் என்கிறார்கள். முதல்வர் எஸ்.எம். கிருஷ்ணாவும் இதற்கு ஒப்புதல் அளித்துவிட்டார். சாலை ரிப்பேர்கள் குறைந்து விடுமாம். செலவும்.

- லதா சேகர்

**அண்டை வீட்டு வம்பு**

**'வில்லேஜ் சப்ஜெக்ட் அண்ணே!' என்று தத்தம் கதைகளை 'ஓபன்' செய்யும் இளம் இயக்குநர்களுக்கு உதவ, இதோ சில ஃபார்முலா விஷயங்கள்... இதை மாடலாக வைத்துக்கொண்டு, மிச்ச கதையைச் சிரமமில்லாமல் நிரப்பிக் கொள்ளுங்கள்!**

***திருவிழா:*** ஊரில் இதே பேச்சாய் இருக்கும். கட்டாயம் கதாநாயகனை வாழ்த்திப் பாடுவார்கள். ஊர் முச்சூடும் பார்த்தாலும், எந்தக் கவலையும் இன்றி நாயகனும் நாயகியும் காதல் செய்வார்கள். ஆனால் ஒருவருக்கும் இவர்கள் காதல் தெரியாது.

***முறைமாமன்:*** எல்லாக் கெட்டப் பழக்கமும் இவனுக்கு இருக்கும். கதாநாயகியைக் கட்டியே தீருவேன் என்று ஒற்றைக் காலில் நிற்பவன்.



# ஹா... மண்வாசனை!

***முறைப்பெண்:*** ஒருதலையாய் கதாநாயகனைக் காதலிப்பவள். தங்கையாகத்தான் நினைத்தேன் என்று ஹீரோவால் சொல்லப்படுபவள். பண்ணையார் ஹீரோவைக் கொலை செய்ய வரும்போது இடையில் புகுந்து, கதாநாயகனைக் காப்பாற்றிவிட்டு இறந்துபோவாள்.

***பெரிய பண்ணை:*** தொப்பை வயிற்றுடன், சில்க் ஜிப்பா அணிந்து, குறைந்தது முப்பது பவுன் நகையாவது அணிந்திருப்பார். ஒரே ஒரு பையனை அல்லது பெண்ணை செல்லமாக வளர்ப்பார். அவர்கள் 18 வயது வரை ஃபாரினில் படித்துவிட்டு ஊர் திரும்புவார்கள். இவர் அவசியம் சின்ன வீடு வைத்திருப்பார். இவரைச் சுற்றி அடி ஆட்கள் இருப்பார்கள்.

***சின்னப் பண்ணை:*** ஊரில் உள்ளவர்கள் எல்லோரும் வேலை வெட்டியை விட்டு விட்டு இவரைக் கும்பிடுவார்கள். எளிமையாக இருப்பார். பெண்களைக் கிண்டல் செய்பவர்களைப் புரட்டிப் புரட்டி எடுப்பார். 40 வயது ஆனாலும் கல்யாணம் ஆகாமல் இருப்பார். பாட்டிகளுக்குச் சேவை செய்வது இவர் வேலை.

***ஆத்தா:*** இவள் கண்டிப்பாக விதவையாகத்தான் இருப்பாள். கதாநாயகன் பாஸான செய்தியை முதலில் இவரிடம்தான் ஓடி வந்து சொல்வார்.

***நாட்டாமைக்காரர்:*** ஊரில் ஏதாவது தகராறு என்றால் வந்து தீர்ப்பு கூறுவார். இவரை விட இவர் துண்டை அதிகம் ஊரார் மதிப்பார்கள். பிரச்னை இல்லை என்றால் இவரே பிரச்னை செய்வார்.

***பட்டாளத்தான்:*** பண்ணையாரை எதிர்ப்பவன். யூனிஃபார்மோடு ஊருக்குள் வருபவன். காதலர்களைச் சேர்த்து வைத்து தன் காதலைத் தியாகம் செய்வான்.

***தம்பி:*** எப்போதும் 'அண்ணே' என்று கூப்பிட்டுக்கொண்டிருப்பான். கொஞ்சம் முன்கோபக்காரன். அண்ணன் கட்டளைக்காகக் காத்திருப்பவன்.

***பாழடைந்த பங்களா:*** இதன் அருகில் தான் கதாநாயகி குளித்துவிட்டு அரைகுறையாய், நேரம் கெட்ட நேரத்தில் நடந்து வருவாள். இவள் எந்த யுகத்திலோ தன் முகத்தில் காரி உமிழ்ந்ததை மறக்காமல் பல்லைக் கடித்தபடி அங்கே காத்திருப்பான் ஒரு முரடன்.

**— அ. செந்தமிழ்**

ஸ்ரீ கிருஷ்ணா ஸ்வீட்ஸ் ®

அறிமுகப்படுத்தும்

# கல்யாண சீர்பலகாரங்கள்



**எல்லா சீர்பலகாரங்களையும் வகைக்கு ஒன்றாக வைத்து அதற்காகவே வடிவமைக்கப்பட்ட அழகிய சீர்பலகார பெட்டிகளில் வழங்குகிறோம்.**

**பரிசளிக்க, சீர்வரிசைக்கு புதுமையானவை.**

ஸ்ரீ கிருஷ்ணா ஸ்வீட்ஸ் ®

பாண்டி பஜார், சென்னை. போன் : 4312345

காந்தி நகர் முதல் மெயின் ரோடு, அடையார், சென்னை. போன் : 4413805

அண்ணாநகர், சென்னை. போன் : 6192345

DIMENSIONS

● எஸ்.ஷங்கரநாராயணன்

# ஆகாயத்தில் முட்டிக் கொண்டேன் 2

சாராயக்கடை, காயம் பட்டவர்கள் முதலுதவி தேடும் இடம். உடல் காயம் அல்ல. மனக் காயம்...

மக்கள் திட்டுத் திட்டாய் உட்கார்ந் திருந்தார்கள். எழுந்தால்கூட அந்தச் சுமைகள் அவர்களை நடக்க விடவில்லை. வளாகமே மிரண்டு கிடந்தது. சுற்றிலுமான தோர் கருங்கோட்டை. வார்த்தைகள் விக்கித்த, சப்தங்கள் கடப்பட்ட மௌனம்.

இலேசான மழையிருட்டு. சற்று அழுத முகமான இருட்டு. புயலுக்கு முந்தியும் அமைதி... பிந்தியும் அமைதி... அங்கே வந்திருந்தவர்கள் வாழ்வில் புயல் அடித்து ஓய்ந்திருக்க வேண்டும். அல்லது புயல் வரும் அபாயத்தில் அவர்கள் மிரண்டிருக்க வேண்டும்.

நாடியில் அடிபட்டிருந்தது ஒருத்தனுக்கு. என்ன நடந்ததோ? நாடிச் சில்லில் இருந்து ஒழுகி வெளியே சிவப்பாய் அடையாளம். எங்காவது குத்திக் கொண்டானா? கீழே விழுந்து விட்டானா? இல்லை, வம்பை விலைக்கு வாங்கிக் கொண்டு, யாருடனா வது மோதி, தோற்று வந்தானா? வலியின் தெறிப்பு தெரியாமல் போதையில் சரிந்து கிடந்தான். அருகே பாட்டில். அவனது உற்ற துணைபோல, குழந்தைபோல... கல்லாவில் இருந்தவன், "அந்த நாயைத் தூக்கி ஓரமாப் போடு" என்கிறான். இரண்டு பேர் தரதர வென்று இழுத்து ஓரமாய் அவனைத் தள்ளுகிறார்கள். நல்ல வெள்ளை வேட்டி. வெள்ளைச் சட்டை... கைமடிப்பு துருத் தலாய்... உள்ளே பணம் வைத்திருக்கலாம். 'ஹ்ரும்...' என்று விநோதமான சப்தம் அவ்வப்போது அவனிடமிருந்து எழுந்தது. வலியின் முனகலா, கனவுகளின் ஏமாற்றமா, அதிர்ச்சி தாள முடியாத, நம்பிக்கைத் துரோகம் தாள முடியாத மருட்சியா? ஹா ஹா என்ற மூச்சுப் படபடப்புடன் அவன் நெஞ்சு ஏறியேறி இறங்குகிறது.

பெஞ்சில் உட்கார்ந்திருக்கிற இன் னொருவன் பாட்டிலின் திரவத்தையே உறுத்துப் பார்த்தபடி இருக்கிறான். அடிக்கடி உதட்டை உதட்டைப் பிதுக்கு கிறான். தன்னைப் போல கண்கள் அழுகின்றன. பேச்சில்லை. அவன் மகன் செத்துப் போயிருக்கலாம். கோர்ட்டில் அவன் வழக்குத் தோற்றுப் போய் நஷ்டப் பட்டு வந்திருக்கலாம். அவன் வியா பாரம் படுத்திருக்கலாம். போச்சே... எல்லாம் போச்சே... என்கிறாப் போல கையைக் கையை விரிக்கிறான்.

ஏற்கெனவே குடித்திருந்த ஒருவன் உள்ளே நுழைந்தான். இந்தப் பக்கமும் அந்தப் பக்கமுமாக ஒரு நடை. வேட்டி தடுக்கத் தடுக்க ஒரு நடை. அவன் முட்டாழம் வரை வந்திருந்தது துயரம், வாய்க்கால் தண்ணி போல. சற்று நின்று சுற்று முற்றும் பார்த்தான். யாரைத் தேடு கிறான் அவனுக்கே தெரி யாத வெற்றுப் பார்வை. சிவந்த வெறியேறிய கண்கள். பெரிய தோள்த்துண்டு. மனசில் அர சியல்வாதியான



தோரணையில் அவன் ஆவேசப்பட்டிருக்கலாம். அல்லது அவனே அரசியல்வாதி தானோ என்னவோ? ஒரு வழியாய், சாராயம் ஊற்றுகிற மேடையைக் கண்டு கொண்டாற் போலத் தெரிகிறது. மீண்டும் வாய்க்கால் கடந்து வந்து ஓரத்தில் அடுக்கியிருந்த கண்ணாடித் தம்ளர்களில் ஒன்றை எடுத்து - என்ன ஆத்திரமோ? - "ஊத்து" என்கிறான் ஆவேசமாய் வைத்தபடி...

கடைக்காரப் பையன் "துட்டு வெச்சிருக்கியா?" என்கிறான்.

"துட்டா?" - "ம்" - "எதுக்குத் துட்டு?" - "பின்ன சரக்குக்குத் துட்டு? எவந்தருவான்? கொப்பனா தருவான்?" என்கிறான் கடைக்காரன். இப்போது பல்லக்கு அங்கேயிருந்தே ஆடியபடி கல்லாப்பக்கம் திரும்புகிறது. "ஏய் காசுதான வேணும்? நாளைக்கு வாங்கிக்க..." மீண்டும் பல்லக்குச்சாமியின் தலை இந்தப் பக்கம். "நீ ஊத்துறா..." என்கிறது. பையனிடமிருந்து பதில் இல்லை.

வந்தவனுக்கோ நிற்க முடியவில்லை. தள்ளாடுகிறது. மூச்சுத் திணறுகிறது. திடீரென்று அவன் அழுதாப்போல பையனைப் பார்க்கிறான். "தம்பி, ஒன்னியக் கெஞ்சிக் கேட்டுக்கறேன். நான் ஏற்கெனவே நொந்து போய் வந்திருக்கேன்..." என்றவன் தள்ளாடி, அப்படியே நெஞ்சு துடிக்க "பூட்டா அவ... ஆரு? என் சம்சாரம். அந்தத் தெருநாய்... கோவிந்து... நண்பனா அவன்? த்தூ... போ, போயிரு. நல்லா இரு. வராதே..." என்று கையால் விரட்டி ஆசிர்வதிக்கிறான். "தம்பி, புண்பட்ட மனத்தைப் புனுகு தடவி ஆத்தணுண்டா. என்னைக் கைவிட்றாதே... நீ ஊத்து."

"துட்ட எடு." - "ஆர்ட்ட இருக்கு தம்பி துட்டு?" என்றவன், கல்லாப் பெட்டியிடம் திரும்பி "என்ட்ட துட்டு இருந்தா அவ ஏன் ஐயா ஓடிப் போறா?" என்கிறான். "ஹா!



துட்டு இருந்தா, ஒரு பெண்டாட்டி என்ன? ஆயிரங் கெட்டலாம்... நீ ஏண்டா வேடிக்கை பாக்கறே பையா. நீ ஊத்து!'

கொஞ்ச நேரம் வெட்டியாய் நின்றபடி அவன் சாமியாடுகிறான். பெரிக பெரிசான சிறல் மூச்சுக்கள். திரும்பி வாய்க்கால் நடையில் நடந்து ஏமாற்றமாய்ப் போனவன் பெஞ்ச்சில் கவிழ்ந்திருந்தவனைப் பார்க்கிறான். அவனையென்றால் அவனையல்ல. அவன் அருகே தம்ளர். திரும்ப முட்டாழுத் தண்ணீரில் நடை.. யாருமே எதிர்பாராமல் அந்த தம்ளரின் மிச்சச் சாராயத்தை அப்படியே எடுத்து உயரத் தூக்கிக் கவிழ்த்துக் கொள்கிறான். கடைக்கார சிப்பந்திகள் பாய்ந்து வந்து தம்ளரைப் பிடுங்கி வைக்கிறார்கள். அதில் ஒருவன் நாக்கைத் துருத்தி ஆத்திரத்துடன் அவனை ஓர் எத்து விடுகிறான். வாய்க்கால் தண்ணியில் பொத்தென விழுகிறான் வந்தவன்.

வண்ணை சிங்கராஜ் நுழைகையில் நிலைமை சிலாக்கியமாய் இல்லை. குடிக்கிற பரபரப்பில் நாயைக் கூட மறந்து உள்ளே வந்து விட்டான். உள்ளே சாராயம் விற்றுத் தீர்ந்துவிட்டால்?... என்று அவசரப் பட்டாப் போல.

நாய் உள்ளே எட்டிப் பார்த்தது. கூரைக்கு முட்டுக் கொடுத்த மூங்கில் கழியில் சாய்ந்தபடி மேலே பார்த்துக் கொண்டிருந்தான் ஒருத்தன். அருகே தட்டில் என்னவோ அசைவ பதார்த்தம். சிவப்பாய் தெளிதெளியாய்...

வெளியே தயங்கி நின்ற நாய் ஒரு வினாடி சுற்று முற்றும் கவனித்துக் கொண்டது. யாரும்

> **''ஸ்டேஷன் பிளாட்ஃபாரத்தில் நின்னு இத்தனை பெரிசா பெருமூச்சு விடாதேன்னு சொன்னா கேட்கறியா?''**
>
> **''ஏன், என்ன ஆச்சு?''**
>
> **''ரயில் கிளம்பிட்டுதுன்னு தப்பா நினைச்சு எல்லாரும் அவசரம் அவசரமா ஏறறாங்க!''**
>
> **- பார்வதவர்த்தினி**

கம்பு கிம்பு வெச்சிருக்காளுகளா?... உள்ளே பாய்ந்து வந்து அந்தக் குடல்கறியை ஒரே கவ்வலில் கவ்வி - சீன மந்திரவாதியின் நீளத்தாடி போலத் தொங்குகிறது குடல் - வெளியே ஓடுமுன் எதிர்பாராமல் கடையாளுகளால் சுற்றி வளைக்கப்பட்டது. எங்கேயிருந்து கம்புடன் முளைத்தார்கள்? ... திணறிவிட்டது. சரியான அடி. நச்சி எடுத்துட்டானுங்க.. வாள் வாள் என்று கதறித் துடித்தது நாய்.

"ஐயா வாயில்லா சீவனுங்க..." என்று பதறியோடி வந்தான் வண்ணை.

"திருடித் திங்கத் தெரியுதில்லே?"

எப்படியோ யார் தொடையடியிலோ பாய்ந்து புகுந்து வெளியே அது ஓடினாலும்... வெளியே சக நாய்களுடன் இன்னொரு மோதல். கல்லெறி பட்டு ஓட்டமெடுத்தன நாய்கள்.

ஏற்கெனவே போதையில்லாமலே போதை மயக்கத்தில் இருந்தான் வண்ணை. இப்போது அழுகை முட்டியது. ஓர் அப்பாவி நாயை இப்படி அவன் கண்முன்னே அநியாயத்துக்குப் போட்டு அடி பிச்சியெடுத்து விட்டார்கள். கோபமாய் எகிறலாம் என்று பார்த்தால் மீசையும் கம்புமாய்க் கிங்கரர்கள் போல நிற்கிறார்கள்... வாயைத் திறந்தால் உனக்கும் விழும். வேண்டாஞ் சாமி.

"டேய் ஊத்துறா..." என்கிறான் மேடைக்குப் போய். "நல்ல சரக்கா உடை.. போன தபா நீ கொடுத்தது கிக்கே பத்தல.."

"அண்ணே, வரும்போதே மப்பா?"

வாயை மூடிக் கொள்ள வேண்டியதாயிற்று.

தலையைக் குனிந்தபடி அப்படியே பெஞ்ச்சில் கிடந்தவனின் அருகில் போய் உட்கார்ந்த கணம், அவனிடம் திடீர் அசைவு. பூகம்பக் குலுக்கல். 'உவ்வே' என்று அதிர்ந்து வந்தது அவனுக்கு.

''வாந்தியெடுத்துத் தொலைக்கப் போறான்... அவனைத் தூக்கு... தூக்கு!''



சிறு பையன் ஓடி வந்து அவனைத் தூக்குமுன், ஓங்கரித்து அவன் வாந்தியெடுத்தே விட்டான்.

இனி இதைச் சுத்தம் செய்ய வேண்டும், என்று பையனுக்கு எரிச்சல்.

தம்ளருடன் சடாரென்று எழுந்து கொண்டான் வண்ணை. சுற்றுமுற்றும் தேடினான். வேறிடம், பாதுகாப்பான இடம் எதுவும் இருக்கிறதா? யாரையும் நம்புதற்கில்லை. எப்போதும் எந்த அபாயமும் நிகழலாம் என்றான பூமி இது. எதற்கும் உத்தரவாதம் இல்லை.

போனமுறை சரக்கு வாங்கிக் கொண்டு வந்து உட்கார்ந்தான். திடீரென்று நாலுபேர் உள்ளே பாய்ந்து வந்தார்கள் இவனை நோக்கி. கையில் கம்பும் கத்தியும், கண்ணில் வெறியும் ஆத்திரமும்.. நேரே இவனை நோக்கி ஓடி வரவும் பகீரென்றது.

இவனருகே உட்கார்ந்திருந்தவனைப் பாய்ந்து சட்டையைப் பிடித்திழுத்து அடி... அடியான அடி... கடையாட்கள் சுதாரித்து அவர்களைப் பிடித்திழுத்துப் பிரிப்பதற்குள் பெரும் ரகளையாகிவிட்டது.

சமாதானத்துக்குத்தான் என்று நினைத்தால், அடி வாங்கியவனையும் வந்தவனுகளையும், "வெளியே போங்க வெளிய போங்க..." என்று தள்ளிக் கொண்டு போனார்கள் - அவ்வளவுதான் அவர்கள் அக்கறை.

இந்த விவகாரத்தில் வண்ணை வாங்கிய சரக்கு முழுவதும் தரையில் கொட்டி, தம்ளருக்கு வேறு அவனே தண்டம் அழுது விட்டு வந்தான். இல்லாட்டி உதை விழும்!

கூடம் முழுதும் விரக்தி விரவிக் கிடந்தது. பெண்டாட்டி செத்து, பிணம் வந்து சேராத அன்றைய இரவின் வெறுமை இப்படித்தான் இருந்தது...

பயம். திகைப்பு. அழுகை. உள்ளே கலகமாய்க் கிடந்தது. நட்சத்திரமே இல்லாத இருண்ட வானம்.

பூகம்பம் வந்து... எல்லாமே இழந்தாற் போல, எதுவுமே மிச்சமில்லை போல. சிற்றெறும்பைக் கிண்ணத்துள் கவிழ்த்து அடைத்தாற்போல.

உடம்பின் தெம்பே வற்றி விட்டது. இரத்த ஓட்டமே உலர்ந்துவிட்ட பெரும் சோர்வு.

எனக்கு அன்பாய் ஆதரவாய் யாருமில்லை. யாருமே இல்லை...

இப்போதும் அதே திகைப்பும் திக்கு முக்காடலுமாய் இருந்தது. தாள முடியாத தனிமை அவனை அம்புபோல் ஒட்டையிடுகிறது. முள்மரம் ஒன்று முளைத்து உள்ளே தலைசிலுப்பி ஆடுகிறது. நறுக் நறுக்கென்று உள்ளே குத்துகிறது.

அழுகை முட்டிக் கொண்டு வந்தது. தனியே எப்படி அழ? யாராவது இருந்தால் கட்டிக் கொண்டு கரைக்கலாம். கரையலாம்...

மனம் விட்டுப் பேச பழக, யாரையாவது சிநேகம் பிடிச்சிக்க... என்றது சூட்சுமம். இந்த நாய்களில் யாரை நம்புவது? பாட்டிலைப் பார்த்தான். தம்ளரைப் பார்த்தான். சட்டென்று பாட்டிலை உடைத்து ஊற்றிக் கொண்டான். அப்படியே முழு மூச்சாய் ஆவேசமாய் உள்ளே கொட்டிக் கொண்டான். கடும் வறட்சி தாகத்தில் இருந்தாற்போல ஆவேசமாய்க் குடித்துவிட்டு டங்கென்று தம்ளரை வைத்தான். உள்ளெல்லாம் எரிந்தது. தொண்டையெல்லாம் எரிந்தது. கடும் புளிப்பு. நெஞ்சைத் தடவிக் கொண்டான்.

கூடம் ஈ மொய்த்துக் கிடந்தது. தரையில் ஒரு மிக்சர் பொட்டலம். ஒரு பாட்டில் உருண்டு கிடந்தது. மூலையில் சற்று நீள சைஸ் பாட்டிலைப்

போலவே ஓர் இந்நாட்டு மன்னன். குழல் விளக்கு ஒன்று எரிந்தும் எரியாமலும் மக்கர் செய்தது. குடிகார மூளைபோல.

அப்போதுதான் அந்தக் கிழவியைப் பார்த்தான்.

சிக்குப் பிடித்த உடை. எண்ணெய் காணாத தலை. வெறுமையான கண்கள் தலையை வறட் வறட்டென்று சொறிகிற தைப் பார்த்தால் நம்ம தலையே புண்ணா யிரும் போல. அத்தனை வெறுப்பு இருந்தது அந்தச் சொறியலில். வெள்ளைத் தலை. கற்றாழை நாரென முடிக்கற்றை.

சிங்கராஜ் அவளை நோக்கித் தள்ளாடிப் போனான். அவள் எதிரே நின்றான். அவளைப் பாத்தான்.

"துன்றதுக்கு எதுனா வேணுமா?' என் றான் சிங்கராஜ். "வேணாம்.."

''வேணாமா?'' என்றான் ஆச்சரியத் துடன். ''பின்ன ஏன் இங்க நிக்கற... வீட்டுக்குப் போ..'

'வீடு இல்ல,'' என்றாள் அவள். அவனுக்குத் தூக்கிவாரிப் போட்டது.

போதையே அடங்கிவிட்டது போல உணர்ந்தான்.

அவளையே பார்த்தான். வற்றி உலர்ந்த ஈ மொய்க்கிற கண்கள். உடம்பெங்கும் காலம் உழுத வரிகள். பாயைச் சுருட்டினால் போல உடம்பு.

"உனக்கு இன்னா வோணும்?" -

"சாராயம் வாங்கிக் குடு..."

"என்ன சொல்ற?" என்றான் அயர்ந்து போய். அவள் ஈயென்று இளித்தாள்.

"மாட்டேன்...'' என்று தலையாட்டி மறுத்தான்.

"நீ போ பின்ன பேசாம.. பெரிசாப் பேச வன்ட்டான்."

"வா இட்லி வாங்கித் தாரேன்."

"வேணாம். நீ போ."

"ஏ கெழவி நான் சொல்றதக் கேளு.."

"போடா."

"சரி, உனக்குச் சரக்கு வாங்கித் தரேன்." என்றான் சிங்கராஜ். அவள் திரும்பவும் சிரித்தாள். சந்தோஷமாய் இருந்தது அவள் சிரிப்பதைப் பார்க்க.

ரொம்பப் பழகியவள் போல கிழவி தம்ளரைக் கூட எடுத்துக் கொள்ளாமல் பாட்டிலோடு அப்படியே கடகடவெனக் கவிழ்த்துக் கொண்டாள். ஆச்சரியமாய் இருந்தது.

"நீ மவராசனா இருக்கணும்..." என்றாள் வாயைத் துடைத்தபடியே... "பாக்க நீ எம் மவன் மாதிரிக் கிற..."

"உம் மவன் என்ன செய்யிறான்?"

"செத்துட்டான்" என்றாள் அவள். கசப்பு வழிந்தது அந்தக் குரலில்.

அதிர்ச்சியாய்ப் போனது அவனுக்கு. "அப்ப சோத்துக்கு என்ன பண்ணுற?"

''அதையேன் கேக்குற? நீ நாஷ்தா வாங்கித் தரப் போறியா?"

சட்டென்று திரும்பி அவளைப் பார்க்க நின்றான். "தர்றேன்..." என்றான் அவன்.

''நீயென்ன எம்ஜியாரா?'' என்று திரும்பவும் சிரித்தாள். சிரிக்கையில் அவள் எவ்வளவு அழகாய் இருந்தாள்!

''எங்கூட வர்றியா நீ?'' என்றான் திடீரென்று.

"எங்க?"

"என் வீட்டுக்கு..."

"வேணாம்.."

"ஏன்?"

"ஒம் பொஞ்சாதி திட்டும்..."

"எனக்கு யாருமே இல்ல..." என்றான் அவன். அதற்குள் அழுகை வந்து விட்டது. அவள் அழவில்லை. அவனையே பார்த்த படி நின்றிருந்தாள்.

"நான் ஒன் மவன்தானே?" என்றான் சிங்கராஜ். அவள் பதில் சொல்லவில்லை. ''அப்ப என்கூட வா'' என்று அவள் கையைப் பிடித்து இழுத்தான் அவன்.

(தொடரும்)

---

**''மகளிர் இட ஒதுக்கீடு' பற்றி அடிக்கடி பேசறது தப்பா போச்சு..."**

**''ஏன்?''**

**''என் பொண்ணு ஒவ்வொரு பாடத் திலேயும் 33 மார்க்குக்கு மேல வாங்க மாட்டேங்கிறா!''**

**- நாமக்கல் பாலு**





"சுருதி சுத்தமா பாட ஒரு பயல் கிடையாது!" சவால் விட்டார் சாமி நாதபுரம் செளந்தரராஜன். சா.செள ஏதோ பழம் தின்று கொட்டை போட்ட வித்வான் என்று நினைத்து விடாதீர்கள்... எல்லா வித்வான்களுக்கும் மேலான வித்வான் அவர் – அதாவது ரசிக மகாராஜா!

"தப்பித்தவறி சுருதி இருந்தால், தாளம் சபாவோட சைட் கேட் வழியா ஓடிப் போயிடும். சரி சுருதியும் தாளக் கட்டும் எப்படியோ கை வந்துடுத்துன்னா கூடவே கொனஷ்டையுமில்லே வந்து உட்கார்ந்துக்கும்!..." – புலம்பிக் கொண்டே போனார் செளந்தர்ராஜன்.



• கே.வி.என்.

"ஏதோ பூர்வ ஜன்ம புண்யத்துல சாரீரமும் (குரல்) வாய்ச்சு, கோணங்கியில்லாத நல்ல சங்கீதமும் அமைஞ்சுடுத்துன்னு வையும்... மனுஷன் பாட்டைக் கேட்க கூட்டமே வராது. அப்படியே ஞானஸ்தன் அஞ்ஞானஸ்தன்னு வித்தியாசமில்லாம கூட்டத்தையும் வரவழைச்சுட்டான்னா அப்புறம் ஆசாமியைக் கட்டிப் புடிக்க முடியுமோ? தலையில் கனம் ஏறி உடம்புல சில்க் துணி ஏறி வேண்டாத பழக்கம் சகவாசம்னு விழுந்து மாட்டிப்பான்..."

நல்லதே இவர் வாயில் வராதா? என்று நினைத்த நேரத்தில் கிளைமாக்ஸைத் தொட்டார் செளந்தர்ராஜன்:

"அப்படி மாட்டிக்காத உசந்த வித்வானை விட்டு வைக்க ஆண்டவனுக்கே பொறுக்காது; அல்பாயுசுலே அழைச்சுண்டு போயிடுவான்!"

சாமிநாதபுரம் செளந்தரராஜனின் சகல அவநம்பிக்கைகளையும் தவிடுபொடியாக்கிய ஒரு வித்வான் இருந்தார் என்றால் அவர் ஏப்ரல் 1 அன்று, தமது 78ஆவது வயதில் காலமான பாலக்காடு கே.வி. நாராயணசாமிதான்!

'என்னதான் இல்லை இவர் பாட்டில்?' என்று கேட்க வைத்தவர். அனேக சந்தர்ப்பங்களில் அப்படிப்பட்ட கேள்விகளெல்லாம் கூட நம் மனத்திலே ஏழாதபடி நாதச்சிறைக்குள் நம்மை வசப்படுத்தி வைத்தவர்.

"வருகலாமோ ஐயா!" என்று கோபாலகிருஷ்ண பாரதியின் நந்தனார் சரித்திர கீர்த்தனையை கே.வி.என். பாடினால் ரசிகர்கள் கைதட்ட முடியாது! ஏன், கண்ணிலே வழியும் நீரைத் துடைத்துக் கொள்ள கர்சீஃபையோ முந்தானையையோ கையையோகூட அசைக்க முடியாது. அப்படியே உருகி ஸ்தம்பித்துப் போய் பேசாமல் இருக்க வேண்டியதுதான். அவர் அடுத்த பாட்டை அனாயாசமாக எடுத்துவிட, நமக்குத்தான் புயல் மாதிரி பெருமூச்சு வருகிறதோ என்று பார்த்தால், அக்கம் பக்கத்து இருக்கைக்காரர்களும் சேர்ந்து விடுகிற பெருமூச்சில் ஓர் உணர்ச்சிப் புயலே மையம் கொண்டு விடும்!

# சொக்க வைத்த தீரர்!

"எங்களை உருக்கிவிட்டு நீங்கள் மட்டும் உருகாமல் பாடுகிறீர்களே!" என்று பல வருடங்களுக்கு முன் கே.வி.என்னைக் கேட்டபோது சொன்னார்: "அங்க உட்கார்ந்து கேவப்படாது கேட்டியா!" அதே கே.வி.என்தான் தமது 78வது வயதில் நாரத கான சபாவில் சிந்து பைரவி விருத்தம் பாடி முடித்து, உணர்ச்சிப் பெருக்கில் கண்களைத் துடைத்துக் கொண்டார். இசை, கலைஞனை வெற்றி கொண்ட அழகான கணம் அது! கலையிடம் பணிந்த நிறைவில் விடைபெற்றிருக்கிறார் கே.வி.என்.



'சொககா ம்ருதங்க தாளமு' என்ற கீர்த்தனையில் தியாகய்யர் கேட்பார்,

"சொகுசான இசையினால் ராமனை சொக்க வைத்த தீரர் எவரேனும் உண்டோ...?" என்று.

'உண்டு! அவர்தான் கே.வி.என்' என்று சரித்திரம் பதில் சொல்லும்.

தும்புரு

எந்த பியூட்டி பார்லருக்கும் போகமலேயே, ப்ளீச்சிங், கோல்டு ஃபேஷியல், எலக்ட்ரோ மசாஜ் என செலவு செய்யாமலேயே, 'தகதக'வென ஜொலிக்கும் தங்கமேனியை நீங்கள் பெற முடியும். ஆனால் ஒரு கன்டிஷன்! நீங்கள் தினமும் பொன்னாங் கண்ணிக் கீரையை உணவில் சேர்த்துக் கொள்பவராக இருக்க வேண்டும். 'பொன் ஆம் காண் நீ' என்பதன் சுருக்கமே பொன்னாங்கண்ணி என்றாகி விட்டது! அடடா! என்ன பொருத்தம்!

வைட்டமின் 'சி', பாஸ்பரஸ், புரதம், இரும்புச்சத்து என தன்னுள்ளே கொண்டிருக்கும் சஞ்சீவி மூலிகை. சகலமும் சத்து மயம்!

'உள் சூடு' என்று சொல்லக் கேட்டிருப்பீர்கள். என்னவோ சிம்பிள் பிரச்னை என நினைத்து சுகமாக இருந்துவிடாதீர்கள். 'உள்சூடு' என்பது உடல் ஆரோக்கியத்துக்கே வேட்டு வைத்து விடும் அளவு டேஞ்சர் பார்ட்டி!

இந்தப் பிரச்னை இருப்பவர்கள், பொன்னாங் கண்ணியை ஒரு கரண்டியாவது தினமும் உணவில் சேர்த்துக் கொள்ள வேண்டும். இதனால் உடல் குளிர்ச்சி அடைந்து, 'ஓவர் ஆல் ஆரோக்கிய சாலி' என்ற பட்டம் உங்களுக்குக் கிடைக்கும்.

மூல நோய் எந்த நிலையிலிருந்தாலும் பொன்னாங்கண்ணிக் கீரையை, வெண்ணெயில் வதக்கிச் சாப்பிட மூலநோய்க்கு முடிவு கட்டிவிடலாம்.



கண் சம்பந்தப்பட்ட எந்தவித நோய் உங்களைத் தாக்கியிருந்தா லும் நீங்கள் 'பொன்னாங் கண்ணியே துணை' என்றிருந்தால், நிச்சயம் பூரண நலம் பெறலாம்.

பொன்னாங்கண்ணிக் கீரையை வதக்கி, தாங்கக் கூடிய சூட்டில் கண்கள் மீது வைத்துக் கட்டுப்போடுங்கள். கண் வலி, கண் சிவப்பு, கண் கட்டி, எரிச்சல் என எல்லா நோய்களும் பறந்தோட கண்களும் குளிர்ச்சி பெற்று, மலர்ச்சியோடு இருக்கும்.

பொன்னாங்கண்ணிக்

ராஜம் முரளி

# சர்வம் சக்தி மயம்!

கீரையைப் பொடியாக நறுக்கவும். ஒரு டேபிள் ஸ்பூன் நெய் விட்டு வதக்கவும். உப்பு, மிளகு சேர்த்து துவையலாக அரைக்கவும். புளியை ஒரு போதும் சேர்க்க வேண்டாம். இந்தத் துவையலைத் தினமும் சுடு சோற்றில் பிசைந்து சாப்பிடுங்கள். ஒரு மண்டலம் சாப்பிட்டு வந்தாலே, உடல் நல்ல மெருகேறும். பொன்னிறமடையும். தேக பலவீனமிருக்காது.



பாசிப்பருப்பைக் குழைய வேக வைத்து, அதில் பொன்னாங்கண்ணி தழையைக் கூட்டி, வேக வைக்கவும். சிறிது மிளகுத்தூள், இஞ்சி ஒரு துண்டு, ஒரு பல் பூண்டு சேர்த்து உப்பு கூட்டி நன்றாக மசிக்கவும். இந்தக் கீரை கடையல், ஊளைச் சதையைக் குறைக்க உதவும் அருமருந்து. ஆறே வாரங்களில் சிவப்பழகு மட்டுமல்ல, சிக்கென்று அழகும் உங்களுடையதே!

பொன்னாங்கண்ணிக் கீரையைக் கல் உரலிலிட்டு அதனுடன் இரண்டு பங்கு கறுப்பு எள் இட்டு, மைய ஆட்டி சாறு பிழிந்து கொள்ளுங்கள். அதனுடன் இரண்டு பங்கு தண்ணீர் விட்டு, இரும்புச் சட்டியிலிட்டு, சிறு தீயில் காய்ச்சவும். 'பொன்னாங்கண்ணி தைலம்' தயார். இத் தைலத்தைத் தலையில் தேய்த்துக் கொண்டால் மூலச்சூடு, கை கால் எரிச்சல், உடல் அசதி, கண் எரிச்சல், மங்கிய பார்வை, மயிர் சொட்டை என குறைந்தது அரை டஜன் வியாதிகளாவது விடைபெறும்.

'பொன்னாங்கண்ணி கூந்தல் தைலம்' கடைகளில் கிடைக்கிறது. என்றாலும் நீங்களும் வீட்டிலேயே தயாரிக்கலாம். அரைப்பங்குப் பொன்னாங்கண்ணி சாறு என்றால் கால் பங்கு எலுமிச்சை சாறு, கால் பங்கு நெல்லிச் சாறு எடுத்துக்கொண்டு, அரைப்பங்கு நல்லெண்ணெயில் காய்ச்சவும். தைலம் பிரிந்து மிதந்ததும் எடுத்து பத்திரப்படுத்தவும். அருமையான கூந்தல் வளம் தரும் நலமிக்க தைலம் தயார்!

ஒரு பிடி பொன்னாங்கண்ணி கீரையைப் பச்சையாகவே எடுத்துச் சாப்பிட, வாய் ரணம், தொண்டைப்புண் ஆறும். வாய் நாற்றமுமிருக்காது. சுவாசப் புத்துணர்ச்சி உங்களுக்கே!

படங்கள்: ஸ்ரீஹரி

● திருப்பூர் கிருஷ்ணன்

# வித்தியாசமாக ஒரு மாநாடு...

கதிருக்கு ஆசிரியரானார் நா.பா. தாம் கதிர் ஆசிரியர் பொறுப்பை ஏற்றிருக்கும் விவரத்தை வாசகர்களுக்கு ஒரு கடிதம் போல எழுதி, கதிரில் வெளியிடக் கொடுத்தார். அச்சுக் கோத்தது போலான அவரின் முத்துமுத்தான கையெழுத்தைப் பார்த்து எனக்கு ஓர் ஆசை எழுந்தது. இதை அச்சுக் கோப்பானேன்? அப்படியே அவர் கையெழுத்திலேயே வெளியிட்டால் என்ன?

நா.பா.விடம் அனுமதி கோரிப் பெற்றேன். கதிர் ஓவியர் தாமரை, சிறப்பாக லே அவுட் செய்ய, வாசகர்களுக்கு நா.பா. எழுதிய கடிதம் அவர் கையெழுத்திலேயே வெளியாயிற்று. கதிரில் நா.பா. என்னென்ன புதுமைகள் செய்யப்போகிறார் என்றறிய வாசக உலகம் ஆவலோடு காத்திருந்த காலம் அது.

'எல்லோரது கவனமும் கதிரின் பக்கம் திரும்புகிற மாதிரி ஏதாவது செய்ய வேண்டும். சிறுகதைப் போட்டி, கவிதைப் போட்டி இப்படி ஏதாவது நடத்தலாமா?' என்று கேட்டார் நா.பா.

'அவசியம் நடத்தலாம். இவற்றை நடத்துவதோடுகூட, வேறு ஏதாவது புதுமையான ஒன்றைச் செய்தால் நன்றாயிருக்கும்' என்றேன் நான்.

ஏற்கெனவே தீர்மானம் செய்து வைத்திருந்த கருத்தொன்றுக்கு, நான் சந்தர்ப்பம் பார்த்து அடித்தளம் அமைக்க விரும்பினேன்.

'சொல்லுங்கள். வேறு என்ன செய்யலாம்?' என்று கேட்டார் நா.பா.

'கவிஞர்கள், சிறுகதை ஆசிரியர்கள் போன்றோரை எல்லோரும் கொண்டாடுகிறார்கள். இவர்கள் கொண்டாடப்பட வேண்டியவர்கள் என்பதில் சந்தேகமில்லை. ஆனால் துணுக்கு எழுத்தாளர்கள் என்ன பாவம் செய்தார்கள்? அவர்களை யாரும் அங்கீகரிப்பதே இல்லையே? இன்றைய துணுக்கு எழுத்தாளர்கள் ஒட்டு மொத்தமாக வேலை நிறுத்தம் செய்தால் எந்தப் பத்திரிகையையாவது கொண்டு வர இயலுமா! எல்லா வார, மாத இதழ்களுக்கும் துணுக்குகள் தானே ஆதாரம்! வாசகர் கடிதம் எழுதுபவர்களையும் இவர்களோடு சேர்த்துக் கொள்ள வேண்டும். கடிதம் எழுதும் வாசகர்களால் தானே பத்திரிகையில் வெளிவரும் எந்தப் படைப்பின் பாதிப்பையும் நாம் உணர முடிகிறது? துணுக்குப் போட்டி நடத்தலாம்தான். ஆனால் அத்தகைய போட்டியால், பரிசு பெறும் சில துணுக்கு எழுத்தாளர்கள்தான் சந்தோஷப்படுவார்கள். எல்லாத் துணுக்கு எழுத்தாளர்களுக்கும் மகிழ்ச்சி கிட்டாது. நாம் துணுக்கு எழுத்தாளர் மாநாடு நடத்தினால் என்ன?'

• ஏ.என்.எஸ்.



நா.பா.வுக்கு என் கருத்து சட்டென்று பிடித்துவிட்டது. நானும் நா.பா.வும் சேர்ந்தே நிறைய எழுத்தாளர் மாநாடுகளில் பங்கேற்றிருக்கிறோம். அவற்றில் ஆண்டுதோறும் எஸ்.வி.எஸ்.ஸை ஒருங்கிணைப்பாளராகக் கொண்டு நடைபெற்ற ஆதர்ஸ் கில்ட் மாநாடுகள் வாடிக்கையானவை. நீல பத்மநாபன், ஆதவன், தில்லி ராஜாமணி, தம்பி சீனிவாசன், வெங்கட்சாமிநாதன் என்று பல எழுத்தாளர்களை நான் முதலில் சந்தித்தது அந்த மாநாடுகளில்தான். முதுபெரும் எழுத்தாளர் அமரர் சிவபாதசுந்தரம் மிகப் பெரிய அளவில் எழுத்தாளர் மாநாடுகளை நடத்தும் ஆற்றல் பெற்றவர். அவர் மனைவி திருமதி ஞானதீபம், தனியொருவராக நின்று நூற்றுக்கணக்கான எழுத்தாளர்களுக்கு விருந்து படைக்கும் சாமர்த்தியம் உடையவர். இவையெல்லாம் நினைவில் ஓடின.

நா.பா. துணுக்கு எழுத்தாளர் மாநாட்டுக்கான முன்வரைவுத் திட்டத்தைத் தயார் செய்யச் சொன்னார். எக்ஸ்பிரஸ் எஸ்டேட் வளாகத்திலேயே 'ஒரு நாள் மாநாடு' நடத்த முடிவாயிற்று. சாப்பாடு, போக்குவரத்து இன்னபிற அம்சங்கள் பரிசீலிக்கப்பட்டன. எல்லாத் துணுக்கு எழுத்தாளர்களுக்கும் அழைப்புக் கடிதம் அனுப்பப்பட்டது. கதிரில் முழுப் பக்க விளம்பரமும் செய்யப்பட்டது.

மாநாட்டுக்கு ஒரு தலைவர் வேண்டுமே?

'இன்றைய எண்ணற்ற துணுக்குகளின் நாயகர் யாரோ, யார் பேச்சிலிருந்து ஏராளமான சிலேடைத் துணுக்குகள் கிடைக்கிறதோ அவரையே தலைவராக அழைக்கலாம்' என்றேன் நான்.

• நீலபத்மநாபன்



'அதுதான் சரி' என்ற நா.பா. என்னையும் அழைத்துக் கொண்டு கி.வா.ஜ. வீட்டுக்குப் புறப்பட்டார். கி.வா.ஜ. மகிழ்ச்சியோடு சம்மதித்தார்.

கி.வா.ஜ. வீட்டு மர சோபாவின் ஒரு மூலை இலேசாய்க் கிழிந்திருந்தது. தற்செயலாக என் பார்வை அதன்மேல் பட்டது. என் பார்வையின் திசையைக் கவனித்துவிட்டார் கி.வா.ஜ. 'என்ன பார்க்கிறீர்கள்? உயிருள்ள மரம் என்றால் நாளானால் காய் தரும், கனி தரும். உயிரில்லாத மர சோபா நாளானால் பிஞ்சு விடும்!' என்றார். நான் திரும்பி வரும்போது, 'கி.வா.ஜ. என்ன அழகாகப் பேசுகிறார்!' என்று வியந்தேன் நா.பா.விடம். 'நாமெல்லாம் கலைமகளின் மாணவர்கள்தான். ஆனால் அவர் கலைமகளுக்கே ஆசிரியர் அல்லவா!' என்றார் நா.பா! அகிலன், நா.பா. அநுத்தமா, ராஜம் கிருஷ்ணன் போன்றோருக்கு கி.வா.ஜா. மேல் அளவு கடந்த மதிப்பும் மரியாதையும் உண்டு.

மாநாட்டுக்கு வந்த கி.வா.ஜ., அவரின் நெருங்கிய நண்பரான தினமணி ஆசிரியர் ஏ.என். சிவராமனைச் சந்திக்க விரும்பினார். அழைத்துச் சென்றேன். அப்போது இலேசாய்க் கி.வா.ஜ.வுக்கு இருமல் இருந்தது.

"நீங்கள் பேச்சாளர் ஆயிற்றே. குரலைக் கவனித்துக் கொள்ள வேண்டாமா? என்ன இப்படி இருமல்?" என்று அன்போடு விசாரித்தார் ஏ.என்.எஸ்.

"இரு மல் எங்கே? நான், நீங்கள், நா.பா., திருப்பூர் கிருஷ்ணன் எல்லோரும் மேலே கதர்ச் சட்டை, இடுப்பில் கதர் வேட்டி என்று இரு கதர் அல்லவா கட்டுகிறோம்! மல் கிடையாதே!" என்று ஜோக் 'கடித்தார்' கி.வா.ஜ!

"உங்கள் 'தொண்டை' பற்றிச் சொன்னேன்" என்றார் ஏ.என்.எஸ். சிரித்தவாறு.

"என் தொண்டைப் பற்றியா சொன்னீர்கள்! நான் என்ன அப்படிப் பிரமாதத் தொண்டு செய்துவிட்டேன்!" என்றார் கி.வா.ஜ.!



''என் மனைவிக்குத் 'தொடர் பைத்தியம்' முத்திடுச்சு.''

''என்னாச்சு?''

''ஒரு தொடருல கதாநாயகியோட அப்பா இறந்திட்டாராம். போய் துக்கம் விசாரிச்சுட்டு வாங்கன்னு உயிரை எடுக்கிறா!''



''என்னங்க வக்கீல்வீட்டு கல்யாணத்துக்கு போயிட்டு மொய் வைக்காம வந்தீங்களா?''

''ஆமாண்டி, சாப்பிட்டுட்டு நைசா வந்திட்டேன். அதுக்கென்ன இப்போ?''

''சாப்பிட்டுட்டு மொய் வைக்காம வந்திட்டீங்கன்னு வக்கீல் நோட்டீஸ் வந்திருக்கு!''

– வி. சகிதா முருகன்

''என் வீட்டுக்குச் சாப்பிட வரும்போது என் கணவரை கோபத்தில் ரெண்டு வார்த்தைச் சொல்லிட்டேன்!''

''உடனே ஹோட்டலுக்குச் சாப்பிட போயிட்டாரா?''

''இல்லை. கோயிலுக்கு!''

– கொடநகர் து. பூவராகன்



"உங்கள் வாய்ஸ் இன்று சரியில்லை என்று சொன்னேன்!' என்றார் ஏ.என்.எஸ்.

"என் வாய்ஸ் என்றுதான் சரியாக இருந்தது! நீங்கள்தான் மேலிடத்திலெல்லாம் வாய்ஸ் உள்ளவர். இன்று இருமல் காரணமாக என் வாய்ஸ் மேலிடம் போனால் பிசிறு தட்டுகிறது!' என்றார் கி.வா.ஜ.

"அடடா! உங்கள் குரல் பற்றியல்லவா கூறினேன்!' என்றார் ஏ.என்.எஸ்.

"என் குரல் சரியில்லாவிட்டால்தான் என்ன! எப்போதும் எனக்காகக் குரல் கொடுக்க நீங்கள், நா.பா. எல்லோரும் தான் இருக்கிறீர்களே!" என்றார் கி.வா.ஜ.

கி.வா.ஜ. வந்ததைக் கண்டு ஏ.என்.எஸ். அறையில் குழுமியிருந்த தினமணி ஊழியர்கள், இந்த உரையாடலைக் கேட்டு மகிழ்ச்சியில் கிளுகிளுத்தார்கள்.

துணுக்கு எழுத்தாளர் மாநாடு, நாள் முழுவதும் விமரிசையாக நடைபெற்றது. நெல்லை ஆ. கணபதி, ரா.பா. சாரதி என்று பலர் சிறப்பாகப் பேசினார்கள். சினிமாத் துணுக்கு எழுதமாட்டேன் என்ற தீர்மானத்தோடு இலக்கிய, ஆன்மிகத் துணுக்குகள் மட்டுமே எழுதி வரும் சங்கரிபுத்திரன், பலரது உள்ளங்களைக் கவரும் வகையில் அனுபவ உரை ஆற்றினார். துணுக்கு எழுத்தாளர் சங்கம் அமைக்கப்பட்டு, அதன் தலைவராக சிறுமுகை கதிரேசன் தேர்ந்தெடுக்கப்பட்டார். கி.வா.ஜ. தம் உரையில் சொன்னார்.

"நான் சொன்ன பல சிலேடைகளைத் துணுக்கு எழுத்தாளர்கள் பத்திரிகைகளுக்கு எழுதி அனுப்புகிறார்கள். சில நேரங்களில் நான் சொல்லாத சில சிலேடைகளைக் கூட, நான் சொன்னதாக எழுதுகிறார்கள். ஒன்றைச் சொல்ல வேண்டும். நான் சொன்ன சிலேடைகளைவிட, நான் சொன்னதாக இடம் பெறும் கற்பனைச் சிலேடைகள் மிகச் சிறப்பாக இருக்கின்றன. எனவே வருங்காலத்தில் சிலேடை இலக்கியம் தொடர்ந்து தழைக்கும் என்பது என் நம்பிக்கை!"

துணுக்கு எழுத்தாளர் மாநாடு, வெற்றிகரமாக நடந்து முடிந்தபோது ரொம்ப நாளாகச் செய்யாமலிருந்த ஒரு கடமையை மனப்பூர்வமாகச் செய்து முடித்த நிறைவு ஏற்பட்டது எனக்கு. ○



# ஆதிவாசி மருத்துவமனை!

நீலகிரியை அடுத்த கூடலூரில் ஆதிவாசிகளுக்காகவே ஒரு மருத்துவமனை இயங்கி வருகிறது. அக்கார்ட் என்ற தொண்டு நிறுவனம் 1990 முதல் இதை நடத்துகிறது.

மலைவாசிகளின் நோய்களுக்கு அலோபதி மருந்துகள் தவிர, மலைப்பகுதிகளில் கிடைக்கும் பாரம்பரிய மூலிகை மருந்துகளையும் இங்கே கொடுக்கிறார்கள்.

"ஆஸ்த்துமாவுக்கும், சரும நோய்களுக்கும் இந்தப் பாரம்பரிய மருந்து வகைகள் பிரமாதமாகப் பலன்கள் தருகின்றன" என்கிறார் மருத்துவமனையின் டாக்டர் நந்தகுமார் மேனன்.

நீலகிரியில் பலவகை மலைச்சாதியினர் இருந்தாலும், முளக்குறும்பர்கள் மட்டுமே இந்தப் பாரம்பரிய மருந்துகளை உபயோகிக்கின்றனர். காரணம், இவர்கள் ஒருபோதும் அலோபதி மருந்துகளை உட்கொள்ளுவதில்லையாம்!

இந்த மலைச்சாதி இளைஞர்களை, பயிற்சி கொடுத்துச் சுகாதாரப் பணிகளில் அமர்த்துகிறது இந்த மருத்துவமனை. இதனால் மலைச்சாதியினர் சுகாதார விஷயங்கள் பலவற்றை அறிந்து கொள்ள முடிகிறது. இந்தப் பயிற்சி பெற்ற மலைச்சாதி இளைஞர்களால் மலைவாழ் கிராம மக்களிடம் சென்று சுகாதாரச் செய்திகளைப் பரப்ப முடிகிறது. அவசர சிகிச்சைத் தேவைப்பட்டால் இவர்கள் உடனே உதவுகிறார்கள். சில தவறான நம்பிக்கைகளையும் பழக்கங்களையும் களைய முடிகிறது. உதாரணமாக, வயிற்றுப்போக்கு வந்தால் தண்ணீரே குடிக்க மாட்டார்களாம் மலைச்சாதியினர். 'இது தவறு, உடம்பில் திரவம் வற்றி ஆபத்தாகிவிடும்' என்று இவர்கள் சொன்ன பிறகு கேட்க ஆரம்பித்திருக்கிறார்களாம்!

குடும்பக் கட்டுப்பாட்டுப் பிரசாரத்தில், குழந்தையின் ஆரோக்கியம் முக்கியமாகக் காப்பாற்றப்பட வேண்டும் என்பதையும் எடுத்துச் சொல்லி வருகிறார்கள்.

— எஸ்.வி.என்.

நன்றி : 'த வேர்ட்'




## வட்ட மேஜை

# மூன்று முடிச்சுகள்!

✉ "கூலிப்படையின் பிடியில் சென்னை?" கட்டுரை படித்தேன். சென்னை மட்டுமின்றி, தமிழகத்தின் பிற நகர்களிலும் கூலிப் படையினரின் அட்டகாசங்கள் நடந்து கொண்டிருப்பது நிதர்சனமான உண்மை. இத்தகைய சூழ்நிலையில் அரசு செய்ய வேண்டிய முக்கியமான கடமைகள் இரண்டு. ஒன்று, இப்போதுள்ள ரௌடிகளை, சட்டத்தின் பிடியில் சிக்க வைத்து, அவர்களுக்குக் கடுமையான தண்டனை கொடுக்க வேண்டும். மற்றொன்று புதிய ரௌடிகள் தோன்றா வண்ணம், இன்றைய இளைஞர்களுக்கு, பாதுகாப்பு உணர்வு கொடுத்து அவர்கள் நல்ல முறையில் உருவாவதற்கானச் சூழ்நிலையை ஏற்படுத்த வேண்டும். அரசு இதைச் செய்தே ஆக வேண்டும்.

மதுரை, என்.பாலகிருஷ்ணன்

✉ தி.மு.க. அமைச்சர்கள் (முன்னாள்) இல்ல ரெய்டுகள் தொடர்பாக கருணாநிதி விடுத்திருக்கும் அறிக்கை, ஒட்டுமொத்த அரசியல்வாதிகள் மீதே மக்களுக்கு வெறுப்பை உண்டாக்கியிருக்கிறது. யாராகயிருந்தாலும் சட்டம் தன் கடமையைச் செய்யும் என்ற மரபாவது அரசியல்வாதிகளை நெறிப்படுத்தட்டும்.

மதுரை, பெ.பொன்ராஜ பாண்டி

✉ பிறந்தது முதல் இறக்கும்வரை யாரையாவது சார்ந்தே வாழ வேண்டிய சூழ்நிலைக்குப் பெண் தள்ளப்படுவதால் அவள் மனம் எப்படி வருந்தும் என்பதை 'விடுதலை' சிறுகதை உணர்த்திற்று.

திருச்சி, உஷா முத்துராமன்

✉ சிலர் மொட்டைத் தலைக்கும் முழங்காலுக்கும்தான் முடிச்சு போடுவார்கள். ஆனால் உதித்ராஜ், தான் மொட்டை போட்டுக் கொண்டு இராமருக்கும், பாபருக்கும், புத்தருக்குமாக சேர்த்து முடிச்சுகள் போடுவது வேடிக்கையாக இருக்கிறது! அட ராமா!

வேலூர், லஷ்மி ஷங்கர்

✉ திருப்பூர் கிருஷ்ணனின் பரமாச்சாரியார் பற்றிய கட்டுரையைக் கண்டதும் மெய் சிலிர்த்தது. அதில் பரமாச்சாரியார் அமரராகி விட்டார். காலமானார் போன்ற சொற்களைப் பயன்படுத்தியது மாபெரும் தவறு. முக்தியடைந்தார் என்று கூறுவதே சாலச் சிறந்தது.

சிதம்பரம், ஸ்ரீவித்யா காளிதாஸ்

✉ தராசு பதிலில் குழம்பம் நேருவதைப் பார்த்தால் இவரும் 'குஜராத்' ஆகிவிட்டாரோ? குஜராத் கலவரம்-குஜராத் பூகம்பம் பற்றிய பதிலில் முன் பின்னாக விடை வந்திருப்பதைக் கவனித்திருக்கலாமே!

தஞ்சாவூர், கிருஷ்ணய்யர்

**Printed and published by K. Rajendran at the Bharathan Press on behalf of Bharathan Publications Private Limited. Editor : Mrs. Seetha Ravi**
**Address : 47, Jawaharlal Nehru Road, Ekkaduthangal, Chennai - 600 097.**
**Telephones : Editorial : 2345624; Circulation Manager, Subscription and Advertisement : 2345623; Chief Administrative Officer : 2345622; Fax: 2345621.**
**Annual Subscription : India : Rs. 330/-; Overseas : Rs. 2000/- (Air Mail)**
**Half Yearly Subscription : India : Rs. 165/-; Overseas : Rs. 1000/- (Air Mail)**

